# பண்டைத்தமிழரின் புழங்குபொருட்கள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர் :

**மு. பஞ்சவர்ணம்**

மேற்பார்வையாளர் :

முனைவர். **இரா. பாலசுப்பிரமணியன்**



**தமிழ்த் துறை**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
காரைக்குடி - 630 003.

ஆகஸ்ட் - 2005

முனைவர். இரா. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எச்.டி., டி.ஜி.டி.,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 31.08.05

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

''பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள்'' எனும் தலைப்பில் திருமதி. மு. பஞ்சவர்ணம் அவர்கள் முனைவர் (பி.எச்.டி.) பட்டத்திற்காகச் செய்த இவ்வாய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த் துறையில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்
(மேற்பார்வையாளர்)

மு. பஞ்சவர்ணம், எம்.ஏ., எம்.ஃ.பில்.,
பி.எச்.டி. ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 31-08-05

## ஆய்வாளர் உறுதிமொழி

"பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள்" எனும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன்வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

(மு. பஞ்சவர்ணம்)
ஆய்வாளர்.

உறுதிக் கையொப்பம்

முனைவர் இரா. பாலசுப்பிரமணியன்,
எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி., டி.ஜி.டி.,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் ஆய்வு நிகழ்த்த அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தாருக்கும், முன்னாள் தமிழ்த்துறைப் பேராசிரியர் தே. சொக்கலிங்கம் அவர்களுக்கும் நன்றி.

ஆய்வுத் தலைப்பைத் தெரிவுசெய்து ஆய்வு நெறியாளராக இருந்து வழிகாட்டி, ஆய்வில் எழுந்த ஐயங்களை நீக்கி, ஆய்வைச் செம்மையுறச் செய்த ஆய்வு நெறியாளர் முனைவர் இரா. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடப்பாடுடையேன்.

ஆய்விற்குப் பலவகைகளில் துணைபுரிந்த அழகப்பா பல்கலைக் கழகத்தின் தமிழத்துறைப் பேராசிரியர்கள் முனைவர் மு. பாண்டி, தமிழ்த்துறைத் தலைவர் (பொறுப்பு) முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு. இராசாராம், திரு. மு. நடேசன் ஆகியோருக்கும் என் நன்றிகள்.

இன்முகம் குறையாமல் ஆய்வேடு செம்மை பெறத் தகுந்த ஆலோசனை நல்கிய முனைவர் க. காந்தி, பேரா. ம. கார்மேகம், திருமதி. கே. கண்ணாத்தாள் ஆகியோர்களுக்கும் நன்றி. ஆய்விற்குப் பல்லாற்றானும் உதவி நல்கிய முனைவர் இரா. கருணாநிதி,

செ.சு.ந. சந்திரசேகரன், க. சொல்லேருழவன், சோ. முத்தமிழ்ச்செல்வன், பி. மாலதி, இரா. ரேணுகாகாந்தி, கரு. சமத்துவம், பசு. செல்வமீனா, இர. தாமரைச்செல்வி, சி. சிதம்பரம், சி. பரமேஸ்வரி, கரு. மணிமேகலை, க. அமுதா மற்றும் ஆய்வாள நண்பர்களுக்கும் நன்றிகள்.

எனது ஆய்வுப் பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து ஆதரவளிக்கின்ற எனது கணவர் திரு. பெ. சிவராமன் அவர்களுக்கும் நன்றி.

எனது கல்வி வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் உதவிய தாய் தந்தையருக்கும் அண்ணன், அண்ணி மற்றும் குடும்பத்தினர் அனைவருக்கும் நன்றி.

-----

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. அகம் | - | அகநானூறு |
| 2. உ.ஆ. | - | உரையாசிரியர் |
| 3. ஐங் | - | ஐங்குறுநூறு |
| 4. கலி | - | கலித்தொகை |
| 5. குறள் | - | திருக்குறள் |
| 6. குறி | - | குறிஞ்சிப்பாட்டு |
| 7. குறு | - | குறுந்தொகை |
| 8. சிறு | - | சிறுபாணாற்றுப்படை |
| 9. திரு | - | திருமுருகாற்றுப்படை |
| 10. தொல். நூ | - | தொல்காப்பியம் நூற்பா |
| 11. தொல். பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| 12. நற் | - | நற்றிணை |
| 13. நெடு | - | நெடுநல்வாடை |
| 14. ப | - | பக்கம் |
| 15. பக். | - | பக்கங்கள் |
| 16. பட் | - | பட்டினப்பாலை |
| 17. பதி | - | பதிற்றுப்பத்து |
| 18. பரி | - | பரிபாடல் |
| 19. புறம் | - | புறநானூறு |
| 20. பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| 21. பொரு | - | பொருநராற்றுப்படை |
| 22. மது | - | மதுரைக்காஞ்சி |
| 23. மலை | - | மலைபடுகடாம் |
| 24. மு.ப. | - | முதற்பதிப்பு |
| 25. முல்லை | - | முல்லைப்பாட்டு |
| 26. வி.உ. | - | விளக்கவுரை |
| 27. P | - | Page |

# பொருளடக்கம்

உலகின் தொன்மையான மொழிகளுள் தமிழும் ஒன்று. தொன்மையான பல மொழிகள் இன்று வாழும் மொழியாக இல்லை. ஆனால் தமிழ் வாழும் மொழியாகவும் வளரும் மொழியாகவும் விளங்குவது கருதத்தக்கதாகும்.

தொன்மைக் காலத்திலிருந்து இன்றைய காலம் வரை தமிழ் இடையறாத இலக்கியப் பாரம்பரியத்தைப் பெற்றுள்ள நிலையை அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். தமிழின் இலக்கியப் பாரம்பரியத்தில் சங்க இலக்கியங்களுக்குச் சிறப்பான இடம் உண்டு.

பண்டைத் தமிழகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த மக்களின் சிந்தனை ஓட்டத்தில் பிறந்தவை சங்க இலக்கியங்கள் ஆகும். சங்க இலக்கியங்கள் சின்னஞ்சிறு கவிதைகளாக இருந்தாலும் மிகச் செம்மாந்த இலக்கியங்களாகத் திகழ்கின்றன.

"சின்னஞ்சிறு கவிதைகளில் தான் செம்மையும் சிறப்பும் அடங்கிக் கிடக்கின்றன என்பார் கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த கேலிமேச்சஸ் (305-204 B.C)"[1] என்பர். இக்கூற்றுச் சங்க இலக்கியக் கவிதைகளுக்கும் பொருந்தும் எனக் கூறலாம். மேலும், "சின்னஞ்சிறு உருவம், செம்மாந்த நிலை, அழகான உருவம், அப்பழுக்கில்லாத அருமையான ஆக்கம் (Slender, Small, Delicate, Finely Spurn) போன்ற தொடர்கள் இவர்களின் தாரகமந்திரமாக இருந்தன"[2] என்கிற சிந்தனையில் சின்னஞ்சிறு கவிதைகளின் செம்மாந்தநிலை சிறப்பிக்கப் பெறுவதைக் காணலாம்.

கவிதைகள் சமுதாயக்களத்தில் இருந்து பிறக்கின்றன. அவ்வகையில் சமுதாய வாழ்வைப் பிரதிபலிக்கும் இயல்பின எனவும் மதிப்பிடலாம். அம்முறையில் சங்ககாலக் கவிதைகள் பண்டைத்தமிழரின் சமுதாய வாழ்வைப்

பிரதிபலிக்கும் வகையில் உள்ளன. தமிழில் சங்க இலக்கிய ஆய்வுக்களம் விரிந்த ஆய்வுப் பரப்பைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சங்க இலக்கிய ஆய்வுக் களத்தில் ஆய்வுகள் பல்கிப் பெருகியிருந்தாலும் பல ஆய்வுகள் நிகழ்த்துவதற்கான வாய்ப்புக்களும் மிகுந்திருப்பது இங்குக் கருத்திற்குரியதாகும். இக்கருத்திலிருந்து சங்க இலக்கியங்களின் செவ்வியல் தன்மை சிறந்திருக்கும் நிலை மெய்ப்பிக்கப் பெறுவதாகக் கருதலாம்.

சங்க இலக்கியங்கள் உலக இலக்கியங்களின் வரிசையில் வைத்து எண்ணிப் பார்ப்பதற்கு அதன் செவ்வியல் பண்புகளே தலைமைக் காரணமெனலாம். "சங்க இலக்கியங்களின் பல்வேறு பண்புகளை அடிப்படையாக வைத்து (பேராசிரியரையொட்டி) அவற்றைச் சான்றோர் செய்யுள் (KP 1968 : 92) என்றும் செவ்வியல் இலக்கியம் (Sivaraja Pillal, 1985) என்றும் பழமையான, தொன்மையான இலக்கியம் என்றும் தமிழின் அகஸ்டஸ் கால இலக்கியம் (ஜான் சாமுவேல்) (1995, U.25) எனப் பலபடக் கூறுவதை"[3] அறிஞர்கள் சுட்டிக்காட்டிச் சங்க இலக்கியத்தின் செவ்வியல் மாண்பைப் பலவாறாக எடுத்துக் கூறுகின்றனர்.

மேற்குறித்த மாண்புகள் நிரம்பப்பெற்ற சங்க இலக்கியம் தமிழாய்வு வரலாற்றில் நிலையான ஆய்வுக் களத்தைத் தன்னகத்தே பெற்றுள்ளதைக் கருத்தில் கொண்டு ஆய்வாளர் சங்க இலக்கிய ஆய்வுக் களத்தில் தலைப்பை அமைத்துக் கொண்டார்.

சங்க இலக்கிய ஆய்வின் போக்கில் பிறதுறைகளை இணைத்து ஆய்வு செய்யும் போக்கு அண்மைக் காலத்தில் பெருவழக்காக இருப்பதை ஆய்வாளர் கருத்தில் கொண்டு, சங்க இலக்கியங்களில் மானிடவியல் துறை சார்ந்த பண்பாட்டு மானிடவியலை இணைத்த நிலையில் பின்வரும் தலைப்பை வரையறுத்துக் கொண்டார்.

## ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கியங்களில் திணை பற்றிய ஆய்வுகள் பரவலாக நிகழ்த்தப் பெற்றுள. அகத்திணை மாந்தர்களை அடியொற்றியும் ஆய்வுகள் பல்கியுள்ளன. சமுதாயம், உளவியல், பண்பாடு போன்றவைகளை மையமிட்ட ஆய்வுகள் வளர்ந்து வருகின்றன. சங்க இலக்கியங்களில் வேந்தர், அவர்களைச் சார்ந்த போர் மரபுகள் மற்றும் அகத்திணை சார்ந்த ஆய்வுகள் குறிக்கத்தக்கனவாக உள்ளன. வாழ்வியல் பண்பாட்டினை ஒட்டிய ஆய்வுகள் வளரவேண்டிய நிலையில் உள்ளன எனக்கருதலாம். இச்சூழலை அடியொற்றி வாழ்வியல் பண்பாட்டில் சிறப்பிடம் பெறும் புழங்கு பொருள்கள் குறித்த ஆய்வின் தேவையைக் கருதி "பண்டைத் தமிழரின் புழங்கு பொருள்கள்" என ஆய்வுத் தலைப்பு வரையறுக்கப்பெற்றது.

## முன்னோடி ஆய்வுகள்

சங்கத் தமிழரின் பண்பாட்டை விளக்கும் ஆய்வுகளில் பல ஆய்வாளர்கள் ஈடுபட்டுள்ளனர். டாக்டர். க. காந்தி அவர்கள், தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் என்ற தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக, சென்னைப் பல்கலைக்கழகத்தின் வழி ஆய்வு நிகழ்த்தியுள்ளார். தமிழர் நாகரிகம் மற்றும் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றான ஆடையினை மையமிட்டுத் 'தமிழர் ஆடைகள்' என்ற தலைப்பில் கு. பகவதி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் வழி முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்துள்ளார் (1980). ஆடை மக்களின் புழங்கு பொருள்களில் ஒன்றெனக் கூறலாம். பொதுத் தலைப்புகளில் ஆய்வு செய்கிற போது உட்தலைப்புகளில் சிறிய அளவில் புழங்கு பொருட்கள் பற்றிய சிந்தனைகள் இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. காட்டாக மா. இராசமாணிக்கனாரின் பத்துப்பாட்டு

ஆராய்ச்சி நூலைக் குறிப்பிடலாம். இதில் இல்லங்களும் பாத்திரங்களும், அணிகள் போன்ற தலைப்புகளில் புழங்கு பொருட்கள் பற்றிய சில செய்திகள் இடம் பெற்றுள்ளன.

டாக்டர் வி.சி. சசிவல்லி அவர்களின் 'பண்டைத் தமிழர் தொழில்கள்' (1989), முனைவர் வே.சா. அருள்ராசுவின் பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில் (2000) ஆகிய நூல்களிலும் புழங்குபொருள் குறித்த செய்திகள் தொடர்புடைய நிலைகளில் இணைத்து விளக்கம் பெறுகின்றன. எனினும் புழங்கு பொருட்கள் என்ற முழுமைச் சிந்தனையுடன் முன்னோடி ஆய்வுகள் நிகழ்த்தப் பெறாததால் ஆய்வாளர் பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள் என்கிற தலைப்பைப் பொருத்தமாகத் தேர்ந்துகொண்டார்.

## கருதுகோள்

ஆய்வினைத் தெளிவாகவும், செறிவாகவும் வரையறையுடனும் குறிப்பிட்ட நோக்கத்துடனும் வழிநடத்திச் செல்வதற்குக் கருதுகோள் (Hypothesis) பெருந்துணையாய் அமையும். ஆய்வு நெறிமுறைகளும் கருதுகோளின் இன்றியமையாமையை நெறிப்படுத்தியுள்ளன. அவ்வகையில் இவ்வாய்விற்குப் பயன்படும் கருதுகோள் கீழ்க்கண்டவாறு அமைத்துக் கொள்ளப்பெறுகிறது. புழங்குபொருள்களின் விளக்கமும் வகைப்பாடும், இல்லம், தொழில் சார்ந்த புழங்கு பொருள்கள், சமயம் மற்றும் சடங்கு முறை சார்ந்த புழங்கு பொருள்கள் எனத் தனித்தனித்தலைப்புக்களில் ஆராய்ப்பெறுவது கருதுகோளின் முதன்மை முயற்சியாகும். மேலும் பண்டைத் தமிழரின் புழங்கு பொருள்கள் தற்கால நாட்டுப்புற வாழ்வியலின் புழங்கு பொருள்களுடன் ஒப்பிடும் முயற்சியும் கருதுகோளில் கருத்தில் கொள்ளப்பெற்றது.

## அணுகுமுறைகள்

பண்டைத் தமிழர் வாழ்வியல் தொடர்பான புழங்கு பொருட்கள் பல சூழலோடு தொடர்புடையன. இல்லம், தொழில், போரியல், சமயம், சடங்கு சார்ந்த பல நிலைகளில் புழங்கு பொருட்கள் தொடர்பு பெற்றுள்ளன. அவைகளையெல்லாம் தொகுத்தும், வகுத்தும் கூறும் முறையில் விளக்க முறை அணுகுமுறை (Descriptive Approach) இவ்வாய்வில் நடைமுறைப்படுத்தப் பெற்றுள்ளது. தேவையான இடங்களில் ஒப்பீட்டு அணுகுமுறை (Comparative Approach) செயல்முறைப்படுத்தப் பெற்றது. சங்க இலக்கியத்தில் மானிடவியல் துறை இணைப்பு, இவ்வாய்வில் தொடர்புடையதாய் அமைகிறது. மானிடவியலின் ஒரு வகையான பண்பாட்டு மானுடவியலோடு புழங்கு பொருள்கள் குறித்த சிந்தனைகள் இணைப்பைப் பெறுகின்றன. அம்முறையில் பண்பாட்டு மானிடவியல் (Cultural Anthropology approach) ஆய்வில் முதன்மை பெறுகிறது.

## ஆய்விற்கான சான்றாதாரங்கள்

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்கள் இவ்வாய்விற்கு அடிப்படைச் சான்றுகளாக (Primary Sources) அமைகின்றன. சங்க இலக்கியங்களில் புழங்கு பொருட்கள் குறித்து வெளிவந்த நூல்கள், கட்டுரைகள் துணைமைச் சான்றாதாரங்களாகக் (Secondary Sources) கொள்ளப்பெற்றன. நாட்டுப்புற இலக்கியங்கள் காட்டும் புழங்கு பொருள்கள் குறித்த செய்திகள் நாட்டுப்புறப் பாடல் தொகுப்பில் தேர்ந்தவற்றை அடிப்படையாகக் கொண்டு சேகரிக்கப் பெற்றன. அவைகளும் துணைமைச் சான்றாதாரங்களில் அடங்கும்.

## ஆய்வுப்பகுப்பு

'பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள்' என்னும் இவ்வாய்வு கீழ்க்கண்ட ஏழு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

1. முன்னுரை
2. புழங்கு பொருட்கள் விளக்கமும் வகைப்பாடும்
3. இல்லம் சார்ந்த புழங்கு பொருட்கள்
4. தொழில் சார்ந்த புழங்கு பொருட்கள்
5. சமயம், சடங்கு முறை சார்ந்த புழங்குபொருட்கள்
6. அன்றும், இன்றும்
7. முடிவுரை

துணை நூற்பட்டியல்

பின்னிணைப்பு

1. புழங்கு பொருள்கள் - அகர வரிசை
2. புழங்கு பொருள் - புகைப்படங்கள்

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் கருதுகோள், ஆய்விற்கான அணுகுமுறைகள், ஆய்விற்கான சான்றாதாரங்கள், ஆய்வின் பகுப்பு ஆகியன இடம் பெற்றுள்ளன.

இரண்டாமியலில் மானிடவியல், பண்பாட்டு மானிடவியல், புழங்கு பொருள் விளக்கம், சாதியமும் பால்பாகுபாடும், வகைப்பாடு ஆகிய தலைப்புக்களில் சான்றுகள் காட்டி விளக்கப் பெற்றுள்ளன.

மூன்றாமியலில் சமூக நிறுவனங்களின் கூறு, பண்டைத்தமிழர் குடும்பம், இல்லம் விளக்கம், கல்லால் ஆனவை, மண்ணால் இயன்றவை, இலை, நார், மரம் மற்றும் பிற உலோகத்தால் இயன்றவை ஆகிய பெருந்தலைப்புக்களின் கீழ் கல்லால் இயன்ற உரல், மண்ணால் இயன்ற குழிசி, மிடா, தசும்பு, குடம், கன்னல், சாடி, மண்டை, அகல், வள்ளம், தாலம், பிழா, கறவைக்கலம், நெற்கூடு

ஆகியவைகளும், இலை, நார், மரம் மற்றும் பிற என்ற தலைப்பின் கீழ் ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை, பனையோலையால் இயன்ற வட்டில், பறி, ஓலைக்குடை ஆகியனவும், மரத்தால் இயன்ற திரிமரம், உரல், உலக்கை, மத்து, அம்பணம் ஆகியவையும், உலோகத்தால் இயன்ற பொன்கலங்கள், பசும்பொன்மண்டை, வெள்ளிக்கலம், மணிக்கலம், இரும்பாலியன்ற விளக்கு, எ∴கு, மயிற்குறைகருவி, ஊசி, காழ், செம்பினாலாகிய செப்பு ஆகியவை குறித்த செய்திகளும் விரிவாக இலக்கியச் சான்றுகளுடன் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

நான்காமியலில் தொல்காப்பியத்தில் தொழில், தொல்காப்பியத்தில் தொழிலும் மக்கள் பிரிவும், தொழில் விளக்கம், தொழில் வகைப்பாடு ஆகிய பொதுத் தலைப்புகளின் கீழ் வாழ்வியல் தொழில், போர்த்தொழில், வாணிகத்தொழில், கலையியல் தொழில் ஆகிய பெருந்தலைப்புகளின் வழி புழங்கு பொருள்கள் வகைப்படுத்திக் கொடுக்கப் பெற்றுள்ளன. வாழ்வியல் தொழிலின் கீழ் கைத்தொழில், நிலஞ்சார் தொழில், கைவினைத் தொழில், பிற தொழில்கள் என்ற தலைப்புக்களாக மேலும் பகுக்கப் பெற்று கைத்தொழிலில் ஒன்றாகிய பயிர்த் தொழிலில் நாஞ்சில், தளம்பு, ஆம்பி, கிழார், துளர், குளிர், தழல், தட்டை, வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி, தொண்டகச்சிறுபறை, தண்ணுமை, அரிப்பறை, குயம், வாள், கரும்பு அரவை இயந்திரம் ஆகியன குறித்த செய்திகள் ஆராயப்பெற்றுள்ளன.

நெசவுத் தொழிற் தலைப்பின் கீழ், நெசவுசாற் புழங்கு பொருட்கள் ஆராயப்பெற்றுள்ளன. தச்சுத்தொழிற் கருவியான உளி குறித்து விளக்கப்பெற்றுள்ளது. மட்கலத்தொழில், கொல்லுத் தொழிற்கருவிகளான கொல்லுலை, துருத்தி, உலைமூக்கு, அரம், குறடு, சம்மட்டி, உலைக்கல், சாணைக்கல், ஆகியனவும் உலோகத் தொழில், அணிகலத் தொழிற் புழங்கு பொருள்களான உரைகல், அரம் குறித்தும் தோல்த் தொழில் குறித்தும் ஆராயப் பெற்றுள்ளது.

நிலஞ்சார் தொழிலின் கீழ் கால்நடை பேணுவதற்குப் பயன்பெற்ற உறி, தீக்கடைக்கோல், தோற்பை, பனையோலைப்பாய், குழல், சிறியகோல், மூங்கில் குழாய் ஆகியன ஆராயப்பெற்றுள்ளன. வேட்டையாடுதல் தொழிலுக்குப் பயன் பெற்ற வலைகள், வில்லம்பு, ஊது கொம்பு ஆகியவற்றுடன் ஆறலைத்தற்குப் பயன் பெற்ற அம்பு, துடி குறித்தும் விளக்கப் பெற்றுள்ளன. மீன் வேட்டத்திற்குப் பயன்பெற்ற வலைகள், பறிகள், விசைத்தூண்டில், எறியுளி, மரக்கலங்கள் குறித்தும் ஆராயப்பெற்றுள்ளன. உப்பு விளைவித்தல், முத்துக் குளித்தல், சங்கெடுத்தல் குறித்தும் விளக்கப்பெற்றுள்ளன.

கைவினைத் தொழில்களாகிய ஓலைத் தொழிலின் கீழ் கூடை, ஓலைப்பாய், குடை, பொம்மை செய்தல், பாவை செய்தல், சாயப்பாக்குத் தயாரித்தல், கயிறு திரித்தல், களவுத் தொழில் ஆகியவை குறித்தும் ஆராயப்பெற்றுள்ளன.

போர்த்தொழிற் புழங்கு பொருட்கள் என்ற தலைப்பில் தொலை இலக்குக் கருவிகள், இடை அண்மை இலக்குக் கருவிகள், அணுக்கப் போர்க் கருவிகள், காப்புக் கருவிகள் மற்றும் பிற என்ற பெரும் தலைப்புக்களின் கீழ் வில் அம்பு, சிலை, சாபம், கொடுமரம், வல்வில், பகழி, வாளி, கணை, கோல், அம்பு, வேல், வாள், மழு, நவியம், அரணம், கவசம், கேடயம், எழு, சீப்பு, ஐயவி, முரசு, போர்ப்பறை, தண்ணுமை, வளை, வயிர், வீரக்கழல், அடிபுதை அரணம் மற்றும் வாணிகத்தொழிலிற் புழங்கு பொருள்களான வண்டிகள், கழுதை, படகு, பண்டமாற்று, அங்காடிகள், கலையில் தொழில் தொடர்பான செய்திகளும் விளக்கப் பெற்றுள்ளன.

ஐந்தாமியலில் சமயம், சடங்கு முறை சார்ந்த புழங்கு பொருட்கள் ஆராயப் பெற்றுள்ளன. இதில் சமயத்தின் தோற்றம், இந்து சமயம், தமிழர் சமயம், சடங்குகள் ஆகிய பொதுத்தலைப்புக்களுடன் சமயம் சார்ந்த புழங்கு பொருட்களான

இறைவனோடு தொடர்புடைய ஆடை, கருவிகள், கொடியும் ஊர்தியும், ஆடையும் கருவிகளும் இடம் பெற்றுள்ளன. வழிபாட்டுடன் தொடர்புடைய நடுகல், விழாக்காலப் பொருட்கள், வெறியாட்டு ஆகியன விளக்கப் பெற்றுள்ளன. சடங்குகள் சார்ந்த புழங்கு பொருட்களில் பிறப்புச்சடங்கு, தாலிகளைதல், மடலேறுதல், சிலம்பு கழிநோன்பு, திருமணச்சடங்கு, இறப்புச் சடங்கு, ஈமத்தாழி ஆகியன குறித்தும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன.

ஆறாமியலில் அன்றும் இன்றும் என்ற தலைப்பின் கீழ் புழங்கு பொருட்கள் விளக்கப் பெற்றுள்ளன. வரையறையும் வகைப்பாடும், இல்லம் சார்ந்த புழங்கு பொருட்களில் கல்லால் ஆன உரல், மண்ணாலாகிய குழிசி, மிடா, குடம், குதிர், இலை, நார், மரம் மற்றும் பிற என்ற தலைப்பின் கீழ் ஓலைப்பெட்டி, கூடை, பறி, திரிமரம், உரல், உலக்கை, அம்பணம் மற்றும் உலோகத்தால் இயன்ற விளக்கு, ஊசி, செம்பு ஆகியன விளக்கப் பெற்றுள்ளன. பயிர்த்தொழிற் கருவிகளான நாஞ்சில், தளம்பு, ஆம்பி, கிளார், துளர் ஆகியவை இன்று வழக்கில் இடம் பெறும் நிலை ஆராயப் பெற்றுள்ளன. கிளிகடிகருவிகளான வில், கிலுக்குப் பிரம்பு, அறுவடை செய்யப் பயன்படும் கதிர் அரிவாள், குறித்தும் விளக்கப் பெற்றுள்ளன. நெசவுத் தொழில், கொல்லுத்தொழில் குறித்த செய்திகள் மற்றும் நிலஞ்சார் தொழிற் கருவிகளான வலை, கண்ணி, தூண்டில் குறித்தும், கைவினைத் தொழிற் புழங்கு பொருள்களான பனையோலைப் பெட்டி, பொம்மை ஆகியன குறித்தும் ஆராயப் பெற்றுள்ளன. சமயம் மற்றும் சடங்குமுறை சார்ந்த புழங்கு பொருட்களும் நாட்டுப்புறவியலுடன் ஒப்பிடப்பெற்றுள்ளன.

முடிவுரையில் ஐந்து இயல்களிலும் இருந்து பெறப்பட்ட செய்திகள் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளது.

துணை நூற்பட்டியலில் இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பெற்ற நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், ஆங்கில நூல்கள் ஆகியவை பட்டியலிடப்பெற்றுள்ளன.

பின்னிணைப்பு ஒன்றில் புழங்கு பொருட்கள் அகரவரிசைப்படுத்தப் பெற்றுள்ளன. பின்னிணைப்பு இரண்டில் புகைப்படங்கள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. ச. அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, - ப.240
2. மேலது - ப. 305
3. மேலது - பக். 29-30

'சமூகம்' தான் தோன்றிய காலத்திலிருந்து படிப்படியான வளர்ச்சிகளையும் மாற்றங்களையும் உருமாற்றங்களையும் பெற்று இன்றுள்ள நிலையை அடைந்திருக்கிறது. இந்நிலை அளப்பிற்கரிய பரிணாமம் எனச் சுட்டலாம். இருப்பினும் இடையறா மரபின் ஆட்சி நூலிழைபோல் அன்றிலிருந்து இன்றுவரை நிலைபெற்று வருவதாகக் கூறலாம்.

மனிதன் நாடோடி வாழ்க்கை, வேட்டை வாழ்க்கை, கால்நடை சார்ந்த வாழ்க்கை, விவசாயம் சார்ந்த வாழ்க்கை என்ற நிலைகளில் வளர்ச்சிபெற்று, நிலைத்த அரசுடன், பேரரசாகவும், வல்லரசாகவும் வளர்ந்து வந்த நிலையை வரலாற்றின் வழி உணரலாம்.

சமூக வாழ்க்கைச் சூழலில் அரசு, பொருளாதாரம், வாழ்வியல், சமயம், நாகரிகம், பண்பாடு போன்றவைகள் ஒவ்வொன்றும் தனித்தனித் துறைகளாக வளர்ந்துள்ளன. அவைகள் ஒன்றிற்கொன்று தொடர்பும் பெறுகின்றன.

மேற்குறித்தவைகளில் பண்பாடு தொடர்பான ஆய்வும் ஒன்றாகும். இவ்வாய்வின் வளர்ச்சி தனித்தும், பிறதுறைகளைச் சார்ந்தும் பிற்காலத்தில் வளர்ந்த நிலை குறிக்கத்தகுந்தது ஆகும். மனித வாழ்வியலில் தோன்றும் இலக்கியங்கள் அவ்வக்காலச் சமூகத்தையும் பண்பாடுகளையும் இலக்கியத்தில் பதிவுசெய்துள்ளன. புதிதாக வளர்ந்துள்ள மானிடவியல் துறையும் (Anthropology) பிறதுறைகளை இணைத்தும் தனித்தும் வளம்பெற்ற நிலை குறிப்பிடத்தகுந்ததாகும். அம்மானிடவியலின் ஒரு வகையை விளக்குவது பண்பாட்டு மானுடவியல் (Cultural Anthropology) ஆகும். பண்பாட்டு மானிடவியலின் பல கூறுகளில் புழங்கு பொருள்கள் (Material culture) குறித்த சிந்தனை சிறப்பிடம் பெறுகின்றது. பண்டைத் தமிழரின்

புழங்கு பொருட்களை இலக்கியத்தின் வழி மதிப்பிடும் முயற்சி இவ்வாய்வில் மேற்கொள்ளப்பெற்றுள்ளது. இவ்வகையில் ஆய்வு, பண்பாட்டு மானிடவியலைச் சார்ந்து அமையும். இந்நிலையில் மானிடவியல், பண்பாட்டு மானிடவியல், புழங்கு பொருள், புழங்கு பொருள் குறித்த வகைப்பாடு குறித்த செய்திகளை அறிமுகநிலையில் அறிந்து கொள்ளும் முயற்சியாக இவ்வியல் அமைகிறது.

## மானிடவியல்

"மானிடவியல் என்னும் அறிவுத்துறை, மனித இனம், அதன் பண்பாடு, சமூகங்களின் அமைப்புகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், உறவுமுறைகள், மொழிக்கூறுபாடுகள் ஆகியவற்றையெல்லாம் கணக்கிலெடுத்துக் கொண்டு முழுமனிதனை அடையாளங்காண முயலுகிறது. காலத்தாலும், இடத்தாலும் அதன் எல்லைகள் மிக விரிந்தவை. 'கல்தோன்றி, மண்தோன்றாக் காலத்து முன்தோன்றிய மூத்த குடிகளும் இன்று உலகின் மூலை முடுக்குகளில் வாழும் இனங்களும் அதன் ஆய்வுப் பரப்பிற்கு உட்பட்டவைகளே."[1] இக்கருத்திலிருந்து மனிதனை அடையாளங்காண விரிந்த எல்லையாக விளங்குவது மானிடவியல் துறை என உணரலாம்.

மானிடவியல் துறை வளர்வதற்குப் பல அறிஞர்கள் முயற்சித்திருக்கின்றனர். மலினாவ்ஸ்கி, ராட்கிளிஃப்பிரௌன் ஆகியோர் மானிடவியலில் செயற்பாட்டியல் பரம்பரையைத் தோற்றுவித்தவர்கள் என்று குறிப்பிடுவர். மலினாவ்ஸ்கி பசிபிக் தீவுகளில் மானிடவியல் கள ஆய்வு எவ்வாறு மேற்கொள்ளப் பெறவேண்டும் என்பதை நடைமுறைப்படுத்திக் காட்டியவர். ராட்கிளிஃப் பிரௌனின் அணுகுமுறை அமைப்புச் செயற்பாட்டியல் (Structural Functionalism) என்று கூறுவர். இவர் ஆராய்ச்சி சமூக உறவுகளின் அமைப்பில் அதிகக் கவனம் செலுத்துகின்றது என்பர். "சமுதாயம்

ஒரு உயிர்ப் பொருள் போல் இயங்குகிறது என்றும், ஒரு பழக்கத்தில் செயல்பாடு சமுதாயத்தின் தொடர்பு வாழ்க்கைக்கு அளிக்கப்பெறும் பங்களிப்பு"[2] என்றும், ராட்கிளிஃப் - பிரௌன் கருதினார்.

அமெரிக்க மானிடவியலார் லிண்ட்டன் தகுதி நிலையும் (Status), கடமைக்கூறும் (Role) மானிடவியலின் முக்கியப் பங்களிப்பதாகக் கூறுவர். பிரஞ்சு மானிடவியல் அறிஞர் கிளாட் லெவிஸ்ட்ராஸ் மானிடவியலின் வளர்ச்சிக்குப் பல கருத்துக்களை வழங்கியுள்ளார். "லெவிஸ்ட்ராஸ், வேறுபட்ட பண்பாடுகளை ஆய்ந்து, கற்பனையாற்றலுடன் எதிரிணைகளையும் மாற்றிணைகளையும் (Oppositions and Equivalence) சுட்டுவதில் வல்லவர். இவற்றில் சிலவற்றை நாம் ஏற்க முடியாமல் போனாலும் அவரால் மானிடவியல் பெற்ற நன்மை பெரிதென்பதில் ஐயமில்லை"[3] என்ற கருத்தைக் கருத்தில் கொள்ளலாம். பிற்காலங்களில் உயிர் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களின் அடிப்படையைத் தாண்டிய விளக்கத்தின் துணையில் மானிடவியல் வளர்ச்சி பெற்றநிலை கருத்திற்குரியதாகும்.

"பொருள்கள் சாப்பிடுவதற்கு, உடுப்பதற்கு, தங்குவதற்கு நல்லவையென்பதை மறந்து விடுங்கள், அவற்றின் அன்றாடப் பயனை மறந்துவிட்டு, பொருள்கள் சிந்தனைக்கு உகந்தவை என்ற கருத்தைப் பற்றி எண்ண முயலுங்கள். அவற்றை மனிதப்படைப்பாற்றலுக்கான பேச்சற்ற ஊடகமாகக் கருதுங்கள் என்பார் டக்ளஸ். மனித இனத்தின் பல்வேறு சமூகங்கள் நடத்தையை ஒழுங்குபடுத்துவதிலும் செயல்களுக்குப் பொருள் அளிப்பதிலும் கையாண்ட மரபு வழிப்பட்ட உத்திகள் பலவாகப் பெருகவே பண்பாடுகள் தோற்றம் பெற்றன. இதுவே சமுதாய மானிடவியல் ஆய்வுக்குச் சரியான நிலையென்பது டக்ளஸ் கருத்து. பொருள்களெல்லாம் உயிர் வாழ்க்கைக்கு அடிப்படையான தேவைகள் என்று எடுத்துக்கொள்ளாமல் பண்பாட்டு

வகைகளை வெளிப்படுத்தவும் நிரந்தரப்படுத்தவும் அவை தேவை என்று சிந்திக்க வேண்டும் என்று வற்புறுத்துவார்"[4].

பிற்காலத்தில் மார்க்சிய மானிடவியல் வளர்ச்சிபெற்றது. இம்மானிடவியலில் குழுக்களை ஆராய்வதைக் கண்டித்தனர். பின்னைக் காலனித்துவவுலகின் கூறுகளைப் பார்க்கும் முறையை முன் வைத்தனர். "மரபு வழிப்பட்ட மானிடவியல் நூல்கள் ஆசிரியனை அவனால் பேசப்பட்ட மக்களினின்றும் பிரிக்க முயல்கின்றன; ஆசிரியனின் சொந்த அனுபவங்களை அவன் நூல் தரும் விளக்கத்தோடு இணைப்பதில்லை. ஆனால் பின்னை நவீனத்துவ மானிடவியல் எழுத்து ஆசிரியனை அவனளிக்கும் விளக்கத்தோடு தொடர்புபடுத்தி அவன் கையாளும் நடை உத்திகளைக் கணக்கிலெடுத்துக் கொள்கிறது."[5] மானிடவியல் என்னும் துறையானது, அவ்வக்கால அறிஞர்கள் சிந்தனையால் மென்மேலும் வளர்ந்துவரும் சிந்தனையாக உள்ளது. பொதுவாக இரண்டு விரிந்த வகைகளை மானிடவியலில் காணலாம்.

1. பௌதிக மானிடவியல் (Physical Anthropology)
2. பண்பாட்டு மானிடவியல் (Cultural Anthropology)

முதல் வகையில் மனித இனவேறுபாடுகளையும், உயிர்க்கூறுகளையும் அதன் வளர்ச்சியையும், இயற்கை மனிதனிடம் கொண்ட ஆதிக்கத்தினையும் ஆய்வதாக அமையும். பண்பாட்டு மானிடவியலில் "மனிதனின் வாழ்வியல் சூழல், பழக்கவழக்கம் அவை உருவாகும் நிலை மற்றும் பாதுகாக்கப்பெறும் சூழல் போன்றவற்றை விளக்குவதாக அமையும்"[6] என்பர்.

## பண்பாட்டு மானிடவியல்

மானிடவியல் துறையின் ஒரு வகையாகப் பண்பாட்டு மானிடவியல் விளங்குகிறது. பண்பாட்டுக் கூறுகளை மானிடவியல் விளங்குகிறது. பண்பாட்டுக் கூறுகள் மானிடவியலில் விளக்கப்பெறும் தன்மை இங்கு கருத்தில் கொள்ளப்பெறுகிறது. மனித குலத்திற்கு இருவகை வளர்ச்சி உண்டென்று கூறுவர். "அவ்வளர்ச்சி அகவளர்ச்சி என்றும், புறவளர்ச்சி என்றும் சொல்லலாம்."[7] இவ்விரண்டுவகை வளர்ச்சியினையும் முறையே பண்பாடு, நாகரிகம் என்னும் சொற்களால் குறிப்பர்.




"நாகரிகம் உணவிலும் உடையிலும் இது போன்ற பிற வாழ்க்கையின் ஆரவாரங்களிலும் தோன்றுகிற ஒன்றாகும். நகரத்தின் ஆரவாரந்தானே நாகரிகம்"[8] என்பர்.

"கல்ச்சர் என்பது ஆங்கிலத்தில் இரண்டு பொருள்களில் வழங்கப்படுகிறது. ஒன்று தொன்மக்கள் நூலில் வருவது. மக்களின் ஆதிவரலாற்றில் ஒவ்வொரு காலத்திலும் அவர்கள் இயற்றிக் கொண்ட கருவிகள் முதலியனவும், அவர்கள் வாழ்ந்த சமுதாயத்தினது பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் முதலியனவும், அவர்களது சமயம் பற்றிய கொள்கைகள் முதலியனவும், வெளிப்படுத்தும் அறிவு நிலையே கல்ச்சர் என இவ்வகை நூல்கள் பெயரிட்டு அழைக்கின்றன. இதுவே

விஞ்ஞானத்திற்குரிய சங்கேதப் பொருள் எனலாம்."[9] என்பர். இதிலிருந்து மக்கள் வாழ்க்கைக்குப் பயன்பெற்றவற்றிலிருந்து பெற்ற அறிவே பண்பாடு என்று எண்ணமுடிகின்றது.

"பண்பாடு என்பது செய்பொருள்களை மட்டும் சார்ந்ததன்று, அவற்றைப் பற்றிய மக்களின் கருத்துக்களுமாகும். அதோடு பண்பாடு என்பது ஒருமுறைப்படியான நடத்தை முறைக்கு மக்கள் ஏற்படுத்திக் கொள்ளும் ஓர் அமைப்பு அல்லது மனஅளவிலான விதி எனக்கருத்தியலார் கருதுகின்றனர்"[10] என்பர். இதிலிருந்து பொருள்சார் பண்பாட்டிற்கும், இவற்றைப் பற்றிய மக்களின் கருத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதும் விளங்கும். இவ்வகையில் பண்டைக்கால மக்களின் பண்பாட்டை அவர்கள் பயன்படுத்திய பொருள்களின் வழி அறிய இயலும் என்பது திண்ணம்.

## புழங்குபொருள் விளக்கம்

"நம்மைச் சுற்றியுள்ள புற உலகம் முழுவதும் பொருள் சார்ந்ததுதான். நாம் பொருளோடு உறவாடாத நேரம் கிடையாது. 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது முன்னிலை பெற்றுவிட்டது. நம்மோடு தொடர்புடைய எண்ணற்ற பொருள்களுள் 'புழங்குபொருட்கள்' மிகவும் அன்னியோன்யமானவை. நம் உணர்வுகள் வாழும் களமாக இப்புழங்கு பொருட்கள் உள்ளன. இறந்த உறவினர் படத்தைச் சுவரில் மாட்டி மாலையிடுகிறோம், கல்லை நட்டு குங்குமம் இட்டால் சாமி என்கிறோம், புழங்குபொருட்களுக்கு 'ஆயுத பூசை' செய்கிறோம்.'[11] இவ்வாறு மனிதர்களைச் சுற்றியுள்ள பொருள்களில் கருத்துக்கள், உணர்வுகள், மதிப்பீடுகள், விழுமியங்கள் தொடர்பு பெறுகின்றபோது இப்புழங்கு பொருள்கள் பயன்பாட்டுடன் வேறுசிலவற்றையும் இணைத்த நிலையில் முழுமையடைகிறது.

புழங்குபொருள் காலத்திற்கேற்றவாறு மாறும் தன்மையன. கற்காலத்தில் உருவான கற்கருவிகள் இக்காலத்தில் இயந்திரங்களுடன் தொடர்பு பெறுவதை இங்கு விளக்கத்திற்காகக் குறிப்பிடலாம். 'உரல்' அக்காலத்தில் அரைப்பதற்குரிய புழங்கு பொருள். இக்காலத்தில் மோட்டார் இயந்திரத்துடன் மின்தொடர்பு பெற்று 'கிரைண்டர்' என்ற கருவியாகப் பயன்படுவதைக் குறிப்பிடலாம்.

அருங்காட்சியகத்தில் உள்ள பொருட்கள் தொன்மைக்காலப் புழங்கு பொருள்கள் ஆகும். அதுபோல இலக்கியத்தில் பதிவு செய்யப்பெற்ற பண்டைத் தமிழரின் புழங்கு பொருள்களை அறிதல் வாயிலாகப் பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்களையும், அப்பொருள்களைச் சார்ந்த பண்பாட்டினையும் மதிப்பிட வழியுண்டு.

பயன்படும் தன்மையைக் கருத்தில் கொண்ட மக்கள் அப்பொருள்கள் குறித்த உருவாக்கத்தைக் கவனமாகப் பேணுகின்றனர். அம்முறையில் உருவாக்கம் குறித்த திறன் தோற்றம்பெற்ற காலத்திலிருந்து இன்றளவு வரை தொடர்ச்சியாக மரபில் நிலைத்து வாழ்வதைக் காணலாம். ஆகவே, தொழில் திறம் குறித்த மரபு புழங்குபொருளில் மையம் கொண்டுள்ளதாகக் கருதலாம். நாட்டுப்புறத்தில் நாட்டுப்புற இலக்கியங்கள் எங்ஙனம் மரபின் வழியாக வாய்மொழி மரபாக நிலவுகிறதோ, அதைப்போல உருவாக்கத்திறம் குறித்த கருத்துக்களும் வாய்மொழி வாயிலாகவே (Oral tradition) பயின்றுவருகின்றன.

புழங்குபொருள்கள் உருவாக்கத்திற்குரிய உத்திகளும் வடிவமைப்புகளும் (Designs) பரம்பரை பரம்பரையாகப் பயின்றுவரும் நிலையில் குறிப்பிட்ட குழு (அ) சாதியினர் அடையாளப் படுத்தப்பெறுகின்றனர். அவ்வாறு அடையாளப்படுத்தப் பெற்றவர்கள் வட்டாரம் (அ) இடம் என்ற நிலையில் மேலும் அடையாளப்படுத்தப் பெறலாம்.

புழங்குபொருள் உற்பத்தியில் ஆண்களின் பங்கு என்ன?, பெண்களின் பங்கு என்ன? என்ற சிந்தனையோடு புழங்கு பொருள் குறித்த ஆய்வைச் செய்கின்றனர். சிலவற்றை முழுவதும் பெண்களே செய்கின்றனர். சிலவற்றில் பகுதியாகச் செயல்படுகின்றனர். சிலவற்றில் முழுப்பங்கே இல்லை. இவைகளை அறிஞர்கள் பல எடுத்துக்காட்டு விளக்கங்களின் வழி எடுத்துரைக்கின்றனர்.

பெண்கள் பாய் பின்னுதல், கூடை முடைதல், மலர் வேலைப்பாடுகள் போன்றவற்றில் முழுமையாக ஈடுபடுகின்றனர். நெசவுத் தொழிலில் பாதி நிலையில் பங்கு பெறுகின்றனர். கடுமையான உழைப்பு உள்ள இடங்களில் குறிப்பாக இரும்பு தொடர்பான தொழில்களில் பெண்களின் பங்கே இருப்பதில்லை. புரோவர் பெண்கள் தொழிற்கான பொருள்கள் நாடு என்ற பகுதியிலிருந்து கிடைப்பதாகக் கருத்தாக்கம் செய்கிறார். ஆண்கள் தொழிலுக்குரிய மூலப்பொருட்கள் காட்டிலிருந்து கிடைப்பதாகக் குறிக்கிறார். "பெண்கள் முற்றிலும் பங்கேற்காத மூன்றாம் வகைத் தொழில்களான தச்சுவேலை, இரும்பு வேலை, சிற்பவேலை, பித்தளைப் பாத்திர வேலை, பொன்வேலை ஆகியவற்றுக்கான மூலப்பொருள்களைப் பண்டைக் காலத்தில் தட்டார்கள் மலைப்படுகைகளில் ஓடும் ஆற்றுப் பரப்பிலிருந்து தங்கத்துகள்களை எடுத்துள்ளனர். அதுபோல மலைப்பகுதிகளின் இரும்புக் கனிமங்களைச் சேகரித்து. அவற்றைக் காய்ச்சி இரும்புக் கருவிகள் செய்துள்ளனர் எனக் கருமார்கள் தெரிவிக்கும் பழங்கதைகளை நினைவு கூறுகிறார் புரோவர்."[12]

இவ்வகையில் பெண்கள் செய்யக்கூடிய புழங்கு பொருட்கள் நீர்நிலைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளவைகளாக உள்ளன. எடுத்துக்காட்டாக, பாய், கூடை இவைகளுக்குரிய கோரைப் புற்கள் நீருடன் தொடர்புடையவை. ஆண்கள் செய்யக்கூடிய புழங்கு பொருட்கள் நெருப்புடன் தொடர்புடையவை. மேலும் பெண்கள் செய்யக்கூடிய உற்பத்திப் பொருள்கள் வேகமாக அழிந்து விடுகின்றன.

மறு உற்பத்தி தேவைப்படுகிறது. ஆனால் ஆண்கள் செய்யக்கூடியவை நீடித்து உழைக்கக் கூடியவை. இவ்வாறு ஆண், பெண் பாகுபாட்டின் அடிப்படையில் புழங்குபொருளிலிருந்து பண்பாட்டை உருவாக்க முடியும் என்று புரோவர் தெரிவிக்கும் கருத்து மிகப்பயனுடையதாக அமையக் காணலாம்.

## சாதியமும், பால்பாகுபாடும்

புழங்குபொருள் செய்யும் கலைஞர்களின் குழு (அ) சாதியத்துடன் தொடர்பு பெறுவது தவிர்க்க முடியாத பண்பாகும். எடுத்துக்காட்டாக, மண் பாண்டக்கலையைக் குறிப்பிடலாம். மண்பாண்டப் புழங்கு பொருள் செய்வோர் குயவர்கள் ஆவர். குயவர் சமூகத்தின் மண்பாண்டத்தொழில் ஒரு காலத்தில் போற்றப்பெற்றது. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள சடங்குகளில் குயவர் செல்வாக்குப் பெற்றிருந்தனர். சமயம் மற்றும் சடங்குகளிலும் குயவர் என்ற ஒரு சமுதாயத்திற்குப் பண்பாட்டு பதிவு உருவாகிறது. இது குயவர்களுடன் தொடர்புடைய பண்பாட்டுப் பதிவாகும்.

இவ்வகையில் குயவர்கள் தீச்சட்டி செய்தால் அச்சட்டி அம்மன் வழிபாட்டோடு தொடர்பு பெறுகிறது. அவர்கள் செய்யும் குடம் இறப்புச் சடங்குடன் தொடர்பு பெற்றால் அதுகொல்லிக்குடம் என்று அழைக்கப்பெறுகிறது. இங்கு இறப்புச் சடங்கு என்ற பண்பாட்டுப் பதிவு தொடர்புபெறுகிறது. இதுபோல உருவாக்கப்பெறும் புழங்குபொருள்கள் உற்பத்தி செய்பவருக்குப் பண்பாட்டு மதிப்பைத் தருகிறது. உற்பத்தி செய்யும் பொருளுக்கும் பண்பாட்டு மதிப்பைத் தருகிறது.

கடைகளில் தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மை என்று கேட்டு வாங்குகிறார்கள். அந்தப் பொம்மை செய்யும் கலைஞர் தஞ்சாவூரில் உள்ளனர்.

இங்கு பொம்மை என்னும் புழங்கு பொருளுடன் கலைஞர் என்ற குழுவும், அக்குழுவினர் வாழும் ஊரும் பண்பாட்டு நிலையில் அடையாளப்படுத்தப் பெறுகின்றனர். இதனைப் போலவே தஞ்சாவூர்த் தட்டும் சிறப்பிக்கப்பெறுவதை இங்குக் குறிப்பிடலாம்.

பொதுவாக, மேற்கூறிய செய்திகளை நோக்கும்போது புழங்கு பொருள்கள் குறித்த பண்பாட்டில் கைவினைப் பொருள்கள் பண்பாட்டுத் தொடர்பு பெறுகின்றன. கைவினைப் பொருள், அழகுபெறும் பொழுது கைவினைக் கலைப்பொருளாக மாறுகின்றன.

பொருள்கள் பண்பாட்டைப் பிரதிபலிக்கும்போது உருவமாகவோ, குறியீடாகவோ வெளிப்படலாம். இதனை, அறிஞர்கள் சில எடுத்துக் காட்டுக்களின் வழி விளக்குவர். பிச்சைக்காரர் கோவணத்துடன் இருப்பதற்கும், துறவிகள் கோவணத்துடன் இருப்பதற்கும் மதிப்பீடுகள் வெவ்வேறானவை.

"பெரும்பாலும் அறிஞர்கள் புழங்கு பொருள் பண்பாட்டை 'Art' என்றும், 'Graft' என்றும் இரண்டு உட்பிரிவுகளாகக் காண்கின்றனர். இந்த இரண்டு நிலைகளில் புழங்கு பொருட்களை வகைப்படுத்துவதற்கு ஒரு முக்கியக் கருத்தமைவை ஆய்வாளர்கள் முன்வைக்கக்கூடும்"[13] என ஹென்றி கிளாசி குறிப்பிடுகிறார். இக்கருத்திலிருந்து கலைப்பொருள்கள் மற்றும் கைவினைப் பொருள்கள் புழங்கு பொருளினைச் சார்ந்து அமைவதைக் காணலாம்.

புழங்கு பொருள்களில் சில பயன்பாட்டு நிலை மிகுந்தும், சில அலங்காரத்தன்மை மிகுந்தும் காணப்படுவதைக் கருத்தில் கொள்ளலாம்.

இயற்கையிலிருந்து இயற்கைப் பொருள்கள் புழங்கு பொருள்களாக உருவாக்கப்பெற்று, பண்பாட்டு மதிப்பைப் பெறுகிறபோது புழங்கு பொருள்கள் குறித்த

சிந்தனைகள் முழுமை பெறுவதாகக் கருதலாம். "மானுடச் சமூகங்கள் எல்லாம் தாம் வாழும் சுற்றுச் சூழலுக்கும் காலத்திற்கும் ஏற்ப வாழ்ந்தாக வேண்டும். இந்தப் படிமுறையில் சமூகங்கள் தத்தம் சொந்த நோக்கத்திற்கேற்ப இயற்கை உலகை வடிவமைக்கப் பல்வேறு தந்திரோபாயங்களையும் அணுகுமுறைகளையும் வளர்த்தெடுத்துள்ளன"[14] இக்கருத்திலிருந்து இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புக்களாகவும், கலைப்படைப்பாகவும் மாற்றிக்கொள்வதையே புழங்கு பொருள் பண்பாடு என்று அறியமுடிகிறது.

புழங்கு பொருள்களில் காலத்திற்கேற்ப பண்பாட்டு மதிப்புக்கள் தொடர்பு பெறுகின்றன. புழங்கு பொருளும், பண்பாடும் பிரித்தறிய முடியாதவை. இவை ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் என்று மதிப்பிடலாம். பண்பாட்டின் கண்ணாடி புழங்கு பொருள் என்று கூறலாம்.

"பொருள் பற்றிய பண்பாடு என்பதைக் குறிப்பன கருவிகள், ஆயுதங்கள், அணிகள், ஆடைகள் போன்றவை"[15] எனக் குறிப்பிடுவர். "மக்கள் அவர்களின் தேவைகளுக்காகச் செய்துகொள்ளும் அனைத்து வகையான பொருள்களும் பொருள்சார் பண்பாட்டில் அடங்கும். இயந்திரங்கள், கருவிகள், மரச்சாமான்கள், வீட்டுப்பொருள்கள், உடைகள், அணிகலன்கள், கட்டடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், சாலைகள், வேளாண் நிலங்கள், எழுதுகோல், அழகுப்பொருட்கள், போர்க்கருவிகள் போன்ற எண்ணற்ற பொருள்கள் பொருள்சார் பண்பாட்டைச் சேர்ந்தவை"[16] என்பர். புழங்கு பொருள்கள் எவையெவை என்பது குறித்து விரிவான செய்திகள் வளர்ந்து கொண்டே வருவதை நடைமுறையில் காணலாம்.

## வகைப்பாடு

புழங்கு பொருள்கள் குறித்த மேற்குறித்த சிந்தனைகள் விரிந்த களத்தைத் தருகின்றன. விரிந்த களத்தில் வகைநிலை கருத்தில் கொள்ளப்பெறுதல் தேவையான முயற்சியாகும். புழங்கு பொருள்கள் குறித்த விளக்கங்களிலிருந்து கலைப்பொருள்கள் மற்றும் கைவினைப்பொருள்கள் என்ற பொதுநிலைப் பாகுபாட்டினை உணரலாம். எனினும் ஆய்வின் எளிமைக்கும் வளர்ச்சிக்கும் அப்பாகுபாடு போதுமானதாக இல்லை.

புழங்கு பொருள்களை முழுவதுமாகக் கருத்தில் கொண்டு வகைப்படுத்தலாமெனில் புழங்கு பொருள்கள் எவையெவை என்கிற நிலையில் அறிஞர்களின் கருத்துக்கள் முடிந்த முடிவாக இல்லை. புழங்கு பொருள்கள் குறித்த பட்டியல் விரிந்து கொண்டே செல்கின்றது. இந்நிலையில் ஆய்விற்காகப் புழங்கு பொருள்கள் குறித்துக் கீழ்க்கண்ட வகைப்பாடு அமைத்துக்கொள்ளப்பெறுகிறது.




என்று மூன்று வகைகள் இங்கு அமைத்துக்கொள்ளப்பெறுகின்றன.

இல்லம் சார்ந்த புழங்கு பொருள்களில் ஆணுக்கு உரியவை, பெண்ணிற்கு உரியவை எனப்பாகுபடுத்த வழியுண்டு. இருவருக்கும் பொதுவாகப் பயன்படக்கூடியவை எனக்கருத்தில் கொள்ளவும் இயலும். புழங்கு பொருள்களில் சில தனித்தனி நிலையில் ஆய்விற்குட் படுத்தப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக,

கு. பகவதி அவர்கள் தமிழர் ஆடைகள் குறித்து முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்து விரிந்த நூலையும் வெளியிட்டுள்ளார்கள்.[11]

மனிதனின் அடிப்படைத்தேவைகளுள் ஒன்றான ஆடை இல்லம் மற்றும் தொழில் சார்ந்த புழங்கு பொருள்களில் தொடர்பு பெறும். சங்கப்பாடல்களில் உடை என்ற பொருளில் ஆடை என்ற சொல் பயிற்சி பெற்றுள்ளதை அறிஞர்கள் காட்டியுள்ளனர். டாக்டர் கு. பகவதி அவர்கள் ஆடை என்கிற தமிழர்களின் ஒரு புழங்கு பொருளைக் குறித்து விரிவான நிலையில் ஆராய்ந்துள்ளார்கள். தமிழர் ஆடைகள், உடுத்தும் முறைகள், ஆடைகள் சார்ந்த பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், ஆடையுடன் தொடர்புடைய தொழில்கள் என்கிற தலைப்புகளில் விரிவாகச் சிந்தித்துள்ளார்கள். அவ்வகையில் 'ஆடை' என்கிற புழங்கு பொருள் இவ்வாய்வில் கருத்தில் கொள்ளப்பெறவில்லை.

இல்லம் சார்ந்த புழங்கு பொருள்களில் அணிகலன்களையும் அடக்கலாம். ஆடவர், மகளிர் ஆகியோருக்குரிய அணிகலன்களைத் தனித்தனியாகவும், பொதுவாகவும் பயன்படுத்துகின்றவை என வகைப்படுத்திப் பார்க்கவும் இயலும். நுண்கலைச் செல்வர் அ. இராகவன் அவர்கள் தமிழ் நாட்டு அணிகலன்கள் என்கிற நூலை வெளியிட்டுள்ளார்கள்.[18] அணிகலன்களின் வரலாற்றை நாகரிகக் காலந்தொடங்கி, இலக்கியம் மற்றும் பிற சான்றுகள் வழியாக அறியப்பெற்ற அணிகளை எல்லாம் விளக்கியுள்ளார்.

தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன் என்கிற நூலில் அறிஞர் வெ. வரதராசன் அவர்கள் ஒப்பனையோடு தொடர்புடைய அணிகலன்கள் குறித்துச் சிந்தித்துள்ளார். இச்சூழலில் இல்லம் சார்ந்த புழங்கு பொருள்களில் விரிவாக ஆய்வு செய்யப்பெற்ற புழங்கு பொருள்கள் தவிர்க்கப்பெற்றுப் பிற புழங்குபொருள்கள்

இவ்வகையில் கருத்தில் கொள்ளப்பெற்றன. குறிப்பாகப் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் பதிவுசெய்யப்பெற்றவை மட்டும் ஆய்விற்குட்படுத்தப்பெற்றன.

தொழில் சார்ந்த புழங்கு பொருள்கள் விரிவான செய்திகளை உள்ளடக்கிய வகைப்பாடாகும். தனித்தனித் தொழில்களைக் குறித்த ஆய்வு நூல் அமைந்தால் அத்தொழிலுக்குரிய தொழில்சார்புழங்கு பொருள்களும் தொடர்பு பெற்றிருக்கும். எடுத்துக்காட்டாக, கு. பகவதி எழுதிய தமிழர் ஆடைகள் என்ற நூலில் 'ஆடையும் தொழிலும்' என்ற தலைப்புத் தனியே அமைக்கப் பெற்றுள்ளதைக் குறிப்பிடலாம். பண்டைத் தமிழரின் தொழில்களை வாழ்வியல் தொழில்கள், போர்த்தொழில், வாணிகத்தொழில், கலையியல் தொழில் என வகைப்படுத்தி விளக்குவர். மயிலை சீனி, வேங்கடசாமி பழங்காலத் தமிழர் வாணிகம் என்ற தலைப்பில் நூல் வெளியிட்டுள்ளார்கள்.[19] அந்நூல் பொதுவாக வாணிகத்தொழில் குறித்து மட்டும் அமைகின்றது. மேற்குறித்த வகைகளைக் கொண்டு இவ்வாய்வில் அத்தொழில்கள் சார்ந்த புழங்கு பொருள்கள் பண்டைத்தமிழ் நூல்களில் இடம்பெற்றவிதம் கருத்தில் கொள்ளப்பெற்றது. முற்குறித்த நான்கு வகைப்பாடும் மேலும், உள்வகைகளாகப் பிரிக்கப்பெறுகின்றன.

சமயம், சடங்குகள் சார்ந்த பண்டைத் தமிழர்களின் புழங்கு பொருள்கள் தனியாகச் சிந்திக்கப் பெறாத நிலையில் ஆய்வில் ஒரு வகையாக இணைத்துக்கொள்ளப் பெற்றுள்ளது. பண்டைத் தமிழரின் சமயம், வழிபாடு குறித்துச் சிந்தித்த நிலையில் 'புழங்கு பொருள்கள்' அவ்வகைத் தொடர்பு பெற்றதாகத் தெரியவில்லை.

## தொகுப்புரை

சமூக வாழ்க்கைச் சூழலில் பலதுறைகள் தொடர்பு பெறுகின்றன. அத்துறைகளில் பண்பாட்டுத் துறையும் ஒன்று. இத்துறை தனித்தும், பிறதுறைகளைச் சார்ந்தும் வளர்ச்சிபெற்று வருகின்றது. புதிதாக வளர்ந்துள்ள மானிடவியல் துறையும்

தனித்தும், பிறதுறைகளைச் சார்ந்தும் வளர்ச்சிபெற்று வருகின்றது. இச்சூழலில் பண்பாட்டு மானிடவியல் குறிக்கத்தக்கத் துறையாக உருவெடுத்துள்ளது.

பண்பாட்டு மானிடவியலில் புழங்கு பொருட்கள் முதன்மை பெறுகின்றன. புழங்கு பொருட்களை அடிப்படையாகக் கொண்டு தொன்மைக் கால மக்களின் பண்பாட்டையும், பண்டைக்கால மக்களின் பண்பாட்டையும் நிகழ்கால மக்களின் பண்பாட்டையும் அறிந்துகொள்ள இயலும். இவ்வாய்வில் பண்டைத் தமிழ் இலக்கியங்களின் வாயிலாக பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்களை அறிதலும், பண்பாட்டை அறிதலும் கருத்தில் கொள்ளப்பெற்றது.

மனிதனை அடையாளங்காண விரிந்த எல்லையாக விளங்குவது மானிடவியல் துறையாகும். மலினாவ்ஸ்கி, ராட்கிளிஃப்பிரௌன் ஆகியோர் அமைப்புச் செயற்பாட்டியல் அணுகுமுறையை இத்துறையில் வளர்த்துள்ளார்கள். இத்துறை உயிர் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களின், அடிப்படையைத் தாண்டிய விளக்கத்தின் துணையில் மானிடவியல் துறை வளர்ச்சிபெற்று வருவதாகக் கூறுவர். மானிடவியலில் குழுக்களை ஆராயும் போக்குகளிலிருந்து பின்னைக்காலனித்துவக் கூறுகளை ஆராயும் முறை மார்க்சிய மானிடவியலில் தோற்றம் பெற்றது.

பொதுவாக மானிடவியலில் பௌதிக மானிடவியல், பண்பாட்டு மானிடவியல் என்ற வகைநிலை கருத்தில் கொள்ளப்பெறும். பண்பாட்டு மானிடவியல் இருதுறைகளைச் சார்ந்தது. புறவளர்ச்சியைச் சார்ந்த நாகரிகம், அக வளர்ச்சியைச் சார்ந்த பண்பாடு ஆகியவை கருத்தில் கொள்ளப்பெறுதல் உண்டு. மேலும் மக்கள் வாழ்க்கை, பயன்பெற்றதிலிருந்து பெற்ற அறிவு பண்பாடு என்றும் கூறுவர்.

மனிதர்கள் தங்களைச் சுற்றியுள்ள பொருள்களின் பயன்பாடு மட்டுமின்றி, உணர்வு, நம்பிக்கை, விழுமியம் இவைகளை இணைக்கிறபோது

புழங்குபொருட்கள் சிறப்பான தகுதியைப் பெறுகின்றன. இப்புழங்கு பொருட்கள் எல்லாக்காலத்திலும் ஒன்றுபோல இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

புழங்கு பொருளின் உருவாக்கம் குறித்த திறன் மரபாக நிலைபெற்று வருகிறது. புழங்கு பொருள் உருவாக்கத்திற்குரிய உத்திகளும் வடிவமைப்புகளும் மரபிலேயே தொடர்புபெறுகின்றன. இப்புழங்கு பொருள்கள் வழியாகக் குறிப்பிட்ட சாதி - இனம் - வட்டாரம் ஆகியன அடையாளப் படுத்தப்பெறுவது கருதத்தக்கதாகும்.

புழங்கு பொருள் உற்பத்தியில் ஆண்கள் மற்றும் பெண்களின் பங்கு மதிப்பிடப்பெற்று, கோட்பாடுகள் உருவாக்கப்பெற்றுள்ளன. புரோவரின் ஆராய்ச்சி இந்நிலைக்கு எடுத்துக்காட்டாகும்.

குயவர் மட்பாண்டத் தொழிலோடும், மட்பாண்டப் பொருள்களுடனும், அடையாளப்படுத்தப் பெறும் நிலை கருதத்தக்கது. குயவர்களிடம் அத்தொழில் பண்பாட்டுப் பதிவைப் பெறுகின்றது. குயவன் செய்யும் தீச்சட்டி வழிபாட்டுத் தொடர்புடன் பண்பாட்டுப் பதிவையும் பெறுகின்றது. இங்கு சாதியத்திலிருந்து பயன்பாட்டு நிலையில் பண்பாட்டுப் பதிவுகள் உருவாவதைக் காணலாம். இவ்வாறு வேறுபடும் அடையாளப் பதிவுகள் கருதத்தக்கவை.

புழங்கு பொருள் பண்பாட்டில் கைவினைப் பொருள்கள் (Art) தொடர்பு பெறுகின்றன. கைவினைப் பொருள் அழகுபெறும்போது கைவினைக் கலைப் பொருள்களாக உருவாகின்றன (Graft).

இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புக்களாகவும், கலைப்படைப்புக்களாகவும் மாற்றிக் கொள்வதைப் புழங்கு பொருள் பண்பாடு என்று குறிக்கலாம். அஃதாவது பண்பாட்டின் கண்ணாடி புழங்குபொருள் ஆகும்.

புழங்குபொருள் எவையெவை என்பது விரிவான சிந்தனைக்குரியது. ஆகவே இவ்வாய்வில் வரையறைகருதி ஆய்வு செய்யப்பெறாத புழங்கு பொருள்களைக் கருத்தில் கொண்டு, வகைப்பாடு அமைத்துக்கொள்ளப்பெற்றுள்ளது. இவ்வகையில் இல்லம் சார்ந்த புழங்கு பொருட்களும், தொழில் சார்ந்த புழங்கு பொருட்களும், சமயம், சடங்குமுறை சார்ந்த புழங்கு பொருட்களும் கருத்தில் கொள்ளப்பெற்றன.

## சான்றெண் விளக்கம்

1. ப. மருதநாயகம், முன்னுரை, தமிழர் மானிடவியல், பக்தவச்சல பாரதி. ப, VI.
2. மேலது, ப, IX
3. மேலது, ப, XVI.
4. மேலது, ப, XVII.
5. மேலது, ப, XIX.
6. The Science of anthropology is divided into two broad fields, physical and cultural anthropology. Physical anthropalogists study such matters as the nature of racial differences. The inheritance of bodily traits, the growth, developments, and decay of the human organs; the influences of the natural environment on man. Cultural anthropologists study the ways man has devised to cope with his natural setting and his social milieu; and how bodies of custom are learned, retained, and handed down from one generation to the next.

   - F. Herskovits, cultural anthropology - P3.
7. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 1
8. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழும். பிற பண்பாடும், ப. 1
9. எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழர் பண்பாடு, முன்னுரை, ப. 5

10. சீ. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 162

11. சீ. பக்தவச்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப. 309.

12. மேலது, ப. 314.

13. மேலது ப. 310

14. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப. 357

15. கலைக்களஞ்சியம், தொகுதி ஆறு, ப. 691.

16. சீ. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.167.

17. டாக்டர் கே. பகவதி, தமிழர் ஆடைகள்.

18. அ. இராகவன், தமிழ் நாட்டு அணிகலன்கள்.

19. மயிலை. சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம்.

மனிதன் நிலைத்த வாழ்வை எய்துவதற்குச் சமூக வளர்ச்சியில், நாகரிக வளர்ச்சியில் பல படிநிலைகளைக் கடந்து வந்துள்ளான். உணவு, உடை, இருப்பிடம் ஆகியவை மனிதனின் அடிப்படைத் தேவை. அவற்றைப்பெற்று வாழ்வில் சிறக்கப் பண்பாட்டிலும் பல வளர்ச்சிகளைப் பெற்று வந்துள்ளான். சங்ககாலத் தமிழர் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்கினர். அந்நிலையை அவர்கள் அடைவதற்குப் பல காலங்கள் ஆகியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

சமூக வளர்ச்சியில் குடும்பம் ஓர் அடிப்படை நிறுவனமாகும். குடும்ப வளர்ச்சியே விரிந்து சமூகமயமாதலுக்கு (Socialization) வழி வகுக்கிறது. அக்காலத்தியக் குடும்பம் செம்மையாக இருந்தது. குடும்ப உருவாக்கம் அறியப்பெறும் நிலையில் 'இல்லம' என்பதற்குரிய பின்புலத்தைத் தெளிவாக்குதல் இயலும். இல்லத்தில் நிலவும் வாழ்க்கைச் சூழலை அறிந்துகொண்டால் இல்லத்தில் அவ்வாழ்க்கைச் சூழலுக்கேற்றவாறு பயன்படுத்தப்பெற்ற புழங்கு பொருள்களைத் தெரிந்துகொள்ள இயலும். இந்நிலையைக் கருத்தில்கொண்டு புழங்கு பொருட்களைத் தெளிவாக்கி வகைப்படுத்தி விளக்கும் முயற்சியாக இவ்வியல் அமைகிறது.

## சமூக நிறுவனங்களின் கூறு

பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் தொன்மை குறித்து அறிஞர்கள் விரிவாகச் சிந்தித்துள்ளனர். "கி.மு. இரண்டாம் நூற்றாண்டுகளுக்கு முன்பு தொடங்கி கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரை படைக்கப்பெற்ற தமிழ் இலக்கியங்களைச் சங்க கால இலக்கியங்கள் என்று நாம் கொள்கிறோம் ஏறத்தாழ 700 ஆண்டுகால எல்லைக்கு மேலாக எழுதப்பெற்ற இலக்கியங்களே சங்க இலக்கியங்கள் என்பதையும், 700 ஆண்டுகள் என்பது தமிழ் இலக்கிய வரலாற்றுக் காலத்தின் ஒருசிறு எல்லை

அன்று என்பதையும் நாம் மனத்தில் இருத்தல் வேண்டும்."[1] இக்கருத்திலிருந்து சங்க இலக்கியங்கள் காட்டும் சமுதாயம் போன்றவை குறுகிய காலத்தில் முகிழ்த்தவை அல்ல; எனினும் நீண்ட பாரம்பரியத்தை உடையவை என்பதும் புலனாகிறது.

"குடும்பம், அரசு, பொருளியல், சட்டம், பழக்கம், ஒழுக்கம், மதம், கல்வி ஆகிய தொடக்க காலத் தமிழ்ச் சமுதாய நிறுவனங்களின் கூறுகளின் சாயல்களைச் சங்க இலக்கியம் பெற்று இருத்தல் வேண்டும்; பெற்றுள்ளது."[2] இவ்வகையில் குடும்பம் என்ற சமுதாய நிறுவனம் (Social Institution) சங்க இலக்கியத்தில் பதிவு பெற்றமையை உணரலாம்.

## பண்டைத் தமிழர் குடும்பம்

"சங்க இலக்கியங்களுள் தாத்தா, பாட்டி, பேரன், பேத்தி ஆகியோருடன் சேர்ந்து வாழும் அப்பா, அம்மா இடம்பெறவில்லை. தாத்தா, பாட்டி, பேரன், பேத்தி ஆகிய முறைப்பெயர்களும் மிகுதியாகச் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை. காதலித்துத் தலைவனும், தலைவியும் பெற்றோர் உடன்பாடு இன்றி, உடன்போக்கி வெளியே சென்று கணவன் மனைவியாக வாழ்வதற்கு அனுமதிக்கப்பட்டு இருந்தனர். அயலூர் சென்று வாழும் மகளையும், மருமகனையும் செவிலித்தாய் சென்று பார்க்கும் குறிப்புகள் உள்ளன. தாய், தந்தை உடன்பிறந்தான் ஆகியோர் சென்று பார்ப்பது போன்ற குறிப்புகளோ, பேரக்குழந்தைகளுடன் தந்தை, தாய் வீட்டிற்கு மகள் வருவதுபோன்ற குறிப்புகளோ சங்க இலக்கியத்தில் காணப்பெறவில்லை. உறவுக்குள்ளே திருமணம் முடிக்கவேண்டும் என்ற மரபு அழுத்தமாக உருவாகாத காலம் அது. வயது வந்த பிறகு தம் துணையுடன் விருப்பத்துடன் பறந்துசெல்ல உரிமை பெற்றிருந்த தொடக்கநிலை அது. எனவே, அத்தை, மாமன் மகள் என்பன

போன்ற இரத்த உறவுகள் அன்று பெருகியிருக்கவில்லை. இந்தச்சூழலில் தனிக்குடும்பமே சமுதாயத் தேவையாக அன்று இருந்தது. எனவே தனிக்குடும்ப நெறி மிகுதியாகப் போற்றப்பெற்றதை உடன் நோக்கும், மனையறம் படுத்தும் கோட்பாடும் தெளிவுபடுத்துகின்றன."[3] அக்காலத்திய சூழலில் தனிக்குடும்பம் சார்ந்த இல்லங்கள் பெருவழக்காக இருந்தன. மனிதனுக்கு உணவு, உடை, இருப்பிடம் ஆகியவை அடிப்படைத் தேவைகளாக இருந்தன. உணவு, உடை, இல்லம் ஆகியவைகளைச் சார்ந்து புழங்குபொருட்கள் அமையும். உணவு, உடை ஆகியவை குறித்து விரிந்த நிலையில் ஆய்வறிஞர்களால் ஆராயப்பெற்றுள்ளன. இவ்வாய்வில் அவைகளைத் தவிர்த்து இல்லத்தில் பயன்படுத்தப்பெற்ற புழங்கு பொருள்களே கருத்தில் கொள்ளப்படுகின்றன.

## இல்லம் விளக்கம்

"இல்லம் என்பதற்கு வீடு (house, home) என்று பொருளுரைக்கின்றது".[4] தமிழ் இலக்சிகன். இதில் உள்ள 'இல்' என்பதற்கு "இடம், வீடு, இல்லறம், மனைவி, மருதமுல்லை நிலங்களின் தலைவியர், குடி, இராசி, தேற்றாங்கொட்டை"[5] போன்ற பல பொருள்களைத் தமிழ் இலக்சிகன் குறிக்கின்றது. தற்காலத் தமிழ்ப் பெயர் அகராதி "இல்லம்-வீடு என்று குறித்து மாணவர், அலுவலக ஊழியர், முதியோர் போன்றோர் உணவு உண்டு தங்கியிருக்கும் கட்டடம்"[6] என்றுரைக்கின்றது. ஆகவே இல்லம் என்பதற்கு 'வீடு' என்ற பொருளைக் கருத்தில் கொள்ளலாம்.

தனிக்குடும்பத்தை மையமிட்ட இல்லத்தில் (வீடு) இடம்பெறும் புழங்கு பொருள்கள் பல திறத்தன. வீட்டில் சமைத்தல், பரிமாறுதல், சேமித்தல், எறியூட்டுதல் என்பன போன்ற செயல்நிலைகளில் பலவிதமான புழங்குபொருள்களைப் பயன்படுத்துகின்றனர். அத்தகு புழங்குபொருள்கள் கீழ்கண்டவாறு வகைப்படுத்தி விளக்கப்பெறுகின்றன.

1. கல்லால் ஆனவை
2. மண்ணால் ஆனவை
3. இலை, நார், மரம் மற்றும் பிற
4. உலோகங்களால் இயன்றவை

## 1. கல்லால் ஆனவை

இல்லம் சார்ந்த புழங்குபொருட்களில் கல்லால் ஆனவை குறித்து விரிவான செய்திகள் கிடைக்கவில்லை. கலித்தொகையில் கல்லால் இயன்ற உரல் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது. இதனை,

"ஆடுகழை நெல்லை அரையுரலுட் பெய்திருவாம்" (கலி: 41.3)

"ஐவன வெண்ணெல் அரையுரலுட் பெய்திருவாம்" (கலி: 43.4)

என்று மூங்கில் நெல், வெண்ணெல் ஆகியவற்றை குற்றுவதற்குக் கல்லால் இயன்ற உரலைப் பயன்படுத்தியதாகக் கலித்தொகை மட்டும் குறிப்பிடுகின்றது.

## 2. மண்ணால் இயன்றவை

மக்கள் உணவுப்பொருள்களைச் சேமித்து வைக்க மண்பாண்டங்களைச் செய்துகொண்டனர். பொதுவாக மண்பாண்டங்கள் தண்ணீர், உணவுப்பொருள்கள்

முதலியவற்றைச் சேமித்து வைக்கவும், உணவு சமைக்கவும், சாப்பிடவும் உதவும். அக்காலத்தில் சுடப்படாத மட்பாண்டங்களைக் காட்டிலும் சுடப்பெறும் மட்பாண்டங்கள் நீடித்திருக்கும் என்ற கருத்து வழக்கில் இருந்தது. இதனைக் கீழ்க்கண்ட பாடல் அடிகள் உணர்த்தும்,

"பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி " (குறு. 29:2.3)

இதிலிருந்து மழைநீரை எதிர்ந்துள்ள சுடப்படாத மட்கலம் எவ்வாறு அழியுமோ, அதுபோல உளந்தாங்கலாற்றாத ஆசையிருப்பதும் அழிவிற்கே வழிவகுக்கும் என்பதால் சுடப்படாத மட்கலத்தைப் பயன்படுத்தமுடியாது என்னும் கருத்து வெளிப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. இக்கருத்தையே,

" ஈர்மட் செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழை பெயற்கேற் றாங்கு
பொருண்மலி நெஞ்சம் புணர்ந்துவந் தன்றே" (நற்: 308:9-12)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

" சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமண்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று" (குறள் : 660)

✓ என்ற குறளும் இங்கு எண்ணத்தக்கதாகும். இதற்கு 'பசுமண்ணாற் குடஞ்செய்து நீர் நிறையப் பெய்து வைத்தால் அது ஊறிக் குடைத்தையுடைத்து நீர் எப்படி ஓடுமோ அதுபோல கொடுமையால் பெற்ற பொருளும் கெடும்'[7]. எனவே மட்பாண்டங்களைச் சுட்டுப் பயன்படுத்த வேண்டும் என்ற சிந்தனை உடையவர்களாகப் பண்டைத் தமிழர் விளங்கியமையை உணரமுடிகிறது.

மண்ணால் இயன்ற புழங்குபொருட்கள் பெரும்பாலும் நீர், கள் சேகரித்து வைப்பதற்கும், சமைப்பதற்கும், சமைத்ததை வைத்துச் சாப்பிடுவதற்கும் பயன்பெற்றுள்ளன. குழிசி, மிடா. தசும்பு, குடம், கன்னல், சாடி, மண்டை, அகல், வள்ளம், குதிர், தாலம், பிழா, கறவைக்கலம் ஆகிய மண்ணால் இயன்ற பொருள்களைக் குறித்த செய்திகளை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

## குழிசி

'குழிசி' என்பதற்குப் பானை[8] என்று பொருள். "தடாவும், குழிசியும், மிடாவும் பானை"[9] என்று பானையின் பெயர்களைச் சேந்தன் திவாகரம் குறிப்பிடுகின்றது. இவற்றுள் 'குழிசி' என்னும் பெயர் சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. தொகையில் அக இலக்கியங்களில் அகநானூற்றில் இரண்டு பாடல்களிலும், நற்றிணையில் ஒரு பாடலிலும், புற இலக்கியங்களில் புறநானூற்றில் ஐந்து பாடல்களிலும், பத்துப்பாட்டினுள் பெரும்பாணாற்றுப் படையில் மூன்று இடங்களில் பயின்று வந்துள்ளன. பொதுவாகப் புற இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது.

'குழி' என்றால் பள்ளம் என்று பொருள். எனவே குழிவான அமைப்புக் கொண்ட பானை குழிசி என்று பெயர் பெற்றுள்ளது. உணவு சமைப்பதற்கு இதனை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர். இக்குழிசி களிமண்ணால் செய்யப்பெற்றிருக்கின்றது என்பதை,

"களிபடு குழிசிக் கல்லடுப் பேற்றி" (அகம்: 393:15)

என்பதால் அறியலாம் சமைப்பதற்கு இது பயனானதை.

" மான்தடி புழுக்கிய புலவுநாறு குழிசி

வான்கேழ் இரும்புடை கழாஅது ஏற்றி" (புறம்: 168: 9-10)

என்ற அடிகளின் வழி அறியலாம்.

விளிம்பு உடைந்துபோன வாயினையுடைய குழிசியில் கிணற்று நீரை முகந்து உலையாக அடுப்பில் ஏற்றியுள்ளனர். இதனை

" .................. ..... நெடுங்கிணற்று

வல்லூற்றுவரி தோண்டி தொல்லை

முரவுவாய் குழிசி முரியடுப் பேற்றி " (பெரும்: 97-99)

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் சுட்டுகின்றன.

உழவோர் புதியோருடைய மிக்கபசி தீரும்படி சோற்றையாக்கும் குழிசி அசையும்படி அடுப்பேற்றியதை,

" சோறடு குழிசி இளக விழூஉம் " (பெரும்: 366)

என்ற அடிகளில் சமைப்பதற்கு பயன்படுத்தப்பெற்றதை உணரலாம். சமைப்பதற்கு பயன்படுத்தியதுபோன்றே தயிர் கடைவதற்கும் குழிசியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

" விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்

பாசந் தின்ற தேய்கான் மத்த " (நற்: 12:1-2)

என்பது சுட்டும். அஃதாவது பாலைக் காய்ச்சிப் பிரையிட்டுத் தோய்த்த தயிர்த்தாழி இயல்பாகவே மணங்கமழும் என்பது பற்றி விளாம்பழம் கமழும் குழிசி என்றார்.

'ஊர் மக்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்க ஆவணமாக்கள் கயிற்றாலே வரிந்து கட்டப்பட்ட குடங்களில் பொறிக்கப்பட்ட இலச்சினையைப் பார்த்து அழித்து அக்குடத்திலிருந்து ஒவ்வொன்றாக எடுப்பர்'. இதனை,

" கயிறுபிணி குழிசி ஓலைகொண்மார்

பொறி கண்டளிக்கும் ஆவண மாக்கள் " (அகம் : 77:7-8)

என்னும் அடிகள் விளக்கும். இவ்வாறு அக்காலத்தில் குடவோலை முறையில் மக்கள் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்குக் குழிசியைப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வகையில் சமையல் பொருளாகவும், ஊர்த் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் குடமாகவும் குழிசியைப் பயன்படுத்தியுள்ளனர். இக்குழிசிக்கு உரையாசிரியர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை "மிடா"[10] என்று பொருள் (குழிசி - மிடா) விளக்கம் அளிக்கின்றார்.

## மிடா

மிடா என்பது பானையின் பெயர்களுள் ஒன்றாகும். இம்மிடா குறித்த செய்தி எட்டுத்தொகையில் அக இலக்கியங்களில் அகநானூற்றிலும், புற இலக்கியங்களில் பதிற்றுப்பத்திலும், பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப் படையிலும் இடம்பெற்றுள்ளது. இதன் பெயர் 'மடா' என்றும் அழைக்கப்பெற்றுள்ளது.

பரிசில் வேண்டி வருவோர் வல்லுநராயினும் அல்லராயினும் அவர்க்குச் சாலிலுள்ள-மிடாவிலுள்ள சோற்றை உண்கலம் நிறையும்படி அளிக்கும் வண்மையாளன் என்று ஆய் அண்டிரனின் சிறப்பைக் கூறுமிடத்து,

"வல்லினும் வல்லாராயினுஞ் சென்றோர்க்குச்

சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்

மாஅல் யானை யாஅய் கானத்துத்" (அகம் : 152: 19-21)

என்று குறிப்பிடுகின்றார். பதிற்றுப்பத்தும்,

"அடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவின்" (பதி: 24:20)

என்பதற்குச் 'சோறு சமைக்கும் பெரும்பானை' என்று குறிக்கின்றது. இதனால் சோறு சமைப்பதற்குப் பயன்பட்ட பெரியபானை மிடா என்றும், மடா என்றும் வழுங்கப்பெற்றமை விளங்கும். பெரும்பாணாற்றுப் படையில்,

"காடி வைத்த கலனுடை மூக்கின்" (பெரும்: 57)

என்னும் அடிகளுக்கு விளக்கம் கூறுமிடத்து 'காடி வைக்கப்பட்ட மிடாவினையுடைய மூக்கணை மீது' என்று நாடக மகளிரின் முழவுக்குக் காடி உவமையாகக் கூறப்பட்டுள்ளது. எனவே மேற்பக்கம் கழுத்துப்போன்று நீண்டும், அடிப்புறம் 'முழவு' போன்ற அமைப்பும் கொண்ட வடிவினது 'காடி' எனக்கொள்ளலாம். இக்காடியில் ஊறுகாய் வைத்திருந்தமையை,

" நெடுமரக் கொக்கின் நறுவடிவிதிர்த்த
தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்" (பெரும்: 309-310)

என்னும் பாடலடிகள் சுட்டும். எனவே புளிப்புத் தன்மையுடைய காடியை "காடி வைத்தக் கலன்" என்று அழைத்தமை விளங்கும்.

## தசும்பு

தமிழ் இலக்சிகன் தசும்பு என்பதற்குக் குடம் [11] என்று பொருளுரைக்கின்றது.

"இடங்கள், தசும்பு, கடம், கும்பம் குடம்
கன்னல் என்று கருதுவர் புலவர்" [12]

எனக்குடத்தின் பெயர்களில் ஒன்றாகத் தசும்பைச் சுட்டுகின்றது திவாகரம்.

தசும்பு குறித்த செய்தி தொகை நூல்களில் அக இலக்கியங்களில் நற்றிணையில் மட்டும் இடம்பெற்றுள்ளது. புற இலக்கியங்களில் புறநானூறு. பதிற்றுப்பத்து ஆகியவற்றில் பயின்றுவந்துள்ளது. பத்துப்பாட்டில் மலைபடுகடாத்தில் இடம்பெற்றுள்ளது.

இக்கலம் பால், தயிர், கள் ஆகியவற்றை நிறைத்து வைப்பதற்குப் பயன்படுத்தப் பெற்றதை இலக்கியச் சான்றுகளின் வழி அறியமுடிகிறது.

"சுடுமண் தசும்பின் மாத்தந்தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பிடத் தன்ன" (நற்: 84: 6-7)

என்பதால் இத்தசும்பு மண்ணால் செய்து சுடப்பெற்றது என்பதை உணரமுடிகிறது.

பதிற்றுப்பத்தில் ஒரு பாடலில் கள் நிறைத்து வைக்கும் தசும்புகளை மலர் மாலையாலும், இஞ்சி மாலையாலும் அலங்கரித்து மணல்மேல் வைப்பர். இப்பானைகளின் மேற்புறத்தைச் சந்தனத்தால் பூசி வைப்பர் என்ற குறிப்புக் காணப்படுகின்றது. இதனை,

"இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கை
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்" (பதி: 42: 10-12)

என்னும் அடிகள் சுட்டும். மேலும் ஆயர்குல மக்கள் தயிரினை எடுத்துச் செல்வதற்கு இத் தசும்பு உதவியுள்ளது. இதனை,

"தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய" (புறம்: 33:3)

என்னும் அடி சுட்டும். உணவு சமைக்கவும், தேறல்பெய்து வைக்கவும் தசும்பு பயனாகியுள்ளது என்பதை,

"வளஞ்செய் வினைஞர் வல்சி நல்கத்

துளங்கு தசும்பு வாக்கிய பசும்பொதித்தேறல்

இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள் தொறும் பெறுகுவீர்" (மலை: 462-464)

என்னும் பாடலடிகள் கொண்டு அறியலாம். இவ்வகையில் தசும்பு உணவு சமைக்கவும், பால், தயிர், கள் ஆகியவற்றை நிறைத்து வைத்துக் கொள்ளவதற்கும் பயன்பெற்றுள்ளது.

## குடம்

'குட' என்பது 'வளைந்த', 'குடக்கம்'[13] எனும் பொருளினைத் தருவது. குடமானது பலாப்பழம் போன்று இருந்தது என்பதனை,

"முடவுமுதிர் பலவின் குட மருள் பெரும்பழம்" (அகம்: 352:1)

என அகப்பாடலடி எடுத்துக்காட்டுகிறது. எனவே கீழ்ப்பாகம் பலாப்பழம் போல் விரிந்தும் உள் நோக்கி வளைந்தும் அமைக்கப்பெற்ற கலம் குடம் எனலாம். இக்குடம் குறித்த செய்திகள் தொகை நூல்களில் அக இலக்கியங்களாகிய அகநானூற்றிலும், புற இலக்கியங்களில் புறநானூற்றிலும் இடம் பெற்றுள்ளது. சமைப்பதற்கு இக்குடம் பயன்படுத்தப் பெற்றதை,

" ...... ..... ..... ...... மாஅத்துக்

கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்

புளிப்பதன் அமைத்த புதுக்குட மலிர்நிறை" (அகம்: 37:6-9)

என்பவை சுட்டும். அதாவது மாமரத்துக் காய்கொண்டு அவற்றொடு புளிக்கும் பதனையைச் சேர்த்துச் சோறு சமைத்தமையை மேற்கண்ட பாடலடிகள் சுட்டுகின்றன. இதனால் சமையல் கலனாகக் குடம் பயன்பட்டமை விளங்கும்.

ஆயர் மகளிர் கறந்த பாலினை வைப்பதற்குக் குடத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். அக்குடத்துப் பாலிலேயே பிரைத்துளி குத்தி தயிரும் தோய்த்தனர். இதனை,

"ஆய்மகள் வள்உகிரத் தெறிந்த

குடப்பாற் சில்லுறை போல்" (புறம்: 276:4-5)

என்னும் அடிகள் சுட்டும். இதிலிருந்து சமைப்பதற்கும், தயிர் தோய்த்து வைப்பதற்கும் குடம் பயன்பெற்றமை விளங்கும்.

## கன்னல்

தமிழகராதி 'கன்னல்' என்பதற்கு 'நீர்க்குடம்''[14] என்று பொருளுரைக்கின்றது. இக்கலன் கரகம், ... என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

இக்கன்னல் குறித்த செய்திகள் தொகை நூல்களுள் அக இலக்கியங்களாகிய அகநானூற்றிலும், கலித்தொகையிலும் இடம் பெற்றுள்ளன. புற இலக்கியங்களில் குறிக்கப்பெறவில்லை. பத்துப்பாட்டில் முல்லைப் பாட்டிலும் நெடுநல்வாடையிலும் இடம்பெற்றுள்ளன.

"நூலே கரகம் முக்கோல் மனையே" (தொல்: 1570)

என்று கன்னல் குறித்த செய்தி தொல்காப்பியத்திலேயே இடம்பெற்றுள்ளது. பெரும்பாலும் இக்கரகத்தினை அந்தணர்களே பயன்படுத்தியுள்ளனர். என்பதனை,

"உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு

நெறிபடச் சுவலசைஇ ...... ..... யந்தணீர்" (கலி: 9:2-4)

என்ற பாடலடிகள் சுட்டும். கன்னல் என்பதற்கு, பிங்கலந்தை நிகண்டு.

"கன்னலும் கிண்ணமும் நாழிகை வட்டில்" [15]

எனக் குறிக்கிறது. காலத்தை அளக்கப் பயன்படும் கருவியை நாழிகை வட்டில் என்று குறித்துள்ளனர்.

கன்னலில் நீரிட்டு ஒரு சிறுதுளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு நீரினை அளந்து காணும் கருவியாக நாழிகை வட்டிலைப் பயன்படுத்தியுள்ளனர். இலக்கியத்தில் இதனைக் "குறுநீர்க் கன்னல்" என்று குறிப்பிட்டுள்ளனர்.

" எறிநீர் வையகம் வெலிஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப" (முல்லை; 57 - 58)

என்ற அடிகளில் நாழிகை வட்டிலால் அளந்து கொண்டமை வெளிப்படும். வாடைக்காலத்தில் குவிந்த வாயையுடைய கன்னலில் உள்ள குளிர்ந்த நீரைக் குடிப்பதில்லை. இதனை,

" கல்லென் துவலை தூவலின் யாவரும்
தொகுவாய்க் கன்னல் தண்ணீர் உண்ணார்" (நெடு: 64-65)

எனக்கூறுவார். இதன்வழி நீர் குளிர்ந்த தன்மையுடையதாக இருப்பதற்குக் கன்னல் பயன்படுத்தப் பெற்றதை அறியலாம்.

## சாடி

இது ஒருவகை மண்பாண்டமாகும். பண்டைக்கால மக்கள் கள்ளை நிரப்பி வைத்துக் கொள்ளப்பயன்படும் பாண்டமாகச் சாடியைப் பயன்படுத்தியுள்ளனர்.

இச்சாடி குறித்த செய்தி, தொகை நூல்களில் அக இலக்கியங்களாகிய அகநானூற்றிலும், நற்றிணையிலும் இடம்பெற்றுள்ளது. அகப்புற இலக்கியமாகிய பரிபாடலிலும், பாட்டுநூல்களில், பெரும்பாணாற்றுப்படையிலும் சாடி என்னும் சொல் பயின்று வந்துள்ளது.

கள்ளினைக் காய்ச்சுவதற்கும், அதனைப்பதப்படுத்தி எடுத்துவைப்பதற்கும் இச்சாடி பயன்பட்டுள்ளது. இதனை,

" நன்மரம் குழீஇய நனைமுதிர் சாடிப்
பன்னாள் அரித்த கோஒ யுடைப்பின்" (அகம்:166:1-2)

என்று அகநானூறும்,

"மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவும் " (புறம்:113:1)

என்று புறநானூறும் சுட்டுகின்றன. மேற்கண்ட பாடல்கள் மூலம் மதுவிருந்த சாடியை வாய் திறக்கப் பயன்படுத்தியுள்ளனர் என்பது புலனாகும்.

"வல்வாய்ச் சாடியின் வழைச்சுற விளைந்த" (பெரு.280)

அ∴தாவது வலிய வாயினையுடைய சாடியின் கண்ணே இளமையறும்படி முற்றின கள் என்று கள் வைக்கப்பெறும் சாடி குறிக்கப்பெறுகின்றது.

'மட்டுவாய் திறப்பவும்' (புறம்:113:1) என்பதில் உள்ள 'மட்டு' என்பது கள்ளைக் குறிக்கும். இது ஆகுபெயராய் கள் நிறைந்திருக்கும் சாடிக்கு ஆகிவந்துள்ளது. மேலும் பரிபாடலில்,

"காரிகைநீ ரேர்வயற் காமக் களிநாஞ்சில்

மூரி தவிர முடுக்கு முதுசாடி" (பரி: 20: 53-54)

என்று குறிக்கப்பெறுவது, 'கள்ளைப் பலகாலம் சாடியினுள் பெய்து வைப்பதால் ஏற்பட்ட பெயராகும்.

கள்ளை ஊற்றி வைத்துக்கொள்வதற்கு மட்டுமல்லாமல் வீட்டின் முற்றத்தில் நீரை முகந்து வைப்பதற்கும் சாடியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

" செங்கட் சின்னீர் பெய்த சீறில்

முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி" (புறம்: 319:2-3)

என்னும் அடிகள் சுட்டும். இச்சாடியின் வடிவம் குறித்த செய்தியைப் பாடல்கள் வாயிலாக அறிய இயலவில்லை என்றாலும், மண்ணால் இயன்றதாகவும், மூடியுடன் கூடியதாகவும் அமைந்திருக்க வேண்டும். இது கள் நிறைத்து வைப்பதற்கும், நீர் முகந்து வைப்பதற்கும் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

## மண்டை

தமிழகராதி மண்டை என்பதற்கு "இரப்போர் கலம்" [16] என்று பொருளுரைக்கின்றது. இது "அடி குவிந்து வாய் விரிந்திருப்பது"[17] என்று பொருள் விளக்கம் அளிப்பர் உரையாசிரியர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. இம்மண்டை குறித்த செய்திகள் எட்டுத்தொகையில் உண்டு. பாட்டு நூல்களில் இல்லை. தொகை நூல்களுள் அக இலக்கியங்களில் நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களிலும், புற இலக்கியங்களில் புறநானூற்றில் பன்னிரு பாடல்களில் பயின்று வந்துள்ளது. இம்மண்டை குறித்த செய்தி அக இலக்கியங்களில் குறைந்தும்,

புறநானூற்றில் மிகுந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். சங்க கால மக்களில் பெரும்பாலோர் மண்டை என்னும் கலனைப் பயன்படுத்தியுள்ளனர். இம்மண்டை மிகுதியாகப் பாணர் விறலியரோடு தொடர்புப்படுத்திக் கூறப்பெற்றுள்ளது

பாணர் விறலியர் கைகளில் தவழ்ந்த மண்டை மண்ணால் இயன்றதாகவும் இரப்போர் கலனாகவும் இருந்தது. இதனை,

"பாணர்

பசுமீன் சொரிந்த மண்டை போல" (குறு.169:4-5) என்ற உவமையால் மண்டை என்பது பிடித்த மீனை சேமித்து வைத்துக்கொள்ளும் கொள்கலனாகப் பயன்பெற்றமை விளங்கும்.

மேலும்,

"ஒருதலைப் பதலை தூங்க

............... ....... ....... .......

கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்

சுரன்முதல் இருந்த சில்வளை விறலி" (புறம்:103:1-4)

எனப் புறநானூறும் சுட்டுவதால் இம்மண்டை விறலியரின் இரப்போர் கலமாக விளங்கியமை வெளிப்படும்.

இம்மண்டை கள் நிறைத்துக் கொள்வதற்குப் பயன்பட்டதை,

" ஒரு சாரருவி யார்ப்ப ஒருசார்

பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்

வாக்க உக்க தேக்கட் தேறல் " (புறம்:115:1-3)

என்னும் அடிகள் சுட்டும். இதிலிருந்து மண்டை மூன்று விதங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. முதலாவதாக மீன் நிறைத்துக் கொண்டு செல்லவும், இரண்டாவதாகக் கள் உண்பதற்கும் பயன்படுத்தப்பெற்றுள்ளது. மூன்றாவதாக இரப்போர் கலமாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

## அகல்

தமிழ் இலக்சிகன் 'அகல்' என்பதற்குச் "சட்டி"[18] என்று விளக்கம் அளிக்கின்றது. இவ்வகல் என்னும் சொல் விசாலித்தல் (அ) விருத்தியடைதல் என்னும் பொருளினைத்தருகின்றது. அகல் என்றால் 'விரிவு' என்று பொருள். எனவே அகன்ற வாயினையும், கீழ்ப்பகுதி தரையில் வைக்கும்படியான அமைப்பினையும் கொண்ட கலன் 'அகல்' எனப்பெயர் பெற்றுள்ளது.

இவ்வகல் குறித்த செய்தி தொகை நூல்களில் புறநானூற்றிலும், பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படையிலும் இடம்பெற்றுள்ளது.

புதிய அகலில் சட்டியில் கொண்ட புலிக்கண் நிறமுடைய சூடான உணவை வெட்சி வீரர் உண்டனர். இதனை,

"புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்

ஒன்றிரு முறையிருந் துண்ட பின்றை " (புறம்: 269:4-5)

என்று புறநானூறு சுட்டுகின்றது. மேலும் கண் சுழல்வதற்கும் இவ்வகலை உவமையாகக் கூறுகின்றது. மற்றொரு பாடல். இதனை,

"அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்" (புறம்: 300 : 4)

எனச் சுட்டியுள்ளது.

அப்பம் விற்கும் வணிகர் கரிய அகலில் பாகொடு கூட்டிச் செய்த நூல் போல் கிடக்கும் இடியப்பத்தைப் பாலிலிட்டு வைப்பர். இதனை,

"காரகற் கூவியர் பாகொடு பிடித்த
இழைசூழ் வட்டம் பால்கலந் தவைபோல்" (பெரும் : 377-78)

என்னும் அடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து அகல் உணவு சமைப்பதற்கும், சமைத்ததை வைத்து உண்ணுவதற்குக் கலமாகப் பயன்படுத்தியமை விளங்கும். கரிய அகல் என்பதால் இதுகருமை நிறமுடையதாக இருந்திருக்கலாம்.

## வள்ளம்

'வள்ளம்' என்பது உண்கலமாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளது. இவ்வள்ளம் குறித்த செய்திகள் தொகைநூல்களில் மட்டும் காணப்பெறுகின்றன. இதில் அக இலக்கியமாகிய கலித்தொகையில் இருபாடல்களிலும், நற்றிணையில் ஒருபாடலிலும், அகநானூற்றில் ஒரு பாடலிலும், புற இலக்கியமாகிய புறநானூற்றில் ஏழு பாடல்களிலும் 'வள்ளம்' என்ற சொல் பயின்று வந்துள்ளது.

பால், தேறல் போன்ற நீர்மப் பொருட்களை இவ்வள்ளத்தில் பெய்துண்டுள்ளனர். பால் உண்ணப் பயனானதை,

" பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி
என்பாடுண்டனை யாயின்" (அகம்:219:5-6)

" சேடியல் வள்ளத்துப் பெய்த பால்சிலகாட்டி" (கலி: 72:3)

என்ற பாடல்களின் அடிகள் சுட்டும். இவ்வள்ளத்திற்கு 'மடார்' என்ற பிறிதொரு பெயரும் உண்டு என்பதை புறநானூற்று உரையில் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகின்றார்.

" ......... .......... .......... ....... வாம்பற்

றேம்பா யுள்ள தங்கமழ் மடருணப் " (புறம்: 383:8-9)

என்ற புறப்பாடல் அடிகளுக்கு விளக்கம் கூறுமிடத்து 'மடார்-தேறலை யுண்ணும் வள்ளம்'[19] என்கிறார். இதனைக் கொண்டு நோக்கும் பொழுது இதன் மற்றொரு பெயர் 'மடார்' என்பதை அறியமுடிகின்றது.

## தாலம்

தாலம், பிழா ஆகிய கலன்கள் உண்பதற்குத் தட்டுப் போன்று பயன்படுத்தினவைகளாகும். தால் - நாக்கு, நாக்குப் போன்று தட்டையான விரிந்த பரப்பைக் கொண்டதாக இக்கலன் அமைந்திருக்க வேண்டும். இக்கலன் குறித்த செய்தி,

" நறுநெய்க் கடலைவிசைப்பச் சோறட்டுப்

பெருந்தோடாலம் பூசன் மேவர," (புறம்: 120:14-15)

எனும் பாடலடிகளில் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இ∴து மண்ணால் இயன்றதா (அ) பனையோலையால் இயன்றதா என்பது மேலும் ஆய்விற்குரியதாகும். ஏனெனில் தாலம் என்பதற்கு 'பனை' என்ற பொருளுமுண்டு. ஆகவே பனையோலையால் விரிந்த தட்டையான தட்டுப்போலவும் வடிவமைத்துக்கொண்டிருக்க வாய்ப்புண்டு.

## பிழா

இதுவும் தாலத்தினைப் போன்று உண்கலமாகவே பயன்படுத்தப்பெற்றுள்ளது. "குற்றாத கொழியல் அரிசியை அழகினையுடைய களியாகத் துழாவியட்ட கூழை அகன்ற வாயையுடைய தட்டுப் பிழாவில் உலரும்படி

ஆற்றி”[20] என்பதால் அகன்ற வாயையுடைய தட்டினை உண்கலமாகப் பயன்படுத்தியமை விளங்கும். இதனை,

“ அசையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலரவாற்றி ” (பெரு:275-276)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் சுட்டும்.

## கறவைக்கலம்

சங்க காலத்தில் பால் கறப்பதற்குக் கறவைக்கலம் ஆயர்களால் மட்டும் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இது கறக்கும் கலமாகும். இக்கலம் நீள்வடிவத்துடனும், உட்குழிந்தும் அமைக்கப்பெற்றிருக்கலாம். இக்கலம் குறித்த செய்தி எட்டுத்தொகையில் கலித்தொகையில் ஆயர் வாழ்க்கையோடு இணைந்ததாகக் கூறப்பெற்றுள்ளது. குறுந்தொகையில் இக்கலம் உவமையாகப் பயின்று வந்துள்ளது. இதனை,

“புனத்துளா எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
இனத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ” (கலி.108:30-32)

என்று கலித்தொகை சுட்டும். இக்கறவைக்கலம் குறித்த செய்தியை,

“கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅய் ” (குறு.27:1-2)

என்று குறுந்தொகை உவமையாகக் குறித்துள்ளது. இக்கறவைக்கலம் மண்ணால் இயன்றதா? உலோகத்தால் இயன்றதா? என்பதையும், இதன் வடிவம் குறித்த செய்தியையும் அறுதியிட்டு விளக்கத்தக்க சான்றுகள் இல்லை.

## நெற்கூடு

நெல்லைச் சேமித்து வைப்பதற்குப் பயன்படுத்தப்பெற்ற புழங்கு பொருள் ‘நெற்கூடு’ என்பதாகும். இதன் பெயர் நெடுங்கூடு, தொடுகூடு என்றெல்லாம் வழங்கப்பெற்றுள்ளது. இக்கூடு நெல், வரகு முதலிய தானியவகைகளைப் பாதுகாப்பாக வைப்பதற்கே பயன்பட்டுள்ளது. இக்கூடு ஏணிக்கும் எட்டாத அளவு மிக நெடிய வடிவுடனும், மேல் பகுதி திறந்து நெல்லைக் கொட்டுவதற்கு ஏற்றாற் போல் இருந்திருக்க வேண்டும். இக்கூட்டின் உள்ளிருக்கும் நெல்லின் அளவைத் தெரிந்து கொள்வதற்குப் புள்ளிகள் இட்டுள்ளனர். இதனை,

“செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச்”. (நற்:26:2-4)

என்ற நற்றிணை அடிகள் சுட்டும். ஏணிக்கும் எட்டாத மிகவும் நீண்ட உயரமான நெற்கூடு இருந்ததை,

“ஏணியெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரிமூத்த கூடோங்கு நல்லில் “ (பெரும்.245-2247)

என்று குறிப்பிடும் பெரும்பாணாற்றுப்படை. மேலும்,

“பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்” (பெரும்:186)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிக்கு விளக்கம் கூறுமிடத்து ‘பெண்யானைத்திரள் முன்றிலில் நிற்கும் வரகு நிறைத்த குதிர்கட்கு உவமை’[21] என்பதால் குதிர்களில் வரகை நிறைத்து வைத்துக்கொண்டமை விளங்கும். இந்நெற்கூட்டை இன்றும் கிராமப்புறத்து வீடுகளில் நெல்லைப் பாதுகாப்புடன் வைத்தெடுக்கப்

பயன்படுத்துகின்றனர். ஆனால் இந்நெற்கூடு என்ற பெயர் வழக்கிழந்து குதிர்-குளுக்கை என்ற பெயரால் அழைக்கப்படுகின்றது.

## 3. இலை, நார் மரம் மற்றும் பிற

இலை, நார், மரம் ஆகியவைகளில் இயன்ற புழங்கு பொருள்கள் இல்லத்தில் பயன்படுத்தப்பெற்றுள்ளன. அவைகள் குறித்த செய்திகளை விரிவாகக் காணலாம்.

### இலை

ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை ஆகியவை இயற்கையினின்றும் கிட்டியவை. இவற்றை உண்கலன்களாகப் பயன்படுத்தியுள்ளனர்.

### ஆம்பலிலை

ஆம்பலினது அகன்ற இலையில் திரண்ட விருப்பந்தரும் சோற்றுடன், பிரம்பின் இனிப்புடன் கூடிய புளிப்பான பழத்தினைப் பெய்து பாணமகள் தன் கணவனுக்குப் பரிமாறிய செய்தியை,

"ஆம்பல் இலைய வமலை வெஞ்சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து
விடியல் வைகறை யிடூஉ மூர" (அகம் : 96:5-7)

என்ற அகப்பாடல் சுட்டுகின்றது. நெகிழ்ந்த ஆம்பலின் அகன்ற இலையில் கள்ளினை உண்ணும் உழவர்களைக் காட்டுகின்றது பின்வரும் புறப்பாடல்.

"கூம்புவிடு மென்பிணி அவிழ்ந்த ஆம்பல்

அகலடை அரியன் மந்தி "          (புறம் : 209:3-4)

இவ்வகையில் ஆம்பலிலையினைத் திட, திரவப் பொருள்களை வைத்துண்பதற்குப் பயன்படுத்தியுள்ளமை வெளிப்படும். மேலும், இவ்விலையில் கள்ளை உண்பதற்கு அதனை உட்குழிவுடையதாகச் செய்துகொண்டிருத்தல் வேண்டும்.

## தேக்கிலை

தேக்கின் இலைகளை உண்கலனாகப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை, அகநானூறும், பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. இதனை,

"புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்"          (அகம்.107:10)

"தெய்வ மடையல் தேக்கிலை குவைஇநும் "          (பெரும்.104)

எனும் பாடல் அடிகள் சுட்டுகின்றன.

இவ்வகையில் வழிநடைச் செலவின்போது மட்டுமல்லாமல் அன்றாட வாழ்விலும் தேக்கிலையைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்

அகலிலை குவித்த புதல்போல் குரம்பை

ஊன்புழுக் கயரும் முன்றிற் "          (அகம்.315:15-17)

எனும் பாடலடிகள் சுட்டும். இவற்றிலிருந்து தேக்கிலை அக்கால மக்களிடம் பெரிதும் வழக்கில் இருந்தமை விளங்கும்.

## வாழையிலை

விருந்தினர் வரும்பொழுது அவர்களுக்கு வாழை இலையில் உணவு படைப்பது இன்றும் கண்டதே. இம்முறையைப் பண்டைக்காலத்தும் மேற்கொண்டுள்ளனர். இதனை,

" வாழை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண்டு அமர்த்த கண்கள் " (நற்:120:5-6)

" செழுங்கோள் வாழையகலிலைப் பகுக்கும் " (புறம்:168:13)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

## பனையோலை

திட, திரவப்பொருள்களை வைத்துண்ணப் பனையோலையைப் பயன்படுத்தியுள்ளனர். இப்பனையோலையைத் திட திரவப் பொருள்களை வைத்துண்ணுவதற்கு ஏற்றார்போல் உட்குழிவாக்கிக் கொண்டுள்ளனர். இதனை உட்குழிவுடையதாகச் செய்வதற்கு முன்பு பதப்படுத்தியுள்ளனர். இதனை,

" குவளை உண்கணென் மகளோர் அன்ன
செய்போழ் வெட்டிப் பெய்தல் ஆயம்
மாலை விரிநிலவிற் பெயர்பு புறம் காண்டற்கு" (நற் : 271:8-10)

என்கின்றது நற்றிணை. வெயிலில் பதப்படுத்தினால் பக்குவம் குறையுமென்று மாலைப்பொழுதில் நிழலிலே உணர்த்தியதைக் குறிக்கின்றது.

புளிப்புத் தன்மையுடைய தேறலை உண்பதற்கு இப்பசுங்குடையினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"புளிப்பதனமைத்த புதுக்குட மலிர்நிறை

வெயில் வெரிந் நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடை" (அகம்:37:9-10)

என்னும் அடிகள் சுட்டுகின்றன. இவ்வகையில் உணவு உண்பதற்குப் பயன்பட்ட பனையோலைக் குடையை இன்றும் கிராமப்புறத்து மக்கள் வயற்புறங்களில் உணவு உண்பதற்கும், நுங்கு போன்றவற்றை எடுத்துச் செல்லவும் பயன்படுத்துகின்றனர்.

பனையோலை உண்கலனாகப் பயன்படுத்தப்பெற்றதோடு மட்டுமல்லாமல் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பொருட்களைக் கொண்டு செல்லப் பயன்படும் வட்டில், படுத்துக் கொள்ளப் பயன்படும் பாய், வெயில் மழை இவற்றினின்றும் பாதுகாக்கும் குடை ஆகியவைகள் செய்துகொள்ளவும் பயன்பட்டுள்ளது.

## வட்டில்

வட்டி, கடகப்பெட்டி, புட்டில், குடலை எனப் பலபெயர்களைக் கொண்டதாகத் தெரிகிறது. இதன் அமைப்பைக் கூறுமிடத்து "உட்புறம் பனங்குறுத்தாலும், வெளிப்புறம் அதன் அகணியாலும் செய்யப்படும்"[22] என்பர். அதாவது அகணி என்பது பனையின் நாரினைக் குறிக்கும். எனவே ஓலையும் நாரும் சேர்த்துச் செய்து கொண்டுள்ளனர். இதனை உழவர், பாணர், வேட்டுவர் ஆகியோர் தத்தம் தொழிலுக்குப் பயன்படுத்தியுள்ளனர். மகளிரும் பூவைப்பெய்து வைப்பதற்கு வட்டிலைப் பயன்படுத்தியுள்ளமையைச் சான்றுகளின் வழி அறியமுடிகிறது.

உழவர்கள் விதைவிதைக்கப் பயன்படுத்திய வட்டிலை விதைக்குறுவட்டில் என்று அழைத்துள்ளனர். இவ்விதைப் பெட்டியைக் குறுந்தொகை, நற்றிணை ஆகிய அக இலக்கியங்கள் விளக்குகின்றன. குறுந்தொகையில் ஒரு

பாடலில் 'விதைவிதைத்த பின்னர் மலர்ந்த முல்லை மலர்களைப் பறித்து நிரப்பிக்கொண்டு வந்துள்ளனர்' என்ற செய்தி இடம்பெற்றுள்ளது. இதனை,

"முதைப்புனக் கொன்றை ஆர்கலி உழவர்
விதைக்குறுவட்டி போதோடு பொதுளப்" (குறு:155:1-2)

என்னும் அடிகள் விளக்கும். மேலும் விதை கொண்டு சென்ற கடகப்பெட்டியில் மிகப்பலவாகிய மீன்களைப் பிடித்து வந்துள்ளனர். இதனை,

"மாறுகால் உழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் உரை " (நற் : 120:2-4)

என்ற நற்றிணை அடிகள் சுட்டும். மற்றொரு பாடலில் மறுசால் உழுததனால் ஈரம் புலராதநன்செய்யில் விதைப்பதற்கு, விதைகளை வட்டியில் கொண்டு செல்வர் என்ற செய்தி இடம் பெற்றுள்ளது. இதனை,

"அரிகால் மாறிய அங்கண் அகன்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவயின்
வித்தொடு சென்ற வட்டி" (நற்:210:1-3)

என்பார் மிளைகிழான் நல்வேட்டனார். இதிலிருந்து விதை விதைத்த பின்னர் அப்பெட்டியில் பூக்கள், மீன்கள் எனத் தமக்குக் கிடைக்கக்கூடிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு வந்தமை விளங்கும்.

பாண்மகள் மீனைக்கொணர்வதற்கு வட்டிலைப் பயன்படுத்தியுள்ளனர். என்பதை,

"முள்ளெயிற்றுப் பாணமகள் இன்கெடிறு சொரிந்த

அகன்பெறு வட்டி நிறைய மனையோள்" (ஐங். 47 : 1 - 2)

என்னும் அடிகள் சுட்டும். மேலும் பாணமகள் வரால் மீனைக் கொணர்ந்த வட்டியில் வெண்ணெல்லைப் பண்டமாற்றுச் செய்து சென்றனர் என்பதை,

"வலைவல் பாணமகன் வாலெயிற்று மடமகள்

வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்

யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கு மூர" (ஐங்:48:1-3)

என்னும் அடிகள் விளக்கும். இதிலிருந்து பாணரின் மீன் நிறைத்துக்கொள்ளும் பாத்திரமாக வட்டில் விளங்கியமை தெளிவுறும்.

வேட்டுவன் வேட்டைத்தொழிலில் வேட்டையாடிப் பெற்ற மான் தசையைக் கொண்டு வருவதற்கும் இக்கடகப்பெட்டி பயன்பட்டுள்ளது. இதனை,

"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்

மான்றசை சொரிந்த வட்டியு மாய் மகள்" (புறம் : 33:1-2)

என்பார் கோவூர்கிழார். மேலும் "பள்ளம் உண்டாகச் செய்யப்பட்ட பசிய ஓலைகுடையில் புதலிடத்து மலர்ந்த முல்லைப் பூக்களைப் பறிக்கும்" [23] என்றும், "காட்டுமல்லிகைப் பூக்கள் நிறைந்த அகன்ற வட்டியை" [24] என்றும் பாடல்கள் குறிப்பிடுவதால் பூக்களைப் பறித்துக்கொண்டு வருவதற்கும் இக்கடகப்பெட்டியைப் பயன்படுத்தியமை தெளிவுறும். ஆய்ச்சியர் மோருக்குப் பதிலாக நெல்லை வட்டியில் வாங்கிக்கொள்வர். இதனை,

"வாரிக்கூழ் வட்டி தழீஇ" (கலி:109:14)

என்பர். இவ்வகையில் உழவர், பாணர், வேட்டுவர், ஆய்ச்சியர் எனப் பற்பல தொழில் செய்பவருக்கும் இக்கடகம் பயன்பட்டுள்ளது.

## பறி

சங்கப் பாடல்கள் செல்வர் மனைகளிலும், அரண்மனைகளிலும் பஞ்சணைகளிலும், மலர் மஞ்சங்களிலும் பயன்படுத்தப்பட்டதாகக் கூறினும் எளிய மக்கள் ஓலையால் செய்யப்பெற்ற பறியைப் பயன்படுத்தியுள்ளனர் என்பது புலனாகும். இ∴து ஓலைப்பாய் ஆகும். இவ்வோலைப் பாய் குறித்த செய்தியை எட்டுத்தொகையிலுள்ள அக இலக்கியங்களாகிய நற்றிணை, அகநானூறு முதலிய இலக்கியங்கள் சுட்டுகின்றன. புற இலக்கியங்களுள் புறநானூறும் சுட்டுகின்றது.

இப்பாயை ஆயர்குலத்தவர் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"பறிப்புறத்து இட்ட பல்நொடை இடையன்" (நற் : 142:4)

"மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்" (அகம் : 94:4)

என்ற பாடல்களின் அடிகள் சுட்டும். இங்கு ஓலைப்பாயைக் குறிக்கும் சொல்லாகப் 'பறி' என்பது இடம்பெற்றுள்ளது.

பண்டைத் தமிழகத்தில் கைம்மை நோன்பு மேற்கொள்ளும் மகளிர் ஓலைப்பாயும் இன்றிப் படுத்து உறங்கினர் என்பதனை,

"பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரேம் அல்லம்" (புறம்: 246:9-10)

என்னும் அடிகள் விளக்கும். இடையர்கள் பயன்படுத்திய பறி என்று சொல்லப்பெற்ற பாய் மழை, வெயில் இவற்றினின்று பாதுகாப்புத்தரவும், படுத்துறங்கும் பாயாகவும் பயன்படுத்தப்பெற்றிருத்தல் வேண்டும்.

## ஓலைக்குடை

மழை பெய்யுமிடத்து இடைநின்று நனையாமல் காக்கும் குடைபோல என்ற பொருளில் புறநானூற்றில்,

"உறைப்புழி ஓலை போல" (புறம்: 290:7)

என்ற அடி இடம்பெற்றுள்ளது. அகநானூற்றில்,

"கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்" (அகம்: 194:7)

என்ற அடியில் தலைக்குக் குடையைச் சூடிக்கொண்ட செய்தி இடம்பெற்றுள்ளது. இதிலிருந்து மழைக்குப் பிடிக்கும் குடையாக ஓலையைப் பயன்படுத்தியதோடு மட்டுமல்லாமல் தலைக்கு அணியப்பெறும் அணியாகவும் இருந்தமை தெளிவாகிறது.

## மரத்தால் இயன்றவை

பண்டைத்தமிழர் மண்ணால் தமக்குத் தேவையான பொருட்களை வடிவமைத்துக் கொண்டதைப்போன்று, மரத்தைக்கொண்டும், தமக்குத் தேவையான புழங்கு பொருட்களைத் தாமே செய்துகொண்டுள்ளனர். திரிமரம், உரல், உலக்கை, மத்து, அம்பணம், கட்டில், தூதை ஆகிய மரத்தால் ஆன பொருட்களைப் பற்றிய செய்திகளை இலக்கியச் சான்றுகளின் வாயிலாக அறிய முடிகிறது. இனிவரும் பகுதியில் அவைகளை விளக்கமாகக் காணலாம்.

## திரிமரம்

திரிமரம் என்பது மரத்தால் செய்யப்பெற்ற மரத்திரிகையாகும். இம்மரத்திரிகை குறித்த செய்திகள் எட்டுத்தொகை இலக்கியங்களுள் அகநானூற்றிலும், பத்துப்பாட்டினுள் பெரும்பாணாற்றுப்படையிலும் இடம் பெற்றுள்ளன.

அரிசி அரைப்பதற்கு திரிமரத்தைப் பயன்படுத்தியுள்ளனர். என்பதை,

“ .... ... .. அரிசி ஏய்ப்பச்

சுழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்” (அகம்: 393:9-10)

என்றும்,

“...... ... ... மனையோள்

ஐதுணங்கு வல்சி பெய்து முறுக்குறுத்த

திரிமரம் ” (அகம்: 224:11-13)

என்றும் அகநானூற்றுப் பாடல்களில் திரிமரம் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. பெரும்பாணாற்றுப்படை இத்திரிமரத்தின் அமைப்பை, ‘யானையினது காலை ஒக்கும் வரகு திரிகை’ [25] என்று குறிப்பிடுகின்றது. இதிலிருந்து மரத்திரிகை உறுதியானதாகவும் பெரிய வடிவினதாகவும் இருந்திருக்கவேண்டும் என்பது விளங்கும்.

## உரல்

உரல் என்பது தானிய வகைகளைக் குற்றி அரிசியாக்குவதற்குப் பயன்படுத்தப்பெற்றது. இவ்வுரல் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. எட்டுத்தொகையில் அக இலக்கியமாகிய அகநானூறு, குறுந்தொகை, கலித்தொகை ஆகியவைகளும், புற இலக்கியங்களாகிய புறநானூறும், பதிற்றுப்பத்தும் சுட்டுகின்றன. பத்துப்பாட்டினுள் பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றது.

தரையில் குழியைத் தோண்டி அதனுள் புல்லரிசியைப் போட்டுக் குற்றியதை,

"நீழன் முன்றி னிலவுரற் பெய்து" (பெரும்: 96)

என்கிறது பெரும்பாணாற்றுப்படை. இ∴து இயற்கை முறையில் தோண்டப்பெற்றது.

செயற்கையாக மரத்தைக்கொண்டு செய்துகொள்ளப்பெற்ற மரஉரலின் அமைப்பை விளக்குமிடத்து, 'உரலானது யானையின் பெரிய காலைப் போன்றது' என்று இலக்கியங்கள் யானையின் காலை உவமை கூறுகின்றன. இதனை,

"உரற்கா வியானை யொடித்துண் டெஞ்சிய" (குறு: 232:4)

"உரல்போற் பெருங்கா விலங்குவாண் மருப்பிற்" (பதி: 43:3)

என்னும் இலக்கியங்களின் அடிகள் சுட்டும்.

உரலானது எவ்வகை மரத்தைக்கொண்டு செய்துகொள்ளப்பெற்றது என்பதை,

"முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்" (கலி: 40:4)

என்ற கலித்தொகைப் பாடலடிகள் சுட்டுகின்றன. சந்தன மரத்தில் உரலைச் செய்துகொண்டுள்ளனர். இவ்வகையில் மர உரல் தினை, அரிசி ஆகியவற்றைத் தீட்டப் பயன்படுத்தியுள்ளனர்.

## உலக்கை

தானிய வகைகளை உரலில் இட்டுக் குற்றுவதற்கு பயன்படுத்தப் பெற்றது உலக்கையாகும். இவ்வுலக்கை குறித்து எட்டுத்தொகையினுள் அகஇலக்கியங்களாகிய குறுந்தொகை, கலித்தொகை ஆகிய இலக்கியங்களும், புற இலக்கியங்களுள் புறநானூறும் சுட்டுகின்றன. பத்துப்பாட்டினுள் சிறுபாணாற்றுப்படையும் உலக்கை குறித்துச் சுட்டுகின்றது.

இவ்வுலக்கை வயிரம் பாய்ந்ததாகவும் கருமை நிறத்துடனும் இருந்தமையை,

"இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த"

என்று சிறுபாணாற்றுப்படை சுட்டுகின்றது. பூணிட்டு மாட்சியுறுவித்த உலக்கையால் அரிசி குற்றப்பட்டதை,

"தொடிமா ணுலக்கை பருஉக்குற் றரிசி" (புறம்: 399:2)

என்று புறநானூறு விளக்கும்.

அரிசியைக் குற்றுவதற்கு மட்டுமின்றி, அவல் இடிப்பதற்கும் வயிரம் பாய்ந்த உலக்கையைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

" பாசவல் இடிந்த கருங்காழ் உலக்கை

ஆய்கதிர் நெல்லின் வரம்புஅணைத் துயிற்றி" (குறு:238:1-2)

என்னும் அடிகள் சுட்டும்.

சந்தனமர உலக்கை பயன்படுத்தப்பெற்றதைக் கலித்தொகை,

"வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்

தேந்து மருப்பின் இனவண் டிமிர்பூதுஞ்

சந்த மரத்தின் இயன்ற உலக்கையால்" (கலி: 43: 1-3)

என்று சுட்டுகின்றது. இதிலிருந்து வயிரம் பாய்ந்த மர உலக்கை பயன்பாட்டிலிருந்தமை விளங்கும்.

## மத்து

ஆயர் மகளிரால் தயிர் கடைவதற்குப் பயன்படுத்தப்பெற்றது மத்தாகும். கயிற்றால் வலித்துக் கட்டிய மத்தினைக் கொண்டு உறையிட்டு இறுகிய தயிரைக் கடைவர், முல்லை நிலத்தில் வாழும் ஆய்ச்சியர் ஒவ்வொருவரும் இவ்வாறு இருள் புலரும் வைகறையில் தயிர் கடைதல் நடைமுறையாகும்.

இம்மத்துக் குறித்துத் தொகை நூல்களுள் அக இலக்கியங்களாகிய நற்றிணையும், அகநானூறும் சுட்டுகின்றன. புற இலக்கியங்களாகிய புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் இடம் பெற்றுள்ளது. பாட்டு நூல்களுள் பெரும்பாணாற்றுப்படையில் மட்டும் இடம் பெற்றுள்ளது.

மத்தினால் நெய்பெறும் பொருட்டுத் தயிர்கடைவதனைக் கயமனார்,

"விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேங்கால் மத்தம்
நெய்திரி யியக்கம் வெளில்முதல் முழங்கும்
வைகுபுலர் விடியல்" (நற்: 12:1-4)

என்பார்.

"சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய்" (நற்:84:6-7)

என்பார் பெருங்கடுங்கோ. மத்தின் ஒலியினைக் குறிப்பிடும் பொழுது,

"கடையலங் குரல வாள்வரி உழுவை" (அகம்:277:5)
"நாளுறை மத்தொலி " (புறம்:257:13)

"மத்து எறியமனை" (பதி:26:3)

"புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி" (பெரும்:156)

என்று மத்தின் ஒலியைக் குறிப்பிடுவர். மேலும், புலியினது இடிமுழக்கம் போன்றது 'மத்தொலி' என்று குறிப்பிடுவதால் ஒலிப்புத்தன்மை விளங்கும். இது எம்மரத்தால் செய்யப்பெற்றது என்பதற்கான செய்திகள் கிடைக்கவில்லை. இதன் அமைப்பையும் அறியமுடியவில்லை. இன்றும் 'தயிர்கடை மத்தம்' கிராமப்புறத்தில் பயன்படுத்தப்படுகின்றது.

## அம்பணம்

"அம்பணம்" என்பதற்கு உரையாசிரியர்கள் "மரக்கால்"[26] என்று பொருள் கூறுகின்றனர். மரக்கால் என்பது அளவு கருவிக்கும், அளவுக்கும் உள்ள பெயராகும். இம்மரக்கால் குறித்து எட்டுத்தொகை நூல்களுள் அக இலக்கியமாகிய ஐங்குறுநூறும், புற இலக்கியமாகிய பதிற்றுப்பத்தும் சுட்டுகின்றன.

பதிற்றுப்பத்தில் இரண்டு இடங்களில் "அம்பணம்" என்ற அளவுப் பெயர் இடம் பெற்றுள்ளது. இதனை,

" ..................... .......................மென்செந் நெல்லின்

அம்பண அளவை யுறைகுவித்தாங்குக்" (பதி:71:4-5)

"தொன்று திறைதந்த களிற்றொரு நெல்லின்

அம்பண வளவை விரிந்துறை போக்கிய" (பதி:66:7-8)

என்று பதிற்றுப்பத்தில் காணப்படும் பாடல்களின் வரிகள் 'அம்பணம்' என்ற அளவு கருவிகொண்டு நெல் அளவிடும் வழக்கம் இருந்ததைத் தெரிவிக்கின்றது.

ஐங்குறுநூறு "அம்பணம்" என்ற அளவு கருவியினை ஆமையின்வடிவத்துடன் ஒப்பிட்டுக் கூறுகிறது.

"அம்பணத்தன்ன ஆமை ஏறி
செம்பினன்ன பார்ப்புப் பலதுஞ்சும்" (ஐங்:43:1-2)

எனவரும் ஐங்குறுநூற்றுப்பாடல் வரிகளுக்குக் கழக உரையாசிரியர் உரை கூறுமிடத்து "அம்பணம்-மரக்கால்-ஓர் அளவுக் கருவி. இதனால் பண்டைக் காலத்து ஆமை போன்ற உருவமுடையதாயிருந்தது என உணரலாம்"[27] என்று கூறுகின்றனர். தற்பொழுது குண்டு மரக்கால் என்று கூறப்படும் ஒருவகை மரக்கால் சில இல்லங்களில் உள்ளது. இதனைக் கவிழ்த்து வைத்தால் ஆமையின் மேல் அதன் பார்ப்பு ஏறிப்படுத்திருந்தால் என்ன தோற்றம் உடையதாயிருக்குமோஅதை ஒத்த தோற்றத்துடன் காணப்படும். எனவே இம்மரக்கால் அன்று மரத்தால் செய்து கொள்ளப்பெற்றதால் இப்பெயர் பெற்றிருத்தல் வேண்டும்.

## 4) உலோகத்தால் இயன்றவை

பண்டைத் தமிழர் பல்வகை உலோகங்களைப் பயன்படுத்தித் தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்துகொண்டனர். பொன், வெள்ளி, இரும்பு, செம்பு ஆகிய உலோகங்களைக் கொண்டு தங்களுக்குத் தேவையான பாத்திரங்களைச் செய்துகொண்டுள்ளனர். இதனைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளமையை இனிவரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

## பொன் கலங்கள்

பொன்னால் இயன்ற கலங்கள் "பொற்கலம்" அல்லது "பொலங்கலம்" என்று அழைக்கப்பெற்றுள்ளது. செல்வந்தர் இல்லங்களில் பயன்படுத்தப்பெற்ற கலன்கள் அனைத்தும் பொன்னால் இயன்றவையாகும். அரசர் தான் உணவு மற்றும் தேறல் உண்பதற்கும், தன்னைநாடி வந்த விருந்தினர்க்குத் தேறலை ஊற்றிக் கொடுப்பதற்கும் உணவு படைப்பதற்கும் பொற்கலனைப் பயன்படுத்தியுள்ளனர்.

இப்பொற்கலங்கள் குறித்த செய்திகள் எட்டுத்தொகையில் அகஇலக்கியங்களில் குறுந்தொகையில் ஒருபாடலிலும், நற்றிணையில் ஒருபாடலிலும், ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும், புற இலக்கியமாகிய புறநானூற்றில் இரண்டு பாடல்களிலும், பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்களிலும் இடம்பெற்றுள்ளன.

அரசர்கள் பொற்கலத்தினிலே கள்ளுண்டு இன்புறுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை,

"பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரிதேறல் மாந்தி மகிழ் சிறந்து" (புறம் : 367:6-7)

என்ற அடிகள் சுட்டும். மேலும், தம்மை நாடிவரும் இரவலர்க்கும் பொற்கலத்திலேயே உணவிட்டுச் சிறப்புச் செய்துள்ளனர். இதனை,

"தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்
கோண்மீன்ன பொலங்கலத்து அளைஇ" (புறம் : 392:16-17)

என்னும் புறப்பாடலடிகள் விளக்கும்.

கரிகாலனுடைய அரண்மனையிலிருந்த பணிப்பெண்டிர், அரசனுக்கும் அவனுடைய விருந்தினர்க்கும் பொற்கலத்தில் கள்ளை ஊற்றிக் கொடுத்தனர் என்பதை,

"இழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட" (பொரு.85-87)

என்னும் அடிகள் சுட்டும்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பொலங்கலத்தில் மணங்கமழ் தேறலைப் பருகினான். இதனை,

"இலங்கிழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய
மணங்கமழ் தேறல் மடுப்பநாளும்" (மது.779-780)

என்று குறிப்பிடுகின்றது மதுரைக்காஞ்சி. நல்லியக்கோடன் அரண்மனையில் பாணர்போன்ற விருந்தினர்க்கும் பொற்கலம் உண்கலமாக இருந்தமையை உணர்த்துகிறது. பல்வேறு சுவையுடன் உணவு வகைகளைக் கோள்கள் சூழ இருந்த இளஞாயிற்றை இகழும் தோற்றமுடைய பொன்னாலியன்ற உண்கலன்களிலிட்டு வழங்கினான். இதனைச் சிறுபாணாற்றுப் படை,

"............ பல்வேறு அடிசில்
வாணிற விசும்பில் கோண்மீன் சூழ்ந்த
இளங்கதிர் ஞாயிறு எள்ளுந் தோற்றத்து
விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி" (சிறு:241-244)

எனப்பாடுகின்றது. இவ்வகையில் அரசர்களின இல்லத்தில் புழங்கிய கலங்கள் பொன்னால் செய்து கொள்ளப்பெற்றவை என்பது விளங்கும்.

அரசர்களுக்கு அடுத்த நிலையில் வாழ்ந்த செல்வந்தர்களும் பொன்னாலியன்ற கலத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். பாலை உண்பதற்குரிய உண்கலமாகப் பொன்கலம் பயன்பட்டதை நற்றிணை, குறுந்தொகைப் பாடல்கள் சுட்டுகின்றன. இதனை,

"பிரசங்கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப
புடைப்பின் சுற்றும்" (நற் : 110:1-3)

என்ற நற்றிணை அடிகளும்,

"செம்பொற் புனைகலத் தம்பொரி கலந்த
பாலும் பலவென உண்ணாள்" (குறு.: 356:6-7 )

என்ற குறுந்தொகை அடிகளும் சுட்டும். மேலும் ஐங்குறுநூற்றில் உடன்போக்கில் சென்ற என் மகள் மீண்டு வரக்கரைந்தால் காகமே உனக்கு ஊன் கலந்து ஆக்கிய உணவினைத் தருவேன்[28] என்று கூறுவதாக அமைந்துள்ளது. இதனை,

"பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ" (ஐங்.391: 3-4)

என்ற அடிகள் சுட்டும். இவற்றைக் கொண்டு நோக்கும் பொழுது அரசர், செல்வந்தர் குடிகளில் திட, திரவப் பொருட்களை உண்பதற்குரிய உண்கலங்களாகப் பொற்கலங்கள் இருந்தமையை அறிய முடிகிறது.

பொன்னாலாகிய கலங்களைப் பொற்கலம், பொலங்கலம் ஆகிய சொற்களால் சங்கப் புலவர்கள் குறித்துள்ளனர். புறநானூற்றில் இச்சொற்களின் ஆட்சி சற்றுக்கூடுதலாக உள்ளது. இச்சொல்லிற்கு உரைகூறும் பொழுது புறநானூற்று உரையாசிரியர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை 'வள்ளம்' என்று பொருள் விளக்கம் தருகின்றார். அதாவது பொற்கலம், பொலங்கலம் என்பதற்குப் 'பொன்னாலியன்ற வள்ளம்' என்றும் கூறுவார்.

## பசும்பொன்மண்டை

மண்ணாலியன்ற மண்டை குறித்த செய்தி முன்பே விளக்கப்பெற்றுள்ளது. இங்கு பொன்னாலியன்ற மண்டை குறித்துக்காணலாம். அரசர்கள் தம் இல்லத்தில் பொன்னாலியன்ற மண்டையைப் பயன்படுத்தியுள்ளனர். இம்மண்டை குறித்த செய்தி எட்டுத் தொகையில் புறநானூற்றில் மட்டும் இடம்பெற்றுள்ளது. வேந்தன் கள் உண்பதற்கு இம்மண்டை பயன்பட்டதை,

"வேந்தற் கேந்திய தீந்தண் ணறவம் " (புறம் : 292:1)

என்னும் அடி விளக்கும். இங்கு பொன்னாலியன்ற மண்டை குறித்த செய்தி நேரடியாக இடம்பெறவில்லை. விளக்கம் கூறுமிடத்துப் பசும்பொன் மண்டை என்று குறிக்கப்பெற்றுள்ளது. மற்றொரு பாடலில் அரசர்கள் பாசறையிலே தம்மிடம் வேலை செய்யும் வீரர்களுக்கு, மிக்க அன்பால் அவர்களுக்குண்டான பசும்பொன் மண்டையிலே உணவிட்டுச் சிறப்புச் செய்யும் தன்மையை,

"மூதிலான ருள்ளுங் காதலின்
தனக்கு முகந்தேந்திய பசும்பொன் மண்டை" (புறம் 289: 5-6)

என்ற புறப்பாடல் எடுத்துக்காட்டுகின்றது. இதிலிருந்து பொன்னாலியன்ற மண்டையைப் 'பசும்பொன் மண்டை' என்று வழங்கியமை வெளிப்படும்.

## வெள்ளிக்கலம்

வெள்ளியாலான கலம் (பாத்திரம்) உண்கலமாகவும் பயன்பட்டது. அது சிறியதாகவும் இருந்தது. பெரியதாகவும் இருந்தது. சிறிய வெள்ளிக்கலங்கள், பிள்ளைகள் உணவு உண்ணப்பயன்பட்டது. பெரிய வெள்ளிக்கலங்கள் பெரியவர்கள் உணவு உண்ணப் பயன்பட்டன. திரையன் அரண்மனையில் இவ்வெள்ளிக்கலன்கள் பயன்படுத்தப்பெற்றதை,

"மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை நோக்கிய முகனமர்ந்து
ஆனா விருப்பிற் றானின் றூட்டி
மங்குல் வானத்துத் திங்கள் ளேய்க்கும்" (பெரும் : 476-80)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் விளக்குகின்றன. இதிலிருந்து, வெள்ளியால் இயன்ற கலன்கள் செல்வந்தர்களால் மட்டும் பயன்படுத்தப்பெற்றது என்பது விளங்கும்.

## மணிக்கலம்

மணிகள் பதித்து அழகுடன் செய்துகொள்ளப்பெற்ற கலங்கள் 'மணிக்கலம்' எனப் பெயர் பெற்றன. இஃது நீலமணி போன்ற நிறமுடையதாக இருந்தமையால் நீலப்பைங்குடம் என்றும், மணிக்கலம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இக்கலத்தினைத் தேறலைப் பெய்து வைப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர்.

இக்கலம் குறித்துத் தொகைநூலில் அக இலக்கியமாகிய குறுந்தொகையும், புறஇலக்கியங்களாகிய புறநானூறும், பதிற்றுப்பத்தும் சுட்டுகின்றன. பாட்டு நூலினுள் பெரும்பாணாற்றுப்படை விளக்குகின்றது.

இக்கலம் தேறலைப்பெய்து வைப்பதற்கே மிகுதியும் பயன்பட்டுள்ளது. இதனை,

"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன" (குறு: 193.1)

"மணிக்கல ணிறைந்த மணநாறு தேறல்" (புறம்: 397:14)

என்ற பாடலடிகள் உணர்த்தும். மேலும்,

"மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்" (பதி: 30:2)

என்று நெய்தற்பூவிற்கு மணிக்கலம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

கமுகின் கண்சூழ் முதிர்ந்த மடலையுடைய இடத்தைக் கூறுவதற்கு,

"சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடந் தொலைச்சி" (பெரும்: 381-82)

என்று குறிக்கப்பெற்றுள்ளது. இதனால் வண்ணம் ஏற்றிய கலன்களும் அக்காலத்தில் பயனில் இருந்தன என்பதை அறியலாம். இவை அக்காலத்திய மக்களிடமிருந்த கைவண்மையையும், அழகுணர்ச்சியையும் வெளிப்படுத்துகின்றன.

## இரும்பால் இயன்றவை

உலோகங்கள் அனைத்திலும் மிக உறுதியானதும் உபயோகமுள்ளதுமான உலோகம் இரும்பாகும். இவ்விரும்பைக்கொண்டு தங்களுக்குத் தேவையான வீட்டுப்பயன்பாட்டிற்குரிய பொருட்களைச் செய்து

வந்துள்ளனர். விளக்கு, எ்.கு, மயிற்குறை கருவி, ஊசி, காழ் ஆகிய புழங்குபொருட்கள் குறித்த செய்திகள் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

## விளக்கு

இரவு நேரத்தில் வெளிச்சம் ஏற்படுத்த விளக்குகள் பயன்படுத்தப் பட்டுள்ளன. அவ்விளக்குகள் இரும்பிலே செய்யப்பட்டிருந்தன. நெடுநல்வாடை பாடல் வரிகளில் மாலைப்பொழுதறிந்து இரும்பினால் செய்யப்பட்ட விளக்கில் திரி பொருத்தி ஒளி உண்டாக்கி நெல்லும், மலரும் தூவிக் கைதொழுது மகளிர் வழிபட்டனர். இதனை,

"... ... ... ... பொழுதறிந்து
இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ
நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது" (நெடு:41-43)

என்னும் அடிகள் சுட்டும். இக்கூற்றின் வாயிலாகப் பழந்தமிழகத்திலே இரும்பில் விளக்குகள் செய்யப்பெற்றமை தெரியவருகிறது.

## எ்.கு

சங்க இலக்கியங்களில் இரும்பு, எ்.கு ஆகிய சொற்கள் பயின்று வந்துள்ளன. இச்சொற்கள் கத்தியைக் குறிப்பதாகும். இக்கத்தி குறித்த செய்தி இலக்கியங்களில் பதிவாகியுள்ளது. மயிற்குறை கருவி, ஊசி, காழ் ஆகியன இரும்பாகிய உலோகத்தால் செய்யப்பெற்றமை புலனாகிறது.

## மயிற்குறை கருவி

கூந்தலை வெட்டிக் குறைப்பதற்குப் பயன்படுத்திய கருவியும் எ்.கு என இலக்கியத்தில் சுட்டப்பெற்றிருக்கின்றது. இக்கருவி பற்றிய செய்தி,

எட்டுத்தொகையில் அக இலக்கியங்களுள் கலித்தொகையிலும் புற இலக்கியங்களுள் பதிற்றுப்பத்திலும், பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படையிலும் இடம் பெற்றுள்ளன.

பாலைக்கலியில் கருமையான நீண்ட மணற்பரப்பைக் கூறும்பொழுது மயிரை வெட்டுவதற்குக் 'கத்திரிகை நுழைந்தது போல இருக்கும்' என்ற உவமை மூலம் விளக்குகிறார். இம்முறையில் இக்கருவியைக் 'கத்திரிகைக் கருவி' என அறியலாம். இதனை,

"எ∴கிடை தொட்டகார்க் கருவிபெற்ற ஐம்பால் போல்
மையற விளங்கிய நுண்மணல்" (கலி: 32:1-2)

என்ற பாடல் அடிகள் சுட்டும். அ∴தாவது கூந்தலை எ∴கு (கத்திரிகை) இடையிலே தீண்டப்பெற்றது என்று கூறுகின்றார். இவ்வகையில் கத்திரிக்கோல் கூந்தலை வெட்டிக் குறைப்பதற்குத் தொகை நூல்களில் அக இலக்கியங்களில் அகநானூற்றிலும், புற இலக்கியங்களில் பதிற்றுப்பத்திலும், அகப்புற இலக்கியமாகிய பரிபாடலிலும் இடம்பெற்றுள்ளன.

"மாவடுவை அறுப்பதற்கு எ∴கு பயன்பட்டமையை,
செய்வினைக் ககன்ற காலை யெ∴குற்
றிருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவி னறுவடி போலக் காண்டொறு" (அகம்:29:5-7)

என்ற அடிகள் சுட்டும். அ∴தாவது கத்தியால் அறுக்கப்பெற்று இருபிளவாகிய மாவடுப்போல் என்று குறிக்கப்பெறுகின்றது.

"இரும்பீர் வடியொத்து மைவிளங்குக் கண்ணொளியால்" (பரி: 7:58)

என்றும் வரும் அடிகளிலும் மாவடுவினை அறுக்க எ∴கு பயன்படுத்தப்பெற்றமை விளங்கும். பதிற்றுப்பத்துப் பாடல்களில் இறைச்சியை வெட்டும் செய்தி கூறப்பெற்றுள்ளது. ஊனுடை இறைச்சியை வெட்டுவதற்குப் பயன்படுத்தப்பெற்றமை,

"எ∴குறச் சிவந்த ஒனத் தியாவரும்" (பதி: 24:20-22)

"எ∴கு போழந் தறுத்த வானிணக் கொழுங்குறை" (பதி: 12:16)

"எ∴கா டுணங் கடுப்ப....... " (பதி: 67:17)

என்னும் பாடல்களின் வரிகள் மூலம் விளங்கும். மேலும் இரும்பு என்றும் குறிக்கப்பெறுவதால் கத்திபோன்று இப்பொருள் பயன்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்துப் பாடல்களில் செல்வக்கடுங்கோ வாழியாதனின் நால்வகைப் படைகளுள் குதிரைப்படையிலுள்ள குதிரைகளின் பிடரி மயிரை மட்டம் செய்யும் கருவி கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பெறுகிறது.

"எ∴குபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ" (பதி: 62:3-4)

என்று குறிக்கின்றது. மேலும் மருதக் கலியில் மருதனிளநாகனாரும் இக்கருவியை உவமையாக்கியுள்ளார்.

தலைவி, தலைவனின் பரத்தை ஒழுக்கத்தைக் கூறும்பொழுது நீ ஏறின குதிரைதான் யானறிந்தேன்: அதனைக்கேள், ஐம்பாற் பகுதி நீங்காத ஐந்து வகையினையுடைய கூந்தலாகிய பல மயிர்களைப் பலகாலும் கத்திரிகையிடுங் கேசாரியின் மயிரினையும் மயிர் முடியின் மேலே விரித்து நிலைபெறுத்தின துஞ்சாகிய சிவந்த தலையாட்டத்தினையும்[29] - என்று உரையாற்றுகின்றாள். இதில் பரத்தையைக் குதிரையாக்கிக் குதிரையின் பிடரி மயிரினைக் கொய்யக் கத்திரிகை பயன்பட்டது என்று நச்சர் உரைக்கின்றார்.

பொருநராற்றுப்படை காதுக்கு உவமையாக மயிற்குறை கருவியைக் குறித்துள்ளது. இதனை,

"மயிற்குறை கருவி மாண்கடை யன்ன" (பொரு: 29)

என்கின்றது. இங்கு கத்திரியின் காதைப் பெண்ணின் காதுக்கு உவமை சொல்வதால், கத்திரிக்கோல் அடிப்பகுதி இரண்டு உறுப்பாக இருந்திருக்கின்றது என்பது தெரிகின்றது. இவ்வாறு, உவமையாகப் பாடியிருப்பதால் மக்கள் வழக்கில் 'கத்திரிகை' என்ற கருவி மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டிருப்பது விளங்கும். இவ்வாறு, சங்கப்புலவர்கள் மகளிர் கூந்தலைக் குறைத்துச் சரிசெய்வதற்கும், விலங்குகளின் மயிரினைக் குறைக்கவும் மயிற்குறை கருவி என்ற கத்திரிகை பயன்பட்டிருப்பதனை எடுத்துரைக்கின்றனர். காதின் வடிவத்தை உணர்த்த இக்கருவி உவமையாகக் கூறப்பெற்றுள்ளதால் காது போன்ற வடிவம் இக்கத்திரிகை கருவிக்கு இருந்திருக்கலாம் என்பதை அறியமுடிகின்றது.

## ஊசி

'ஊசி' என்னும் இக்கருவி பண்டைக் காலத்தில் பயன்படுத்தப் பெற்றதற்கான சான்றுகள் அகம், புறம், பதிற்றுப்பத்து ஆகிய நூல்களில் காணப்படுகின்றன. ஊசி கட்டில் கட்டப் பயன்பட்டுள்ளது. இதனை,

"கட்டி னிணக்கு மிழிசினன் கையது
போழ்தூண் டுசியின் விரைந்தன்று" (புறம்: 40:2-4)

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. இவ்வூசி, வீரர் மார்பின் புண்களை இழைகொண்டு தைக்கப் பயன்பட்டுள்ளது. இதனை,

"மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்

சீரல்பெயர்ந் தன்ன நெடுவள் ஊசி

நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்" (பதி: 42:2-4)

என்னும் அடிகள் விளக்குகின்றன. இப்பாடலில் ஊசியின் தோற்றத்திற்கு மீன்கொத்திப் பறவையின் அலகு உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. இவ்வகையில் புண்களை இழைகொண்டு தைப்பதற்குப் பயன்பட்ட ஊசி துருஇல்லாமல் வளவளப்பாகக் கூர்மையாக இருந்திருத்தல் வேண்டும். ஆகவே, இவ்வூசி துருப்பிடிக்காத இரும்பினால் செய்யப்பெற்றிருத்தல் வேண்டும்.

அகநானூற்றில் இரண்டு பாடல்களில் ஊசி குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. ஒன்று அரத்தினால் அராவப்பட்ட ஊசியின் திரண்ட நுனி போன்றது செந்நாயின் திண்ணிய பல்[30] என்பதாகும். மற்றொன்று மகளிர் கண்களைப்போன்ற செங்கழுநீர்ப் பூக்களை ஊசியால் கோத்துச் சுற்றிக் கட்டிய மாலையைத் தலைவன் அணிந்திருந்தான்.[31] என்ற செய்தியாகும். இவற்றைக் கொண்டு நோக்கும்பொழுதும் அரத்தினால் அராவப்பட்டது என்பதால் ஊசி இரும்பிலே செய்யப்பெற்றது என்பது தெளிவாகும். எனவே கட்டில் கட்டுவதற்கும், புண்களை இழைகொண்டு தைப்பதற்கும் ஊசி என்ற கருவி பயன்பாட்டில் இருந்தமையைச் சான்றுகளின் வழி அறியலாம். எனவே, இவ்வூசி ஒரே ஊசியா! வேறுவேறு வகையினதா! என்பது மேலும் ஆய்விற்குரியதாகும்.

## காழ்

கடினத்தன்மை, தண்டுவடிவம், முதிர்ச்சி, கருமை[32] என்ற பல பொருள்களைக்கொண்டது இச்சொல். இதில் கடினத் தன்மையையும், கருமை

நிறத்தையும் கொண்ட இரும்புக்கம்பியே 'காழ்' எனப்பெயர் கொண்டது. இக்கம்பியில், இறைச்சியைக் கோர்த்துச் சுட்டு உண்பதற்காக பயன்படுத்தியுள்ளனர். இதனை, எட்டுத் தொகையில் புறநானூறும், பத்துப்பாட்டினுள் பொருநராற்றுப்படையும் குறிப்பிட்டுள்ளன.

ஆட்டுக்கிடாயை அறுத்துச் சூட்டுக்கோலிற் கோத்துச் சுட்ட சூட்டிறைச்சியைச் சமைத்து உண்டனர். இதனை,

"விடை வீழ்த்துச் சூடு கிழிப்ப" (புறம்: 366:18)

".... .... ...... தண்டிக்
காழிற் சுட்ட கோமூன் கொழுங்குறை" (பெரும் 104-105)

என்ற பாடல்களின் அடிகள் சுட்டும். இங்கு, இரும்புக்கம்பியைக் 'காழ்' என்றதுடன் 'சூட்டுக்கோல்' என்றும் சுட்டப்பெற்றுள்ளது. இதனால் இறைச்சியைப் பக்குவப்படுத்தி உண்பதற்கு இரும்புக்கம்பியால் ஆன காழ் என்ற கருவி வழக்கில் இருந்தமையை அறியமுடிகிறது.

## செப்பு

'செப்பு' என்பது ஒருவகைப் பாத்திரமாகும். தமிழ்ச்சொல் அகராதி இதனைக் கிண்ணம்[33] எனக் குறிக்கின்றது. இச்செப்பு இரு வடிவங்களையுடையதாக வழக்கத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒன்று வாயகன்ற கிண்ணமாகும். மற்றொன்று குடுவை வடிவிலானதாகும். இச்செப்புக் குறித்த செய்திகள் எட்டுத்தொகை இலக்கியங்களில் அகஇலக்கியங்களாகிய அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் மதுரைக் காஞ்சியில் மட்டும் இடம் பெற்றுள்ளது. செப்பு என்பதற்குச் 'செம்பினாற் செய்த

நீர்க்கலம்'[34] என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுவர். இக்கருத்திலிருந்து செப்பு, செம்பு என்ற உலோகத்தால் ஆக்கப்பெற்றமை தெரிய வருகிறது.

வாயகன்றும், அடிப்பகுதி மிகவும் குறுகியதாக அமைந்திருக்கும் செப்புக்கிண்ணத்தின் அமைப்பினை,

"கூழையுங் குறநெறிக் கொணடன முலையும்
சூழி மென்முகஞ் செப்புடன் எதிரின" (அகம்:315:1-2)
"கொம்மை வரிமுலை செப்புடன் எதிரின" (குறு: 159.4)

என்னும் அடிகளின் வழி அறியலாம்.

மூட்டு வாயால் மாட்சிமைப்பட்ட செப்பினுள் வைக்கப்பட்டுத் தனித்தனவாக இருந்த சூடப்படாத பூக்களைப் போன்று தலைவி உடல் மெலிந்தாள்.[35] என்பதும், பூச்செப்பில் பயன்படாது தங்கிய மாலை போன்ற நாங்கள்[36] என்பதும் செப்பினைப் பற்றிச் செப்புகின்றன. இவற்றைக் கொண்டு நோக்கும்பொழுது, இச்செப்புப் பாத்திரம் குடுவை அமைப்பில் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகும்.

அக்கால மக்கள் அறிவியல் நுட்பத்தை அறிந்தவர்களாகவும் இருந்துள்ளனர். முன்பனிக் காலத்தில் உரித்தான விரும்பத் தகுந்த வெப்பத்தையுடைய நீரினைச் சேமித்து வைப்பதற்காகச் சேமச் செப்பு எனும் கலத்தினை வடிவமைத்து வைத்திருந்தனர். இதனை,

"அற்சிறை வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச்செப்பில் பெறிஇயரோ அன்னை" (குறு. 277:4-5)

எனச் சுட்டுவர். இது தற்காலக் குடுவையின் (Flask) பயன்பாட்டினை ஒத்துள்ளது என்பதனையும், இது தாமிரம் போன்ற உலோகத்தினால் செய்துகொள்ளப் பெற்றிருக்க வேண்டும் என்பதையும் உணரமுடிகின்றது.

செம்பைப் பயன்படுத்திப் பானை செய்து கொள்ளப் பெற்றதை,

"மண்தினி ஞாலம் விளங்க கம்மியர்
செம்புசொரி பானையின் மின்னிஎவ் வாயும்" (நற்: 153:2-3)

என்பார் தனிமகனார். எனவே செம்பைப் பயன்படுத்தி செப்பு, செம்புப் பானை ஆகியவைகளைச் செய்துகொண்டுள்ளமை விளங்கும்.

## தொகுப்புரை

தனிக்குடும்பத்தை மையமிட்ட இல்லத்தில் (வீடு) புழங்கு பொருட்கள் பலவாக அமையும். சமைத்தல், பரிமாறுதல், சேமித்தல், எறியூட்டுதல் போன்ற செயல்களோடு புழங்கு பொருள்கள் தொடர்பு பெறுகின்றன. அப்புழங்கு பொருட்களை கல், மண், இலை, நார், மரம், உலோகம் ஆகியவைகளோடு இயைபுபடுத்தி வகைப்படுத்தலாம்.

கல்லால் ஆன புழங்குபொருள்கள் பற்றிய செய்திகள் விரிவாகக் கிடைக்கவில்லை. கல்லால் இயன்ற உரல் பற்றிய குறிப்பு மட்டும் கிடைக்கின்றது. மூங்கில்-நெல், வெண்ணெல் ஆகியவற்றைக் குற்றுவதற்கு இவ்வுரல் பயன்பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

மண்ணால் இயன்றவைகளில் சுடப்பெற்ற மட்பாண்டங்கள் நீடித்திருக்கும் என்ற கருத்துப் பண்டைக்காலத்தில் நிலவி இருக்கின்றது. குழிசி, மிடா, தசும்பு, குடம், கன்னல், சாடி, மண்டை, அகல், வள்ளம், குதிர், தாலம், பிழா, கறவைக்கலம் ஆகிய மண்ணால் இயன்ற பொருட்களைக் குறித்த செய்திகள் கிடைக்கின்றன.

பானையைக் குறிக்கும் 'குழிசி' என்ற சொல் சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. 'குழி' என்பது பள்ளமாகும். குழிவான அமைப்புக் கொண்ட பானை குழிசி எனப்பெயர் பெற்றதாகலாம். இச்சொல் அகஇலக்கியங்களைவிடப் புற இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளமையை அறிய முடிகின்றது. இதனை உணவு சமைப்பதற்கும், தயிர் கடைவதற்கும் பயன்படுத்திய நிலை தெரியவருகிறது. மேலும் ஊர்த்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் குடஓலைமுறையில் இக்குழிசி உதவியிருக்கின்றது.

'மிடா' எனப்பெறும் சோறு சமைக்கும் பானை 'மடா' என்றும் அழைக்கப்பெற்றிருக்கின்றது.

பால், தயிர், கள் ஆகியவற்றை நிறைத்து வைப்பதற்குத் தசும்பு, குடம் ஆகியவை பயன்படுத்தப் பெற்றமையை இலக்கியச் சான்றுகளின் வழி அறியமுடிகிறது. இவை பிறைத்துளி இட்டு தோய்த்தற்குரிய கலனாகப் பயன்பெற்றமையை அறியமுடிகிறது.

'கன்னல்' என்னும் நீர்க்குடம் பற்றி அக இலக்கியங்களில் குறிப்புகள் கிடைக்கின்றன. 'கன்னல்' என்னும் கரகம் பற்றித் தொல்காப்பியத்திலேயே

குறிப்புக்கிடைக்கின்றது. இதனைக் குறுநீர்க்கன்னல் என்ற பெயரில் காலத்தை அளந்தறியும் நாழிகை வட்டிலாகவும் பயன்படுத்தியுள்ளனர். மேலும், நீர் குளிர்ந்த தன்மையுடையதாக இருக்க இக்கன்னல் உதவியுள்ளது.

மூடியுடன் கூடியதாக ‘சாடி‘ என்ற கலன் அமைதிருக்கின்றது. கள்ளை நிறைத்து வைத்திருப்பதற்கும், நீர் முகப்பதற்கும் கலனைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

மீன் நிறைத்துக்கொள்வதற்கும், கள் உண்பதற்கும், இரப்பதற்கும் ‘மண்டை‘ என்னும் கலன் பயன்படுத்தப்பெற்றது. குறிப்பாகப் பண்டைக்காலத்தில் பாணர், விறலியர் போன்றோர் மண்டையை மிகுதியாகப் பயன்படுத்தியமை புலனாகிறது.

புளிப்புத்தன்மையுடைய பொருட்களை வைத்துக்கொள்ளக் ‘காடி’ என்னும் கலனைப் பயன்படுத்தியுள்ளனர்.

அகன்ற வாயினையும் கீழ்ப்பகுதி தரையில் வைக்கும் படியான அமைப்பினையும் கொண்ட கலன் அகலாகும். ‘கரிய அகல்‘ என்பதால் கருமை நிறத்ததாக இருந்திருக்கவேண்டும். இது உணவு சமைப்பதற்கும், சமைத்ததை வைத்து உண்ணுவதற்கும் பயன்பெற்றுள்ளது.

வள்ளம் என்பதும் பால், தேறல் போன்ற நீர்மப் பொருட்களை உண்பதற்கு ஏற்ற கலனாக இருந்திருக்கின்றது.

தாலம், பிழா என்பவை அகன்ற வாயையுடைய தட்டுப் போன்ற அமைப்புடையதாகும். இது பெரும்பாலும் உண்கலமாக இருந்தமையை அறியமுடிகிறது.

பால் கறப்பதற்குரிய கலம் கறவைக்கலம் என வழங்கப்பெற்றுள்ளது.

'நெல்' போன்ற தானிய வகைகளை 'நெற்கூட்டில்' சேமித்திருக்கின்றனர். ஏணிக்கும் எட்டாத நீண்ட உயரத்துடன் நெற்கூட்டின் அமைப்பு இருந்ததாகத் தெரிகிறது.

ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை ஆகியவற்றை உண்பதற்குரிய பயன்பாட்டு இலைகளாகப் புழங்கியுள்ளனர். பனையோலையை வடிவமைத்து திட, திரவ உணவுப்பொருட்களை எடுத்து உண்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர்.

வட்டில் என்னும் பெட்டியை விதை விதைப்பதற்கும், பூக்களைப் பறித்து வருவதற்கும், மீன் நிறைத்துக் கொண்டு வருவதற்கும், வேட்டையாடிய மான் தசையைக் கொண்டு வருவதற்கும் உதவக்கூடிய எடுகலனாகப் புழங்கியுள்ளனர். மோருக்குப் பதிலாக நெல்லைப் பண்டமாற்றாகப் பெறும்போது, அந்நெல்லை இப்பெட்டியில் நிறைத்து மாற்றியிருக்கின்றனர்.

உறங்கும் சமயத்தில் படுக்கையாகப் பயன்படுத்தப்பெற்ற ஓலைப்பாய் 'பறி' என அழைக்கப்பெற்றதாகத் தெரிகிறது.

மழையினின்று தம்மைக் காத்துக்கொள்ள ஓலையால் செய்த குடை புழக்கத்தில் இருந்திருக்கின்றது.

மரத்தலாகிய திரிமரம், உரல், உலக்கை, மத்து, அம்பணம், கட்டில், தூதை ஆகிய புழங்கு பொருட்கள் குறித்த செய்திகள் கிடைக்கின்றன.

மரத்திரிகை ‘திரிமரம்‘ என்ற சொல்லால் குறிக்கப்பெற்றுள்ளது. இது கரிய நிறத்துடனும் உறுதியானதாகவும் இருந்திருக்கின்றது.

தானிய வகைகளைக் குற்றி அரிசியாக்க ‘உரலைப்’ பயன்படுத்தியுள்ளனர். இவ்வுரல் தரையில் குழியாகத் தோண்டி அமைத்துக் கொள்ளப்பெற்றதாகவும் மரத்தால் செய்துகொள்ளப் பெற்றதாகவும் தெரிகிறது.

தானிய வகைகளை உரலில் இட்டுக் குற்றுவதற்கு ‘உலக்கை‘ பயன்பெற்றுள்ளது. இஃது வயிரம் பாய்ந்து கருமை நிறத்துடன் கூடியதாக இருந்தமை சுட்டப்பெறுகிறது. தயிர் கடைவதற்கு ‘மத்து‘ என்ற கருவியை ஆயர் பயன்படுத்தியுள்ளனர்.

மரக்கால் ‘அம்பணம்’ என்ற சொல்லால் அழைக்கப்பெற்றுள்ளது. தானியங்களை அளப்பதற்குரிய புழங்கு பொருளாக அம்பணம் இருந்திருக்கிறது.

பண்டைக்காலத்தில் பொன், வெள்ளி, இரும்பு, செம்பு ஆகிய உலோகங்களால் ஆன பாத்திரங்களைப் பயன்படுத்தியுள்ளர்.

பொன்னாலியன்ற மண்டை ‘பசும்பொன்மண்டை’ என்று அழைக்கப்பெற்றுள்ளது. இது உணவு உண்பதற்குப் பயன்பெற்றுள்ளது.

வெள்ளியாலானகலங்கள் அரண்மணையில் உணவு உண்பதற்குப் பயன்பெற்றுள்ளன.

மணிகள் பதித்து அழகுடன் செய்து கொள்ளப்பெற்ற கலங்கள் ‘மணிக்கலம்’ என்று அழைக்கப்பெற்றுள்ளது. இது தேறலைப் பெய்து வைப்பதற்கு உதவியுள்ளது.

பண்டைக்காலத்தில் இரும்பால் இயன்ற விளக்கு, எஃகு, மயிர்குறை கருவி, ஊசி, காழ் போன்ற புழங்கு பொருள்கள் தொழில் சார்ந்த புழங்கு பொருள்களில் இடம்பெற்றிருக்கின்றன.

கத்தியைக் குறிக்க ‘இரும்பு’, ‘எஃகு’ என்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர். இஃது மாவடுவை வெட்டுவதற்கும், இறைச்சியை அறுப்பதற்கும் பயன்படுத்தப்பெற்றது என்பது சான்றுகள் வழி வெளிப்படுகின்றது.

கூந்தலை வெட்டிக் குறைப்பதற்கு ‘மயிற்குறைகருவி’ பயன்பெற்றுள்ளது. இது விலங்குகளின் மயிரினைக் குறைக்கவும், மகளிர் கூந்தலைக் குறைத்துச் சரி செய்வதற்கும் பயன்பெற்றுள்ளது.

‘ஊசி’ பண்டைக்காலத்தில் தைக்கும் கருவியாக இருந்திருக்கிறது. இவ்வூசியைக் கட்டில் கட்டுதல், பூக்களைக் கோர்த்தல், வீரர் மார்பில் ஏற்படும் புண்களைத் தைத்தல் போன்றவற்றிற்குப் பயன்படுத்தியுள்ளனர்.

கடினத்தன்மையும், கருமை நிறமும் கொண்ட இரும்புக் கம்பி 'காழ்' எனப்பெற்றது. இது இறைச்சியைப் பக்குவப்படுத்தி உண்பதற்குப் பயன்பெற்றுள்ளது.

செம்பினைக் கொண்டு 'செப்பு' என்னும் கலனைச் செய்து கொண்டுள்ளனர். இச்செப்பு, இருவேறு வடிவங்களுடன் இருவேறு செயல்களுக்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. ஒன்று செப்புக்கிண்ணமாகும். மற்றொன்று குடுவை வடிவினதாகும். முன்னுள்ளது பூக்களை வைப்பதற்கும், பின்னுள்ளது வெப்பத்தையுடைய நீரினைச் சேமித்துவைப்பதற்கும் பயனாகியுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. க.ப. அறவாணன், அற்றைநாள் காதலும், வீரமும், ப.62.
2. மேலது. ப. 94.
3. மேலது.
4. தமிழ் இலெக்சிகன், தொகுதி ஆறு, ப. 337.
5. மேலது, ப. 336
6. தற்காலத்தமிழ்ப் பெயரகராதி, ப.107.
7. பரிமேலழகர் (வி.உ.), திருக்குறள், ப.280.
8. தமிழ் இலெக்சிகன், தொகுதி மூன்று பகுதி ஒன்று, ப.1715.
9. திவாகரமுனிவர், சேந்தன் திவாகரம், ப.161.
10. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (வி.உ.), புறநானூறு, ப.428.
11. தமிழ் இலெக்சிகன், தொகுதி மூன்று, பகுதி ஒன்று. ப.1715.
12. திவாகர முனிவர், சேந்தன் திவாகரம், ப.161.
13. ந. கடிகாசலம், பு. பாலாஜி, சங்கச்சமூகம், ப. 19.

14. தற்காலத்தமிழ்ப் பெயரகராதி, ப. 159.

15. பிங்கல முனிவர், பிங்கலந்தை நிகண்டு, ப. 64.

16. தமிழ் இலெக்சிகன், தொகுதி ஐந்து, பகுதி ஒன்று, ப. 3031.

17. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (வி.உ.), புறநானூறு, ப. 401.

18. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி ஒன்று, ப. 2.

19. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை (வி.உ.), புறநானூறு, ப. 401.

20. நச்சர் (வி.உ.), பெரும்பாணாற்றுப்படை, ப. 276.

21. மேலது, ப.186.

22. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (வி.உ.), ஐங்குறுநூறு, பகுதி -1, ப. 149.

23. புறம். 352 : 4.

24. அகம். 391.

25. நச்சர் (வி.உ.) பெரும்பாணாற்றுப்படை, ப. 61.

26. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (வி.உ.), பதிற்றுப்பத்து, ப. 314.

27. ஐங்குறுநூறு, ப. 138.

28. மேலது, பா. 391 : 3-4

29. நெய். கலி.32: 1-2

30. அகம். 199: 8 - 9.

31. மேலது, 48.8 - 9.

32. ந. கடிகாசலம், பு. பாலாஜி, சங்கச்சமூகம், ப. 18.

33. தமிழ் இலெக்சிகன் தொகுதி மூன்று, பகுதி ஒன்று, ப. 1592.

34. நச்சர் (வி.உ.), மதுரைக்காஞ்சி, ப.63.

35. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (வி.உ.), குறுந்தொகை, ப. 16.

36. மேலது, நற்றிணை, ப.372.

பண்டைக்காலத்தில் தமிழர் நிலைத்த நாகரிக வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். அந்நாகரிக வாழ்க்கையால் சிறந்த சமுதாய வாழ்வையும் பெற்றிருந்தனர். சமுதாய வாழ்வியலின் பலகூறுகளில் தொழிலும் ஒன்று. பண்டைத் தமிழ் மக்கள் விவசாயத்தை மட்டும் தொழிலாகக் கொள்ளாமல் பிற தொழில்களையும் மேற்கொண்டிருந்தனர். அக்கால வாழ்வியலில் அரசுகள் ஒன்றோடு ஒன்று மோதிப் பேரரசாக உருவாகப்பார்த்தன. இந்நிலையில் ஒவ்வொரு நாளும் தமக்கென்று போர்த்தொழிலை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. போர்த்தொழில் என்பது அரசரைச் சார்ந்தும் நாட்டின் பாதுகாப்பைக் கருதியும் எதிரிகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துகொள்வதற்கும் தேவைப்பட்ட தொழிலாக இருந்தது. சமுதாயம் மேன்மையடையப் பொருள் வேண்டும். இக்கருத்துத் தனிநபருக்கும் குடும்பத்திற்கும், சமுதாயத்தை வழிநடத்தும் அரசுக்கும் பொருந்துவதாகும். பொருளை ஈட்டுவதற்குத் தொழில் வாயிலாக அமைந்தது. மேலும் தொழில் பொருளாதாரத்தோடு தொடர்புடையது. ஆகவே பண்டைக் காலத்தில் தமிழர் பலவகைத் தொழில்களை மேற்கொண்டிருந்தனர். அவ்வகைத் தொழில்களில் பயன்படுத்தப்பெறும் புழங்கு பொருட்கள் குறித்துப் பண்டை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அச்செய்திகளைத் தொகுத்து விளக்கவியலில் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## தொல்காப்பியத்தில் தொழில்

தமிழில் கிடைத்த பழமையான நூல் தொல்காப்பியமாகும். தொல்காப்பியத்திற்கு முன்னரே தமிழ் நூல்கள் பல இருந்திருக்க வேண்டும். அவைகள் கிடைக்கவில்லை. தொல்காப்பியத்திலேயே அக்காலத் தமிழ் மக்களின் நாகரிகத்தையும், பண்பாட்டையும் அறிஞர்கள் மதிப்பிட்டுள்ளனர்.

தொல்காப்பியத்தில் அகம் புறம் என்ற இரு திறம் பேசப்பெறும். ஆசிரியர் முதல், கரு, உரி என்று பகுத்துக்கொண்டு செய்திகளை விளக்கிச் செல்கின்றார். முதற்பொருளில் நிலமும் காலமும் அடங்கும்.

அட்டவணை 4 : 1 முதற்பொருள் விளக்கம்

| நிலம் | இடம் | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|---|
| முல்லை | காடும் காடு சார்ந்த இடமும் | கார் | மாலை |
| குறிஞ்சி | மலையும் மலை சார்ந்த இடமும் | கூதிர், முன்பனி | யாமம் |
| பாலை | முல்லையும், குறிஞ்சியும் திரிந்த நிலம் | இளவேனில் முதுவேனில்பின் பனி | நண்பகல் |
| மருதம் | வயலும், வயல் சார்ந்த இடமும் | ஆறுபொழுதும் | வைகறை விடியல் |
| நெய்தல் | கடலும், கடல் சார்ந்த இடமும் | ஆறுபொழுதும் | எற்பாடு |

என்று நிலம் பொழுதைப் பிரித்துக் கூறுகின்றார் தொல்காப்பியர். கருப்பொருள் பற்றிக் கூறும்பொழுது,

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகைப் பிறவும் கருவென மொழிப" (தொல். 964)

என்பர். இந்நூற்பாவில் செய்தி என்பது தொழிலைக் குறிக்கும் என்பர். முல்லைநில மக்கள் ஆடுமாடு மேய்த்தலையும் புன்செய்ப் பயிர்கள் சார்ந்த விவசாயத்தையும் மேற்கொண்டிருந்தனர். குறிஞ்சி நில மக்கள் தேனெடுத்தல், கிழங்குகளை அகழ்ந்தெடுத்தல், தினைப்புனங் காத்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். மருதநில மக்கள் விவசாயமும், நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் ஆகிய தொழில்களையும் மேற்கொண்டனர். பாலைநில மக்கள் வழிப்பறி செய்தலையே தொழிலாகக் கொண்டிருந்தனர். இச்செய்திகளிலிருந்து ஐவகைத்திணைகளைச் சார்ந்து தொழில்கள் விளங்குவதை உணரலாம். நிலத்தின் இயல்பிற்கும் சூழலுக்கும் தக்கவாறு தொழில்கள் மாறுபடுவதையும் தெளியலாம்.

## தொல்காப்பியத்தில் தொழிலும் மக்கள் பிரிவும்

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவுகள் தொழிலின் அடிப்படையில் உருவானவைகளாகும். "எத்தொழிலுக்கும் தூண்டுகோலாய் அமையும் அறிவும், ஒழுக்கமும் இன்றியமையாச் சிறப்பினவாகலானும் அந்தணர் முதலிலும், தொழில் செய்வோர் அச்சமின்றி வாழவும், தொழில் நன்கு நடைபெற அரசர் காத்தலானும்: வணிகர் அந்தணர்க்கும் அரசர்க்கும் கொண்டு கொடுத்தலோடு: அரசியற்குப் பொருளீட்டித் தருதலானும் வேளாளர் விளைவிக்கும் பொருள்களைக் கொள்வதோடு அவர்க்கு வேண்டுவன கொண்டு கொடுத்தலானும் அரசர், வணிகர் ஆகியவரை இடையில் வைத்து அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என முறைப்படுத்தினரே அன்றி இவர்களில் ஏற்றத்தாழ்வு இல்லை"[1] என்பர்.

புறத்திணையியலில் இடம்பெறும் நூற்பா,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
மனுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்
பாலறி மரபில் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்
தொகை நிலை பெற்றது என்மனார் புலவர்" (தொல் 1021)

என்று எழுவகைத் தொழில்களை விளக்குகின்றது. மேற்குறித்த செய்திகளைப் பொதுவாக நோக்கும்போது, வினையே ஆடவர்க்கு உயிரே என்ற கருத்து வலிமை பெற்றிருந்ததை அறிய முடிகின்றது. முதல், கரு, உரிப்பொருள் என்ற பாகுபாட்டில் ஐந்திணைகள் விளக்கப்பெற்றன. நிலவியல் மற்றும் காலவியல் சூழலுக்கு ஏற்றவாறு மக்கள் தொழிலை மேற்கொண்டிருந்தனர். பொதுவாக அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவும் தொழில் அடிப்படையில் இருந்திருப்பதை அறியமுடிகின்றது. மேலாக எழுவகைத் தொழில்களைத் தொல்காப்பியர் சிறப்பித்துச் சொல்கிறார். அம்முறையில் தொழில் குறித்த சிந்தனை தொல்காப்பியர் காலத்தில் மேன்மை பெற்றிருந்ததை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் தொழில் பற்றிய செய்திகள் விரிவாகப் பதிவு பெற்றுள்ளன. அவ்வகையில் தொழில் சார்ந்த புழங்குபொருட்களை வகைப்படுத்தி விளக்குவதற்கு முன் தொழில்கள் குறித்த வரைவிலக்கணத்தையும், அடிப்படை வகைப்பாட்டினையும் கருத்தில் கொள்வது தேவையான முயற்சியாகும்.

## தொழில் விளக்கம்

தொழில் என்பதற்குச் "செயல், உத்தியோகம், காரியசித்தி, ஏவல், திறமை"[2] என்று பல பொருள்களை அகராதி சுட்டும். இவற்றுள்ள செயல் என்பது உழைப்பைக்குறிக்கும்.

"உழைப்பு என்பது பெயர்ச் சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்"[3] என்பது அறிஞர்கள் சிந்தனையாகும்.

அவ்வகையில் தொழில் என்பது வேலையைக் குறிக்கும். பணம் சம்பாதித்ததற்கான செயலைக் குறிக்கும். மனிதஉழைப்பையும், எந்திரங்களையும் பயன்படுத்தி இலாபநோக்கில் ஒரு பொருளை உற்பத்தி செய்யும் செயல் (அ) ஒரு குறிப்பிட்ட சேவையை வழங்கும் செயல் என்பதைக் குறிக்கும். மேலும் ஒரு குறிப்பிட்ட வேலை செய்யும் செயல் மற்றும் நிகழ்த்தும் செயல் ஆகியவற்றைக் குறிப்பதாகத் தொழில் என்பது உள்ளது.

உழைப்பு, பணம், எந்திரம்-கருவிகள், உற்பத்தி, நுணுக்கமாகச் செய்யும் திறமை ஆகியவைகள் தொழிலோடு தொடர்பு பெறுகின்றன. பொருளியல் பேரறிஞராகிய மார்சல் உழைப்பிற்குப் பின்வரும் இலக்கணம் கூறுகிறார். "உழைப்பு என்பது மூளையையோ உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லாவகையான தொழில் திறமைகளையும்

உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிருவாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்தினுள் அடங்குகின்றன"[4]. இவ்வகையில் உழைப்பை முதன்மையிட்ட தொழில் கருதுதற்குரியது. அவ்வகைத் தொழிலைப் பண்டைத் தமிழர் மேற்கொண்டிருந்தனர்.

## தொழில் வகைப்பாடு

தொல்காப்பியத்தில் கருப்பொருளைக் கூறும்பொழுது திணைகளுக்கு ஏற்ற தொழில்கள் விரித்துரைக்கப் பெற்றன. அம்முறையில் தொழில்களை வகைப்படுத்துவது ஒருமுறையாகும். அவ்வாறு இல்லாமல் தொழில்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்து விளக்குவது பொருத்தமுடையதாக அமையும்.

1. வாழ்வியல் தொழில்
2. போர்த் தொழில்
3. வாணிகத் தொழில்
4. கலையியல் தொழில்

ஆய்வாளர்களும் மேற்குறித்த வகைப்பாட்டைப் பின்பற்றி விளக்கியுள்ளனர். முனைவர் வி.சி. சசிவல்லி அவர்கள் பண்டைத் தமிழர் தொழில்கள் என்னும் தம் நூலில் இவ்வகைப்பாட்டினை விளக்கியுள்ளார். இவ்வகைப்பாடு இவ்வாய்விலும் மேற்கொள்ளப்பெறுகின்றது.

## 1. வாழ்வியல் தொழில்

மக்களின் வாழ்வியலோடு நேரடியாகத் தொடர்பு பெற்றவை இவ்வகைத் தொழில்களாகும். இவ்வகைத் தொழில்களை எளிமையாக விளக்கிச் செல்வதற்கு ஏற்ற விதத்தில் கீழ்க்கண்டவாறு பகுத்துக்கொள்ளப்பெறுகின்றன.

1. கைத் தொழில்
2. நிலஞ்சார் தொழில்
3. கைவினைத் தொழில்
4. பிறதொழில்

## (1) கைத்தொழில்

கைத்தொழில் என்பதற்குக் "கைத்திறமையாலோ, சிறு கருவிகளைப் பயன்படுத்தியோ செய்யப்படும் தொழில் என்று தற்காலத் தமிழ்ப்பெயர் அகராதி சுட்டுகின்றது"[5]. இக்வகைத் தொழில்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்துக் காணலாம்.

1. பயிர்த் தொழில்
2. நெசவுத் தொழில்
3. தச்சுத் தொழில்
4. மட்கலத் தொழில்
5. கொல்லுத் தொழில்
6. உலோகத் தொழில்
7. அணிகலத் தொழில்
8. தோல் தொழில்

## 1.1.0 பயிர்த் தொழில் :

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. அந்த உணவினை வழங்கும் தொழிலை உழவுத் தொழில் (அ) பயிர்த்தொழில் என்று பன்னெடுங்காலமாகப் போற்றி வருகின்றனர். இப்பயிர்த் தொழில் குறித்த முதற் சான்றினைப் பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலேயே காணலாம். அக்காலத்தில் உழவர்கள் வேளாண்மாந்தர் என்றும் அழைக்கப்பெற்றுள்ளனர். இதனை,

"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி" (தொல். 1581)

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இவ்வேளாண் என்னும் சொல் பெரும்பான்மை உதவியையும், சிறுபான்மை உழவுத் தொழிலையும் குறித்து நிற்கின்றது. தொல்காப்பியத்தில் குறிக்கப்பெற்ற பயிர்த் தொழில் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளன. அத்தொழிலில் இடம்பெறும் புழங்கு பொருள்களைக் குறித்து இனிவரும் பகுதியில் காணலாம்.

பயிர்த்தொழில் கருவிகளாகிய நாஞ்சில், தளம்பு, ஆம்பி, கிழார், துளர், குளிர், தட்டை, தழல், வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி, தொண்டகச்சிறுபறை, தண்ணுமை, குயம், வாள், கரும்பு அரவை இயந்திரம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகள் பண்டை இலக்கியங்களில் காணப்பெறுகின்றன.

### 1.1.1. நாஞ்சில்

பயிர்த்தொழிலின் முதல் செயலான நிலத்தை உழுது பண்படுத்துவதற்குப் பயன்பட்ட கருவி 'நாஞ்சில்' என்பதாகும். 'நாஞ்சில்' என்பதற்குக்

'கலப்பை'[6] என்று பொருள். இக்கருவி தற்காலத்தில் கலப்பை எனக் குறிக்கப்பெறுகிறது. இதனை,

"பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்

உடும்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி" (பெரும் : 199-200)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் விளக்கும். இந்நாஞ்சிலின் அமைப்பு, "பெண்யானையின் வாயை ஒத்து வளைந்தும், அதில் பொருத்தப்பெற்றுள்ள பெருங்கொழு உடும்பின் முகம் போன்றும் தோற்றமுடையது"[7] என்பது நச்சர் உரை வழி விளங்கும். இதனை வைத்தெடுப்பதற்குத் தனிக்கொட்டில்கள் இருந்தன என்பதை,

"…. …. …. …. கலப்பை சார்த்தி

நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்" (பெரும் : 188-189)

என்னும் அடிகள் சுட்டும். மேற்கூறியவற்றிலிருந்து நிலத்தைப் பண்படுத்த நாஞ்சிலைப் பயன்படுத்தியமையையும், அது தற்பொழுது கலப்பை என்று அழைக்கப்பெறுவதையும் அறியமுடிகின்றது. இன்றும் கலப்பையை வைத்தெடுக்கக் கொட்டில்களைப் பயன்படுத்துவது எண்ணத்தக்கதாகும்.

## 1.1.2 தளம்பு

தமிழகராதி 'தளம்பு' என்பதற்குத் 'சேறுகுத்தி'[8] என்று பொருளுரைக்கின்றது. நிலத்தை நன்றாக உழுதபின்னர் சமமாக இருத்தற்பொருட்டு இதனைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவி கொண்டு சேற்றுவயலைச் சமப்படுத்தியுள்ளதை,

"மலங்குமிளிர் செறுவில் தளம்பு தடிந்திட்ட" (புறம் 61:3)

என்று புறநானூறு குறிக்கின்றது. தற்பொழுதும் உழுதபின்னர் சமப்படுத்த இக்கருவி பயன்படுத்தப்படுவதுண்டு. இதனைப் 'பரம்பு' என்பர். இன்று பரம்பு பனைமரத்தால் செய்துகொள்ளப்பெறுகின்றது. அக்காலத்தில் எப்பொருளால் செய்துகொள்ளப்பெற்றது என்பது குறித்த செய்திகள் கிடைக்கவில்லை.

## 1.1.3 ஆம்பி, கிழார்

இவை வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சுவதற்குப் பயன்படுத்தப்பெற்ற இறைப்புக் கருவிகளாகும்.

### ஆம்பி

'ஆம்பி' என்பதற்கு 'நீரிறைக்கும் இறை கூடை, பன்றிப்பத்தர்'[9] என்று பெயர் விளக்கம் கூறுவர். இது ஏற்றம் வைத்து நீரிறைக்கும் பொழுது பயன்பெற்றதை,

"ஏற்றமொடு வழங்கும் அகலாம்பி" (மது : 90)

என்ற வரிகளின் வழி அறியலாம். இதனால் ஏற்றக்கருவி 'ஆம்பி' என்பது விளங்கும்.

### கிழார்

நீரிறைக்குப் பயன்பெற்றது கிழார். தமிழ் இலெக்சிகன் கிழார் என்பதற்கு 'தோட்டம்'[10] என்று பொருள் கூறுகின்றது. இதிலிருந்து தோட்டப்பயிர்களுக்கு நீரிறைக்க இக்கருவி பயன்பெற்றிருத்தல்வேண்டும் என்று எண்ண இடமுண்டு, இதனை, "மென்தொடை வன்கிழார்"[11] என்பது சுட்டும். இன்று நீரிறைப்பதற்கு இரும்பாலியன்ற

தகரப்பெட்டியைப் பயன்படுத்துகின்றனர். இதனை 'இறைவாய்ப்பெட்டி' என்று அழைப்பது இங்குக் கருதத்தக்கதாகும்.

## 1.1.4. துளர்

'துளர்' என்ற சொல்லாட்சி குறுந்தொகை, அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய நான்கு நூல்களிலும் இடம்பெற்றுள்ளது. துளர் என்பதற்குத் தமிழகராதி "கொத்துதல்"[12] என்று பொருளுரைக்கின்றது. உரையாசிரியர் பெருமழைப்புலவர் "களைக்கொட்டு"[13] என்று பொருள்விளக்கம் அளிக்கின்றார்.

வயலில் வளரும் பயிர்களுக்கிடையில் இருக்கும் பிறபயிரினங்களைக் களைவதற்குப் பயன்படுத்திய கருவி துளர் ஆகும். இதனை ஈரமின்றிக் காய்ந்துவிட்ட நிலங்களில் உள்ள களைகளைத் துளர்ந்தெடுக்கப்பயன்படுத்தியதை,

"தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை" (பெரும் : 201)

"........................................ சிறுதினைத்
துளரெறி நுண்டுகட் களைஞர்" (குறு : 392.4-5)

என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. இக்கருவியை இன்றும் பயன்படுத்துகின்றனர். ஆனால் 'துளர்' என்ற பெயர் வழக்கிழந்து 'களைக்கொட்டு' என்ற பெயர் வழங்கப்பெறுகின்றது.

## 1.1.5. குளிர், தட்டை, தழல்

இவைகளைப் பறவைகளிடமிருந்து விளைந்த பயிர்களைப் பாதுகாக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

## குளிர்

குளிர் என்பதற்கு “கிளிகடிகருவி”[14] என்று தமிழ் இலெக்சிகன் விளக்கம் அளிக்கின்றது. இப்பொருளினையே தமிழகராதியும் சுட்டுவது குறிக்கத்தக்கது. ஆனால் இக்கருவியின் வடிவமைப்புப் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

குளிர் குறித்த செய்திகள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் ஆகிய நூல்களில் காணப்பெறுகின்றன. இங்கு குறிப்பிடப்பெற்ற நூல்களில் பல அகம் சார்ந்த நூல்கள் என்பது கருதத்தக்கதாகும்.

“சுடுபுண் மருங்கிற் கலித்த வேனற்
படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே” (குறு : 291.1-2)

என்னும் அடிகளுக்கு விளக்கம் கூறும்பொழுது “கிளிகளை ஓட்டும் தலைவியினது கையின் கண்ணதாகிய குளிர் என்னும் கருவி இசைபாடுங்கால்இசைக்கப்படும் இனிய தாளத்தையடையதாம்”[15] என்று உ.வே.சா. உள்ளிட்ட உரையாசிரியர்கள் அனைவரும் விளக்கம் கொடுக்கின்றனர். இதிலிருந்து கிளிகளை விரட்டப்பயன்படுத்திய கருவி ‘குளிர்’ என்பது விளங்கும். இக்கருவியின் வடிவம் குறித்துச் சங்க இலக்கியத்தின் வாயிலாக அறிய இயலவில்லை. இருப்பினும் சங்க இலக்கியத்திற்குப் பின் தோன்றிய தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர் இதன் வடிவத்தினை “மூங்கிலை வீணைபோல் கட்டித்தெறிக்கும் கருவி”[16] எனக்கூறுவதால், வீணை போன்ற அமைப்புடையது என்பது பெறப்பெறும்.

## 1.1. தட்டை

தட்டை என்பதற்கு "கிளிகடிகருவி"[17] என்று தமிழ் இலக்சிகன் சுட்டும். இதனை இலக்கியங்கள் 'தட்டை' என்றும், 'தட்டைப்பறை' என்றும் குறித்துள்ளன.

இத்தட்டை குறித்த செய்திகள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, புறநானூறு, மதுரைக்காஞ்சி, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளன. இந்நூல்களிலும் அகம் சார்ந்த நூல்களே மிகுந்திருக்கக் காணலாம். தட்டை குறித்து,

"..................... தட்டையும் முறியுந் தந்திவை" (குறு :223-4)

"இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு நாடன்" (குறு :193.2-3)

"....................... தட்டையுங் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின" (குறிஞ்சி:43-44)

"அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகென" (நற் : 134-5)

என்னும் பாடலடிகள் சுட்டும். மேலும் கிளிகடிகருவியாகிய தட்டைப்பறை சுனையின்கண் உள்ளனவாகிய பிளந்த வாயையுடைய தேரைகள் ஒலிப்பதற்கு உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. இதிலிருந்து இக்கருவியானது இருபகுதியாகப் பிளந்த வாயையுடையது என்பது பெறப்பெறும். விட்டுவிட்டு ஒலி எழுப்பும் தவளையின் குரல் தட்டைப்பறையுடன் ஒப்பிடப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. நச்சினார்க்கினியர் குறிஞ்சிப்பாட்டு உரையில் "தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி"[18] என்று

குறிப்பிடுகிறார். இச்செய்தியிலிருந்து இக்கருவி மூங்கிலால் ஆனது என்பது பற்றியும், வடிவம் பற்றியும் ஓரளவு அறியமுடிகிறது.

## தழல்

'தழல்' என்பதற்கு "கிளிகடிகருவி"[19] என்று இலெக்சிகன், தமிழ்ப்பெயரகராதி உள்ளிட்ட அகராதிகள் பொருள் விளக்கம் அளிக்கின்றன. பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு உரையின் வாயிலாக இக்கருவியின் அமைப்பை அறியமுடிகிறது. "தழலாவது கையாற்சுற்றின காலத்துத் தன்னிடத்துப்பிறக்கும் ஓசையால் கிளி முதலியவற்றை ஓட்டுங்கருவி"[20] என்று வடிவமைப்பைச் சுட்டுகிறார் நச்சர். இதிலிருந்து சுழற்றி ஓசை எழுப்பி கிளிமுதலான பறவைகளை விரட்டுவது என்பதனைஅறியமுடிகிறது.

## வில் அம்பு, கவண்கல், வேல்,ஞெகிலி, அடார்

இவைகளை விலங்குகளின் தாக்குதலிலிருந்து திணைப்புனங்களைப் பாதுகாக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

இதனைக் குறுந்தொகை, அகநானூறு, குறிஞ்சிப்பாட்டு ஆகிய மூன்றும் குறிப்பிடுகின்றன. இதனை,

"தழலும் தட்டையும் முறியுந் தந்திவை
..... ....... ....... ......
அன்னை ஓம்பிய ஆய்நலம்" (குறு : 223, 2-4)

"தழலை வாங்கியும் தட்டை ஒப்பியும்" (அகம் 188.11)

"தழலும் தட்டையும் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின ஊஃமுழ் வாங்கி" (குறி : 43-44)

என்னும் பாடல்களின் அடிகள் சுட்டும்.

இவ்வாறு குளிர், தட்டை, தழல் ஆகிய கிளிகடி கருவிகளைப் பெண்கள் மட்டும் பயன்படுத்தியுள்ளனர். கிளிகள் பகலில் உணவு தேடும் இயல்பின. ஆகவே பகலில் தினையைத் தின்னவரும் கிளியை விரட்ட மகளிரை அனுப்புவர் (குறு : 217) என்பதிலிருந்து பகற்பொழுதில் வரும் பறவைகளை விரட்ட மட்டுமே பெண்களை அனுப்பியதை அறியமுடிகின்றது.

### 1.1.6. வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிலி அடார், குறுந்தடி

இவைகளை விலங்குகளின் தாக்குதலிலிருந்து தினைப்புனங்களைப் பாதுகாக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

#### வில்லம்பு

"மூங்கிற்கோலின் ஒருதலையில் இரும்பால் இலை முதலிய வடிவங்களிற் செய்யப்பட்ட உறுப்பினைச் செருகியதே அம்பாகும்"[21] என்று தமிழ்ப்பெயரகராதி குறிப்பிடுகிறது. இவ்வம்பினை எய்துவதற்குப் பயன்படும் சாதனம் வில்லாகும். இது மூங்கிற் கம்பின் இருமுனைகளையும் வளைத்துக் கயிற்றால் கட்டியதாக அமைந்திருக்கும். இதனைக் குறவர்கள் தினைப்புனம் காக்கும்பொழுது யானை முதலிய விலங்குகளை விரட்டப் பயன்படுத்தியதை,

"குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்" (குறு : 333-4)

என்னும் குறுந்தொகை அடிகள் சுட்டும்.

## கவண்கல்

கயிற்றில் கட்டப்பெற்ற பட்டையான தோலின் நடுப்பகுதியில் கல்வைத்துப் பயிர்களைக் கொத்தும் பறவைகள், விலங்குகளை விரட்டச் சுழற்றி எறியும் சிறுகருவியாகும். இதனை,

"ஏனல் காவலர் கவணொலி வெரிஇக்
கானயானை கைவிடு பசுங்கழை" (குறு : 54. 2-3)

என்ற குறுந்தொகை அடிகள் வழி அறியலாம். இக்கவண்கல்லை இன்றும் இளைஞர்கள் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. கவட்டைவில் (அ) உண்டிவில் என்று இதனைக் குறிப்பிடுகின்றனர். இக்கருவியை இன்றைய காலத்திலும் குறிதப்பாது பறவை விலங்குகளைத் தெரிப்பதற்கும், பொழுதுபோக்குக் கருவியாகவும் பயன்படுத்துகின்றனர்.

## வேல்

"முற்காலத்தில் போர் வீரர்கள் பயன்படுத்திய மேல்பகுதியில் இலை வடிவக்கூரிய உலோக முனையைக் கொண்ட ஆயுதம்"[22] என்று தற்காலத் தமிழ்ப்பெயரகராதி வேலிற்கு விளக்கம் அளிக்கின்றது. இவ்வேலினை காட்டிடத்துச் செல்கின்றபோது பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"வளையணி நெடுவேல் ஏந்தி" (குறு : 390.4)

என்னும் பாடல் அடி சுட்டும். இதிலிருந்து பிற உயிர்களிடமிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள இக்கருவியை உடன்கொண்டு சென்றமை விளங்கும்.

## ஞெகிழி

ஞெகிழி என்பது கொள்ளிக்கட்டையைக் குறிக்கும் சொல்லாக சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது. இதனை, யானைபோன்ற விலங்குகளை விரட்டுவதற்குப் பயன்படுத்தியுள்ளமையைக் குறுந்தொகை, நற்றிணை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய நூல்கள் சுட்டுகின்றன.

"வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்
கானவர் எறிந்த கடுஞ்செலல் ஞெகிழி" (நற் : 393.4-5)

என்பதால் தினைக்கதிரைக் கொய்து கொண்டு சென்ற யானையை எரிகொள்ளி கொண்டு கானவன் எறிந்தமை விளங்கும். மேலும் தினை காக்கும் குறவனது கொள்ளிக்கட்டையால் யானை அஞ்சிச் சென்றதை,

"ஏனல்அம் சிறுதினை காக்கும் சேணோன்
ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை" (குறு: 357.5-6)

என்பர் மருதனிளநாகனார்.

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி" (குறு : 150.1)
"........ ... ... .... ... .... .... கானவர்
விண்தோய் பணவைமிசை ஞெகிழி பொத்த" (குறி : 226)

என்ற பாடல்களின் அடிகளும் கானவர் விலங்குகளை விரட்டுவதற்குக் கொள்ளிக்கட்டையைப் பயன்படுத்தியதைச் சுட்டுகின்றன.

## அடார்

அடார் என்பதற்கு "விலங்குகளை அகப்படுத்தும் பொறி"[23] என்று பெயர். இவ்வடாரைக் குறவர்கள் பயன்படுத்தியுள்ளனர். பன்றியை அகப்படுத்த இக்கருவி பயன்பெற்றதை,

"சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடார்" (நற்: 199:3)

என்னும் அடிகள் விளக்கும்.

புலி வேட்டைக்கும் பெருங்கல் அடார் என்னும் பொறியைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். இதனை,

"இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய
பெருங்கல் லடாரும் போன்மென விரும்பி" (புறம் : 19.5-6)

என்று புறநானூற்றுப் பாடல் ஆடவர் மார்புக்கு உவமை கூறுவதன் மூலம் அறியலாம்.

## குறுந்தடி

விளைந்த தினையின் தாள்களைக் கடித்து அழிக்கும் முயல்களை விரட்ட, அதற்கென வலிய காழ்ப்பேறிய குறுந்தடியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவின் னொடுங்கு முயலிரியும்" (ஐங் : 421.1-2)

என்று ஐங்குறுநூறு சுட்டும்.

## 1.1.7. தொண்டகச்சிறுபறை, தண்ணுமை, அரிப்பறை

வயல்களில் விளைந்த முற்றிய பயிரை அறுவடை செய்யத்தொடங்குமுன், அங்கு கூடமைத்து வாழும் பறவைகளை ஓட்டும் வகையில் இவ்விசைக் கருவிகளை முழங்கியுள்ளனர்.

### தொண்டகச்சிறுபறை

இப்பறை குறிஞ்சி நிலத்திற்குரியது. "இப்பறையானது திரிகைக்கல்லை ஒத்ததான வட்டமான வாயினையுடையது. இதன் தலைப்பகுதியில் அடித்து முழங்கும் இயல்பினது"[24] என்று தமிழர் தோற்கருவிகள் என்னும் நூல் விளக்கம் அளிக்கின்றது. இக்கருவியை இரவில் தினைக்கதிர்களை விலங்குகள் அணுகாதிருக்கும் பொருட்டு முழங்கியுள்ளனர் என்பதை,

"சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்
திரவரி வாரின் தொண்டகச் சிறுபறை" (குறு : 375, 3-4)

என்னும் குறுந்தொகை அடிகள் சுட்டும்.

### தண்ணுமை

இது தோலினால் ஆகிய ஒருவகை இசைக்கருவியாகும். இதற்கு அகப்புறமுழவுள் ஒன்றாகிய மத்தளம், முழவு, உடுக்கை, ஒருகட்பறை என்று பல பெயர்கள் கூறப்பெறுகின்றன. இவ்விசைக்கருவியை, தினைக்கதிர்களை விலங்குகள் அணுகாதிருக்கப் பயன்படுத்தியதை,

"வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை" (அகம் : 204.10)

"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்

பழனப் பல்புன் இரிய" (நற் :350. 1-2)

"மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே" (குறு : 390-5)

என்ற பாடல்களின் அடிகள் விளக்கும்.

## அரிப்பறை :

இது "அரித்து எழுகின்ற பறை ஓசையை உடையது"[25] என்பர். விளைந்த நெல் வயலில் கூடமைத்து வாழும் பறவைகளை விரட்ட இக்கருவியை பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"கழிசுற்றிய விளைகழனி
அரிப்பறையால் புள்ளோப்புந்து" (புறம் : 396 : 3-4)
"..... ...... விளைந்த கழனி
வன்கை வினைஞர் அரிப்பறை யின்குரல்" (மது. 261-262)
"குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டு" (ஐங். 81, 1-2)

என்று இலக்கியங்கள் குறிக்கின்றன.

இவ்வகையில் இரவு நேரத்தில் தினைப்புனக் காவலுக்கு ஆண்கள் சென்றதையும், அவர்கள் காவலுக்கு வில் அம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி ஆகிய கருவிகளையும், தண்ணுமை, தொண்டகச் சிறுபறை, அரிப்பறையாகிய இசைக்கருவிகளையும் பயன்படுத்தியமையும் தெளிவாகிறது. மேலும் பகற்பொழுதில் பறவைகளும், இரவுப்பொழுதில் விலங்குகளும் இரைதேடிச்செல்லும் இயல்பினது என்பதும் இதன் வழி பெறப்பெறும்.

## 1.1.8. குயம், வாள்

தினைப்புனப் பாதுகாப்புடன் விளைந்த நெற்கதிர்களை அறுக்க வளைந்து காணும் அரிவாளைப் பயன்படுத்தினர் என்பதை,

"கூனிக் குயத்தின் வாய்நெல் அரிந்து" (பொரு : 242)

"நெல்லரி தொழுவர் கூர்வாள்" (நற் : 26-2)

என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதன் வழி நெற்கதிர்களை அறுக்கப் பயன்பட்டவை குயம், கூர்மையான வாள் என்பது விளங்கும்.

## கரும்பு அரவை இயந்திரம்

கரும்பின் சாற்றைக் கொண்டு வெள்ளம் தயாரிக்கும் ஆலைகளும் இருந்தன. அவை கரிய மழைமேகம் போன்ற தோற்றத்தை உடையவையாக இருந்தன. இதனை,

"கழைகண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்" (மலை : 340.1)

"கார்க் கரும்பின் கமழ்ஆலை" (பட் : 9)

என்பன சுட்டும். வெல்லம் காய்ச்சுவதால் புகை சூழப்பட்டு இருந்தன. கரும்பின் சாற்றைக் காய்ச்சும் பொழுது நறுமணம் கமழும் என்பதை,

'விசயம் அடுஉம் புகைசூழ் ஆலை" (பெரும் : 261)

என்னும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் சுட்டும். சாறு பிழிந்து அது வடியும் நுனிப்பகுதிக்குப் "பத்தல்"[26] என்று பெயர். இவ்வகையில் கரும்பைச் சாறு பிழிவதற்கும், பிழிந்தவற்றைக் காய்ச்சி வெல்லம் தயாரிப்பதற்கும் இயந்திரங்களைப் பண்டு தொட்டே பயன்படுத்தியுள்ளனர்.

## 1.2. நெசவுத்தொழில்

பண்டைத்தமிழ் இலக்கியங்களில் நெசவு நெய்தல் தொழிலைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. துவக்கத்தில் ஆதி ஆடைகளாக தழை, மரப்பட்டை இருந்தன. பின்னர் காலப்போக்கில் பருத்தி, சணல், பட்டு போன்றவற்றைக்கொண்டு நெய்தல் தொழில் மேம்படுத்தப்பெற்றது. தழை, மரப்பட்டை, பருத்தி, சணல் ஆகியவைகளைக் கொண்டு அமையும் ஆடைகள் தாவரங்களோடும், தோல், பட்டு, மயிர் ஆகியவைகளைக்கொண்டு அமையும் ஆடைகள் விலங்குகளோடும் தொடர்புபெற்றன. பிற்காலத்தில் செயற்கை இலைகளைத் தாங்கியும் ஆடைகள் அமைந்தன.

பண்டை இலக்கியத்தில் இலை, தழை, மரவுரி போன்றவற்றை மக்கள் அணிந்திருந்தாலும், அவ்வகை ஆடைகள் சிறப்பிக்கப்பெறவில்லை.

"கானல் ஞாழல் கவின்பெறு தழையள்" (ஐங் : 191.3)

"வண்ண வொண்டழை நுடங்க" (ஐங் : 73.1)

போன்ற சான்றுகளில் தழையுடை என்கின்ற ஆடை தொடர்பான புழங்குபொருளைப் பற்றிய குறிப்புக் கிடைக்கின்றது. மேலும் இவ்வகை ஆடைகளை மலைவாழ் மக்கள் அணிந்திருக்கலாம்.

பருத்தியாடைகள் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் பரவலாக உள்ளன. பட்டுப்பற்றிய எண்ணங்கள் இருப்பினும் *சீனா* நாட்டுப்பட்டு சிறப்பாக இடம்பெற்றதைப் பாடல்கள் குறிக்கின்றன.

சங்கப்பாடல்களில் பஞ்சினைத் தூய்மை செய்யும் தன்மையைச் சில பாடல்கள் விவரிக்கின்றன. வெண்மையான வெள்ளிய முகிலினைப் பார்க்கின்ற கவிஞர்கள் பஞ்சினை வில்லால் அடித்துத் தூய்மை செய்யுங்கால் வெள்ளிய துகல்களாகப் பறந்து செல்லும் காட்சியை நினைவு கூறுகின்றனர். இதனை,

"கார்தலை மணந்த பைம்புதற் புரவின்
வில்லெறி பஞ்சியின் வெண்கழை தவழும்" (அகம்.133.5-6)

"பெய்துபுறம் தந்த பொங்கல் வெண்மழை
எ∴குறு பஞ்சின் துய்ப்பட்டன்ன
துவலை தூவல் கழிய" (அகம்.217.1-3)

என்பவை சுட்டும். வெள்ளிய மேகம் பஞ்சு பரந்து செல்லும் இயல்புக் காட்சிக்கு ஒத்து வருகின்றது. நற்றிணையில் வில்லரி பஞ்சியின் மல்கு திரை (299) என்ற குறிப்பு வருகின்றது. இவ்வடியில் வில்லால் அடிபட்ட பஞ்சுக்கு அலையை உவமித்திருப்பது குறிப்பிடத்தக்கது. மேற்குறித்த பாடலடிகளிலிருந்து வில், எ∴கு என்ற கருவிகளால் பஞ்சை அடித்தனர் என்பதை அறிய முடிகின்றது. தற்பொழுதும் வில்லென்னும் கருவியைப் பஞ்சடிக்கும் கருவியாகப் பயன்படுத்துகின்றனர். இவ்வில் எ∴கினைக் கொண்டு செய்யப்பெற்றதால் இப்பெயர் பெற்றதா? இல்லை இரண்டும் வேறு வேறு கருவிகளா? என்பது மேலும் ஆராயப்பெறுதல் வேண்டும்.

நூற்புக்கருவி பலவற்றில் நூற்ற நூலைப்பின்னர் பெரிய ராட்டினத்தில் நூற்பார்கள். அதனை எடுத்து நீளமாக விரிப்பர். பசையிட்டுத் தோய்த்து நூலுக்கு மெருகு ஏற்றுவார்கள். இவ்வாறு நெசவு நெய்வதற்கு 'பா' என்றும் 'பாவாற்றுதல்' என்றும் குறிப்பர். அகநானூற்றில்,

"துகில்ஆய்ச் செய்கைப் பா விரிந்தன்ன

வெயில்அவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரி" (அகம்.293.4-5)

என்ற குறிப்பு வருகின்றது. இக்குறிப்பிலிருந்து துகில் செய்யும் தொழிலில் பல கருவிகள் இடம்பெற்றிருக்க வாய்ப்பு உண்டு. ஆனால் அக்கருவிகள் குறித்த செய்திகள் இலக்கியங்களில் இடம்பெறவில்லை.

"அரிக்கமேட்டில் வெண்துகில்களுக்குச் சாயமிடுவதற்குப் பயன்பட்ட செங்கற்களால் கட்டப்பட்ட இரண்டு சாயத்தொட்டிகள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. மேலும் உறையூரில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியிலும் சாயத்தொட்டிகள் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளன."[27] இதனால் அக்காலத்தில் நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தச் சாயத்தொட்டி இருந்தமை தெளிவாகிறது.

நெசவுத் தொழிலுக்குத் தேவையான பஞ்சினைப் பருத்திச் செடியிலிருந்தும் இலவமரம், கோங்குமரம் முதலிய மரங்களிலிருந்தும் சேகரித்துக்கொண்டுள்ளனர்.

இந்நெசவுத்தொழிற் கருவிகளுள் வில்லைக் குறித்து அகநானூறும் நற்றிணையும் சுட்டுகின்றன. (அகம். 133.5-6, நற் : 299.1) வில் என்பதற்கு "மூங்கில்"[28] என்று பொருள் உரைப்பதால் மூங்கிலால் செய்துகொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும்.

இவற்றையெல்லாம் கொண்டு நோக்கும்பொழுது பண்டைத்தமிழர் நெசவுத்தொழிலில் சிறப்புற்று விளங்கியமை திண்ணம்.

## 1.3. தச்சுத்தொழில்

சங்க காலத்தில் வண்டிகள், தேர்கள், ஆகிய ஊர்திகள் இருந்தன. எனவே தச்சுத் தொழிலும் சிறப்புற்றிருத்தல் வேண்டும். நால்வகைப் படைகளில் தேர்ப்படைக்குச் சிறப்பான இடமுண்டு. ஒருநாளில் எட்டுத்தேர்களைச் செய்யவல்ல தச்சர்கள் அக்காலத்தில் இருந்தனர். இதனை,

" .... .... ... ... வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்" (புறம் : 87.3-4)

என்ற பாடலடியால் அறியலாம். சங்க காலத்தில் மரத்தொழில் செய்பவன் "மரங்கொல் தச்சன்"[29] என்று அழைக்கப்பெற்றான். மரங்கொல் தச்சர்களின் திறனை,

"ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பில்
பரு இரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇ
துணைமாண் கதவம் பொருத்தி இணைமாண்டு
நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்
போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்
தாளாடு குயின்ற போரமை புணர்ப்பிற்
கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து
ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடு. 79-86)

எனச் சிறப்பித்துக் கூறுவதைக் காணலாம். மேலும் சங்க காலத்தில் படகுகள், கப்பல்கள் கட்டும் தொழிலில் தச்சர்கள் சிறந்து (மது: 83-84) விளங்கினர்.

தச்சுத்தொழிலின் மூலம் மக்களுக்கு வண்டியும் படைகளுக்குத் தேரும், வீட்டுவாயில் மற்றும் கதவு அமைப்புகளும் படகு, கப்பல் போன்ற

நீர்ப்போக்குவரத்துச் சாதனங்களும் உருவாக்கப்பெற்றன. அவ்வகையில் இத்தொழிலாளர் உருவாக்கிய பயன்படு புழங்கு பொருட்கள் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கு கிடைக்கின்றன.

## உளி

உளி என்பது இரும்பால் இயன்ற கருவியாகும். இதனைத் தச்சுத்தொழிலுக்குப் பயன்படுத்தியுள்ளனர். உளி என்பதற்கு "வெட்டவும், சீவவும், செதுக்கவும் பயன்படும் இரும்பாலான ஒருவகைத் தச்சுக் கருவி"[30] என்பர். இது மரங்கள், யானைத் தந்தங்கள் ஆகியவற்றைச் செதுக்குவதற்குப் பயன்பெற்றுள்ளது.

இக்கருவி குறித்து அகநானூறு, ஐங்குறுநூறு, பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, நெடுநெல்வாடை ஆகிய இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

சிறுபாணாற்றுப்படையில் உமணர்கள் தம்முடைய குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்துசெய்த மரத்தாலான மணிமாலையை அணிவித்ததை,

"நறவுவா யுறைக்கு நாருமுதிதர் நுணவத்
தறைவாய்க் குறுந்துணி யயிலுளி பொருத
கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுத றிருத்தி
... ..... ..... ..... வந்த ... ... மந்தி" (சிறு.51-56)

என்னும் அடிகள் சுட்டும். இதிலிருந்து மரத்தால் ஆகிய பொருட்களைச் செய்வதற்கு உளி பயன்பெற்றமை வெளிப்படும்.

## 1.4. மட்கலத்தொழில்

மனிதன் நாடோடி வாழ்க்கை வாழும் நிலையிலிருந்து மாறி நிலைத்த வாழ்வை வாழத்தொடங்கினான். அப்பொழுது பயிர்த்தொழில் செய்யவும் கால்நடைகளைப் பேணவும் கற்றிருந்தான். காலப்போக்கில் பயிர்த்தொழில் உணவுப்பொருட்களின் விளைச்சல் பெருகின. அவற்றைச் சேமித்து வைக்கத் தேவைஉருவானது. இச்சூழலில் தோலால் ஆகிய பைகள், சுரை ஓடுகள், கூடைகள் போன்றவற்றைப் பயன்படுத்தத் தொடங்கினான். நாகரிக வளர்ச்சியில் மட்கலத்தொழிலை அறிந்து கொண்டான்.

மட்கலத்தொழில் செய்வோர் பழங்காலத்தில் போற்றப்பெற்றனர். இதனை இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். இல்லம் சார்ந்த புழங்குபொருளை விளக்கும் இயலில் மண்ணாலாகிய கலங்கள் பற்றி விவரிக்கப்பெற்றன. இப்பகுதியில் அத்தொழில் செய்வதற்குப் பயன்படுத்திய புழங்குபொருள் மட்டும் குறிப்பிடப்படுகின்றன. மிகுந்த அளவில் மண் பாத்திரங்களைச் செய்யச் சக்கரங்கள் பயன்பட்டிருக்கின்றன. இதனை,

"வனைகலம் திகிரியின் குமிழி சுழலும்
துணைசெலல் தலைவாய் ஓவிறந்து விரிக்கும்" (மலை:474-475)

என்ற அடிகள் சுட்டும். இங்கு சக்கரத்தின் சுழற்சிக்கு நீர்க்குமிழி உவமிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து சக்கரச் சுழற்சியின் வேகம் தெளிவுறும்.

மட்கலத்தொழில் வல்லோர் மட்கலம், புதைக்கும் பெரிய சாடிகள், செங்கற் கற்கள், பல்வேறு மண்பானைகள் போன்றவற்றைச் செய்தமையைப் பண்டை இலக்கிங்களின் வாயிலாக அறியமுடிகின்றது.

## 1.5. கொல்லுத் தொழில்

பண்டைத் தமிழகத்தில் காதல், வீரம் போற்றப்பெற்றது. வீரத்திற்குப் போர்க்கருவிகள் தேவையாய் இருந்தன. கொல்லர்கள் இரும்பின் பயனைக்கண்டு அதிலிருந்து பல்வேறு கருவிகளைச் செய்தனர். உழவர், தச்சர், பரதவர் எனப்பல தொழில்கள் செய்வோர் இருந்தாலும் அவர்களுக்குத் தேவையான கருவிகளைக் கொல்லன் வடித்துக்கொடுத்தான். இவர்களை "கருங்கைக்கொல்லன்"[31] என்று சங்ககாலத்தில் அழைத்து வந்தனர். மேலும் "யானைக்குத் தொடியிடுபவன், வேல் வடிப்பவன்"[32] என்ற பெயரும் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. இவர்களும் கொல்லர்கள் எனக்கருதப்பெற்றனர். இவர்கள் இரும்பைக் காய்ச்சி உருக்கி அடித்து வேலை செய்வதால் வலியகையைப் பெற்றிருந்தனர். இத்தொழிலில் பயன்படுத்தப்பெற்ற புழங்கு பொருள்கள் குறித்த செய்திகளைப் பின்வரும் உட்தலைப்புகளின் வழி அறியலாம்.

1.5.1. கொல்லுலை

1.5.2. துருத்தி

1.5.3. உலைமூக்கு

1.5.4. அழும்

1.5.5. குறடு

1.5.6. சம்மட்டி

1.5.7. உலைக்கல்

1.5.8. சாணைக்கல்

## 1.5.1. கொல்லுலை

கொல்லனுக்கு மிகவும் தேவையானது உலையாகும். உலைபூமிக்கு அடியில் அமைக்கப்பெறும். இதில் இரும்புத் தாதுக்களை உருக்கி எடுப்பர். பின் உருக்கி எடுத்த கட்டிகளைக்கொண்டு வேண்டிய பொருள்களைச் செய்துகொண்டுள்ளனர்.

குறுந்தொகைப் பாடல் ஒன்றில் கொல்லுத்தொழிலுக்குத் தேவையான கொல்லுலை குறிக்கப்பெறுகின்றது.

ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன் என்னும் மன்னன் நீண்ட நெடிய வேலை வடித்துத் தருமாறு கொல்லனிடம் வேண்டுவதை,

"யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லன் யிரக்கம்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே" (அகம்: 180, 10-13)

என்கின்றது புறப்பாடல். இவ்வாறு போராயுதங்களைக் கொல்லன் செய்து வந்தமையை அறிய முடிகிறது.

## 1.5.2. துருத்தி

துருத்தி என அழைக்கப்படும் கருவி இரும்புவேலை செய்யும் கொல்லர்கள் உலையிலுள்ள நெருப்பின் வெப்பத்தை அதிகரிப்பதற்காகப் பயன்படுத்தும் ஒருவகைத் தோற்கருவியாகும். துருத்திக் குழாய்க்கு இலக்கியத்தில் "குருகு"[33] என்ற பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.

பூமிக்கு அடியில் உலை அமைக்கப்பெற்றிருப்பதால் தீ எரிவதற்கு வேண்டிய காற்று துருத்தியின் மூலம் உலைக்குழாயின் வழியாக உலைக்குச் செலுத்தப்பெறும். உலையிலுள்ள நெருப்பின் வெப்பத்தை மிகுதிப்படுத்துவதற்குத் இத்தோற்கருவி பயன்படும். இக்கருவி உலையோடு பொருத்தப்பெற்றிருக்கும். இக்கருவியை இயக்கும்பொழுது காற்று உலைக் குழாயின் வழியாக உலைக்குச் செல்கின்றது. அகநானூற்றுப் பாடல் ஒன்று கால்களால் இயக்கப்பெற்ற துருத்தியை,

"புலிப்பகை வென்ற புண்கூர் யானை
கல்லகச் சிலம்பிற் கையெடுத்து துயிர்பின்
நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகுஊது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற இரும்புதல் தாவும் நாட" (அகம். 202: 3-8)

என்கின்றது. மேலும் குறுந்தொகை,

"ஏழுர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதித்தோல் போல" (குறு : 172.5-6)

என்கின்றது. இவற்றிலிருந்து காலில் இயக்கப்பெறும் துருத்தி பற்றிய செய்திகள் கிடைக்கப்பெற்றிருப்பதை அறியலாம்.

### 1.5.3. உலைமூக்கு

கொல்லுலையில் பொருத்தப்பெற்றிருக்கும் துருத்தியின் குழாய்ப்பகுதிக்கு உலைமூக்கு என்று பெயர். துருத்தியும் உலையும் இணையும் இடத்திற்கு உலைமூக்கு என்று பெயர். கலித்தொகைப் பாடல் ஒன்றில்,

"நறா அவிழ்ந் தன்னவென் மெல்விரற் போது - கொண்டு

செறாஅச் செங்கண் புதைய வைத்துப்

புறாஅக் குருகின் உயிர்த்தலு முயிர்த்தனன்" (கலி : 54.9-11)

என்று தலைவனின் பெருமூச்சிற்கு உலைமூக்கு உவமை கூறப்பெற்றுள்ளது.

### 1.5.4. அரம்

அரம் என்னும் கருவி உலோகங்களை அறுப்பதற்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. அராவும் கருவியாக இது பயன்படுத்தப்படுவதால் இதற்கு இப்பெயர் வழக்கில் வந்திருக்கலாம். சங்க இலக்கியங்களில் இக்கருவி இரும்பில் செய்யப்பெற்றதற்கான சான்றுகள் காணப்பெறுகின்றன.

இதனைக் குறித்து அகநானூறு, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் ஆகிய நூல்கள் விளக்குகின்றன.

இவ்வரத்தின் அமைப்பைப்பற்றிக் குறிக்கும்பொழுது "பொய்கைக் கரையில் படர்ந்த முட்களைக் கொண்ட பிரப்பங்கொடிபோல் காணப்பட்டது"[34] என்று அகநானூறும், "முழவினைப்போன்று பருத்த அடியினையுடைய பனைமரத்தின் மடலிலுள்ள கருக்குப்போன்று"[35] என்று புறநானூறும், "கரிய கொம்புகளையுடைய வேப்பமரத்தின் இலை போன்று காணப்பட்டதாகப் பெரும்பாணாற்றுப்படையும்"[36] சுட்டுகின்றன. இவற்றிலிருந்து அரமானது கூரிய பற்களைக் கொண்டதாக நீண்ட அமைப்புடையதாக அமைந்திருத்தல் வேண்டும் என்பது வெளிப்படும். கொல்லன் அரத்தால் கோடாரியைக் கூர்மை செய்த செய்தியை,

"கருங்கைக் கொல்ல ரைஞ்செ யவ்வாய்

நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து" (புறம் : 36.6-7)

என்கின்றது புறப்பாடல். ஊசியைக் கூர்மை செய்வதற்குப் பயன்பட்டதை,

"அரத்தின் ஊசித் திரள்நுதி அன்ன

திண்நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்" (அகம் :36.6-7)

என்கின்றது அகப்பாடல். இவற்றிலிருந்து பிற கருவிகளின் நுனிபகுதியை அராவிக்கூர்மை செய்வதற்கு இக்கருவி பயன்பட்டமை விளங்கும்.

## 1.5.5. குறடு

இது கொல்லர்கள் பயன்படுத்தும் கருவியாகும். இதனைச் சூடாக்கிய உலோகங்களைப் பிடிப்பதற்கும், கரியைத் தீயில் எடுத்துப்போடுவதற்கும் பயன்படுத்தியுள்ளனர். அகராதியில் இதற்குப் பல பொருள்கள் கொடுக்கப்பெற்றுள்ளது. அவற்றுள் ஒன்று கம்மியர் குறடு என்பதாகும்.

குறுந்தொகைப் பாடலில் குறடு பற்றிக் குறிப்பிடப்பெற்றுள்ளது. கொல்லன் பயன்படுத்திய குறடு தினைப்புனத்தில் உள்ள தினைக்கதிர்கள் வளைந்து காணப்பட்டமைக்கு உவமை கூறப்பெற்றுள்ளது. மேலும் "குறடின் அமைப்பு நண்டின் கவைக்கால் போன்று இரு பிளவாகக் காணப்பெற்றதாகப் பெரும்பாணாற்றுப்படை"[37] சுட்டுவதும் கருதத்தக்கதாகும். இக்கருத்திலிருந்து குறடின் அமைப்பு நண்டின் கவைக்கால் போன்று இருபிளவாகவும், பசிய கதிர்போன்று வளைந்தும் காணப்பெற்ற வடிவமைப்பினை உடையதாகவும் இருந்தது தெளிவாகிறது.

## 1.5.6. சம்மட்டி

கொல்லன் பயன்படுத்தும் ஒருவகைச் சுத்தியலின் பெயர் சம்மட்டி ஆகும். இதனைக் "கூடம்"[38] என்று நிகண்டுகள் சுட்டுகின்றன. இதனை சூடாக்கிய இரும்பைப் பட்டைக்கல்லில் வைத்து அடிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவியைக் குறித்துப் புறநானூறும், பெரும்பாணாற்றுப்படையும் சுட்டுகின்றன.

புறநானூற்றுப்பாடலில் "கூடத்தின் வலிமைக்கு மன்னனின் வலிமை"[39] ஒப்பிட்டுக் கூறப்பெற்றுள்ளது. மேலும்,

"கருங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ" (பெரும். 437.440)

என்று இரும்பை அடிக்கக் கூடத்தினைப் பயன்படுத்தியமை குறிக்கப்பெற்றுள்ளது.

இக்குறிப்புக்கள் மூலம் கூடம் அதாவது சுத்தியல் கொல்லனது முக்கியமான கருவிகளில் ஒன்றாக இருந்து வந்துள்ளதை அறியமுடிகின்றது.

## 1.5.7. உலைக்கல்

இது கொல்லுத்தொழிலுக்குப் பயன்படுத்தப்பெற்ற மிகவும் இன்றியமையாத கருவியாகும். காய்ந்த இரும்பை வைத்து அடிக்கப்பயன்படும் கல்லே உலைக்கல்லாகும். தமிழ்மொழி அகராதியில் இதற்கு "அடைக்கல், பட்டைகல்"[40] ஆகிய பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன. இக்கருவியும் இரும்பிலேயே செய்யப்பட்டிருக்கக்கூடும். கல்லால் இருந்தால் அதன்மீது இரும்பை வைத்துக் கூடத்தினால் ஓங்கி அடிக்கும்போது அது உடைந்து போகக்கூடும். அதனால்

மிகவும் உறுதியும், வலிமையும் வாய்ந்த இரும்பினால் செய்யப்பட்ட கல்போன்ற வடிவுடைய கருவியையே பழந்தமிழர்கள் உலைக்கல்லாகப் பயன்படுத்தியிருக்கவேண்டும். இவ்வுலைக்கல் குறித்த செய்தி குறுந்தொகைப்பாடல் ஒன்றில் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் “கொல்லனுடைய உலையில் காணப்படும் பட்டடைக்கல் வெம்மையாகக் காணப்படுவது போன்று பாறையின்மேல் ஏறி வில்லையுடைய வேடர் அம்புகளைத் தேய்த்துக்கூர்மை செய்வதற்குக் காரணமான கவர்த்த வழிகளை உடையது நம் தலைவர் சென்ற வழி”[41] எனத் தலைவி தோழியிடம் கூறிய செய்தி கூறப்பட்டுள்ளது. இக்கூற்றின் வாயிலாகப் பட்டடைக்கல் வெம்மையாகக் காணப்பட்ட உண்மை தெளிவுறும். சூடாக்கப்பட்ட இரும்பைப் பட்டடைக்கல்லின் மீது வைத்துத் தொடர்ந்து மாற்றி மாற்றி அடித்துக்கொண்டே இருந்ததால் வெம்மையேறிக் காணப்பெற்றிருத்தல் வேண்டும் என்று அறிய ஏதுவாகிறது.

### 1.5.8. சாணைக்கல்

சாணைக்கல் என்பது கத்தி, அரிவாள் போன்றவற்றைத் தீட்டுவதற்கான சொரசொரப்பான கல்லாகும். கொல்லர்கள் சாணைக்கற்களின் உதவியால் கருவிகள், ஆயுதங்கள் போன்றவற்றைக் கூர்மைப்படுத்துகின்ற தொழிலைச் செய்ததை,

“சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கால்போல் பிரியலாம்” (அகம்: 1:5-6)

“சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினேன் ஆகி” (அகம்: 356 : 9-10)

என்பது சுட்டும். இதிலிருந்து தொன்மையான காலத்திலேயே சாணை பிடிக்கும் கல் இருந்தது என்பது விளங்கும்.

## 1.6. உலோகத் தொழில்

இரும்பு, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு தொழில் செய்யும் கொல்லர்கள் இருந்தது போலவே வெண்கலம், செம்பு போன்றவற்றைப் பயன்படுத்திப் பல்வகைப் பொருட்களைப் பண்டைத் தமிழர் செய்து வந்துள்ளனர். வெண்கலத்தை உருக்கிக் கலங்கள் செய்பவரை கஞ்சகாரர் என்றும், செம்பினால் கலம் செய்வோரை செம்பு கொட்டிகள் என்றும் அழைக்கப்பெற்றுள்ளனர். இவ்வுலோகங்களைப் பயன்படுத்திக் கலன்கள் செய்யப்பெற்றதற்கான சான்றுகள் கிடைக்கின்றன. ஆனால் செய்வதற்குப் பயன்படுத்திய கருவிகள் குறித்த செய்திகள் கிடைக்கவில்லை. "கம்மியர் செம்புசொறி பானை"[42] என்று நற்றிணை குறிக்கின்றது. இதிலிருந்து செம்பினால் பானை செய்துகொள்ளப்பெற்றமை விளங்கும்.

## 1.7. அணிகலத்தொழில்

பண்டைத் தமிழர் அணிகலத்தொழிலிலும் சிறப்புப் பெற்றிருந்தனர். அணிகலன்கள் செய்யும் பொற்கொல்லர்களுக்குப் "பணித்தட்டார்"[43] என்று பெயர். சங்க இலக்கியப்பாடல்களில் பல குறிப்புகள் பொன்வேலை பற்றியும், பொற்கொல்லர் திறமை பற்றியும் காணப்பெறுகின்றன. யானைக்குத் தொடி (வளை) யிடும் கொல்லரைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படை,

"பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்" (பெரும் : 436)

என்று குறிப்பிடும்.

இவ்வணிகலத் தொழிலுக்கும், கொல்லுத் தொழிற் கருவிகளான துருத்தி, கெடிறு, உலை, சம்மட்டி, அரம் ஆகியவைகளைப் பயன்படுத்தியிருத்தல்

வேண்டும். என்றாலும் இவற்றைப் பயன்படுத்தியமைக்கான சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும், பொன்வேலைக்குப் பயன்பட்ட உரைகல், அரம் குறித்த செய்திகள் கிடைக்கின்றன.

### 1.7.1. உரைகல்

பொற்கொல்லர்கள் பொன்னை உரைத்துப் பார்ப்பதற்கு உரைகல்லைப் பயன்படுத்துவர். இது கட்டளைக்கல் என்றும் அழைக்கப்பெறும். இதனைப்பற்றி அகநானூறு, ஐங்குறுநூறு, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்கள் சுட்டுகின்றன. இதனை,

" பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்" (அகம். 178.11)

" உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை" (அகம். 192.4)

" பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்" (பெரும். 220)

என்று இலக்கியங்கள் குறிப்பிட்டுச் செல்வதினின்றும் உணரலாம். இவற்றினின்றும் உரைகல்லை இலக்கியங்கள் கட்டளைக்கல் என்றே சுட்டியதையும், பொன்னின் தரத்தை அறிவதற்குப் பயன்பெற்றதையும் அறியமுடிகின்றது.

### 1.7.2. அரம்

இதனைப் பொற்கொல்லர் அணிகள் செய்யப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

"வாளரந் துமித்த வளை" (அகம். 24.1-2)

"அரம்போழ்ந் தறுந்த இலங்குவளை" (மது. 316)

என்றதனால் உணரலாம்.

சங்கையறுத்து வளையல் செய்வதற்கு இவ்வரம் பயன்பெற்றதை,

"கடற்கோடு அறுத்த அரம்போழ் அவ்வளை

முழங்குகட றந்த விளங்குகதிர் முத்தம்

அரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை" (மது. 316-317)

என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவற்றிலிருந்து சங்கை அறுப்பதற்கும், வளையலாகச் செய்வதற்கும் அரம் பயன்பெற்றமை விளங்கும்.

## 1.8. தோல் தொழில்

பண்டைத் தமிழர் தோலினைப் பயன்படுத்தி வாழ்க்கைக்குத் தேவையான புழங்கு பொருட்களைச் செய்திருக்கின்றனர். இத்தோலை இலக்கியங்கள் "உரிவை, பச்சை, அதள், சருமம்"[44] போன்ற பெயர்களால் சுட்டுகின்றன. எனினும் இத்தொழில் செய்வார்க்கு உதவிய நிலையில் உள்ள தொழில் சார்ந்த புழங்கு பொருள்களைக் குறித்த செய்திகள் கிடைக்கவில்லை.

## II. நிலஞ்சார் தொழில்கள்

நிலஞ்சார் தொழில்களில் இடம்பெறும் புழங்குபொருட்கள் குறித்த செய்திகள் பின்வரும் உட்தலைப்புக்களின் வழி விளக்கப்பெறுகின்றன.

2.1. கால்நடைபேணல்

2.2. வேட்டையாடுதல்

2.3. ஆறலைத்தல்

2.4. மீன்வேட்டம்

2.5. உப்பு விளைவித்தல்

2.6. முத்துக்குளித்தலும் சங்கெடுத்தலும்

## 2.1. கால்நடைபேணல்

கால்நடைகளைப் பேணி வளர்ப்பது முல்லை நிலமக்களின் தொழிலாகும். இவர்களை ஆயர், கோவலர், இடையர் என்று பல பெயர்களால் அழைப்பர். இடையன் கால்நடைகளை மேய்க்கச் செல்லும்பொழுது உறியுடன், தீக்கடைக்கோல் ஆகிய கருவிகளை இட்டுவைத்த தோற்பையை ஒருசேரக் சுருக்கிட்டுப் பனையோலைப் பாயோடு முதுகிற்கட்டி எடுத்துச்செல்வான். இதனை,

"பாணி கொண்ட பல்கான் மெல்லுறி
ஞெலிகோற் கலப்பை யதனொடு சுருக்கிப்
பறிபுறத் திட்ட பானொடை யிடைய" (நற் : 142.2-4)

என்ற அடிகள் சுட்டும். ஆநிரைகளை மேய்க்கும்போது, வேய்ங்குழலை வாயின்கண் வைத்து முல்லைப்பண் இசைத்தலும் உண்டு. இதனை,

"....... ..... ...... ....... கன்றொடு
கறவைப் பல்லினம் புறவுதொறு உகளக்
குழல்வாய் வைத்தனர் கோவலர்" (அகம். 354.3-4)

என்ற அடிகள் விளக்கும். மேலும் ஆநிரைகள் நீருண்ணத் தம் கையிலுள்ள கோலால் சிறிய பத்தலைத் தோண்டுவர் என்பதை,

"கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய
வானீர்ப் பத்தல்" (ஐங். 304 : 1-2)

என்னும் அடிகள் விளக்கும்.

ஆயர் காலையில் மாடுகளை ஓட்டிச்செல்வர். அவ்வாறு ஓட்டிச்செல்லும்பொழுது தமக்குரிய உணவினை எருதின் கழுத்தில் மூங்கிற் குழாயில் பெய்து பூட்டுவர். இதனை,

“... ... ... .. கோவலர்

மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி” (அகம். 311.9-10)

என்ற வரிகளின் வழி உணரலாம். மேலும் இதனை,

“... .... .... .... துளங்கிமில் நல்லேற்றுத்

தழூஉப்பிணர் எருத்தந் தாழப்பூட்டிய

அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த

துறுகாழ் வல்சியர்” (அகம். 253.13-16)

என்று குறிப்பிடுவார் நக்கீரர்.

ஆயர் ஆடுமேய்க்கும் காட்டில் புதிய வழிப்போக்கர் வரும்பொழுது எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மூங்கில் குழாயிலிருந்து புளிச் சோற்றைத் தேக்கு இலையில் பகிர்ந்து அளிப்பர். இப்பண்பினை,

“... .... .... .... .... தீம்புளி

செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்” (அகம். 311.10-11)

என்பது குறிக்கும். இவற்றிலிருந்து ஆயர்குலத்தவர் கால்நடைகளைப் பேணி வளர்ப்பதற்கு உறி, தீக்கடைக்கோல், பனையோலைப்பாய், குழல், சிறியகோல், சோறு எடுத்துச் செல்ல மூங்கில் குழாய் ஆகியவற்றைப் பயன்படுத்தியமை விளங்கும்.

## 2.2. வேட்டையாடுதல்

பழந்தமிழர்கள் முதன்முதலில் நாடோடிகளாக அலைந்து திரிந்தபோது தங்களது உணவுக்காகவும், பாதுகாப்பிற்காகவும் பல்வேறு கருவிகளைப் பயன்படுத்தி வந்தனர். வேட்டையாடுவதற்கும் பாதுகாப்பிற்கும் அம்பு, வேல், ஈட்டி போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

நாடோடிகளாக அலைந்து திரிந்த மக்கள் கற்காலத்தில் கற்களையே தங்களது ஆயுதங்களாகக் கொண்டிருந்தனர். கற்காலத்தை அடுத்துவந்த புதிய கற்காலத்தில் அவர்கள் தங்களது கற்கருவிகளுக்கு வடிவங்கள் கொடுத்து அவற்றைப் பயன்படுத்தி வந்தனர். பிறகு கனிப்பொருள்களைக் கண்ட நாகரிக காலத்தில் எஃகினால் அமைந்த பல படைக்கலன்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

இவ்வகையில் வேட்டைத் தொழிலுக்குப் பயன்படுத்திய கருவிகள் பல திறத்தன. அவைகள் குறித்த செய்திகளைக் கீழ்க்கண்டவாறு பகுத்துக் காணலாம்.

2.2.1. வலைகள்

2.2.2. வில், அம்பு

2.2.3. ஊன்றுகோம்பு

### 2.2.1. வலைகள்

சங்க காலத்தில் வேட்டைத் தொழில் சிறப்படைந்திருந்தது. வேட்டைக்குச் செல்வோர் தேவையான கருவிகளுடன் சென்றுள்ளனர். காட்டில் எல்லாத் திசைகளிலும் அலைந்து வேட்டையாடுதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும், சரியான

இடமறிந்து வலை விரித்தலும், பதுங்கிய இடத்திலிருந்து விலங்கை வெளிப்படச் செய்தலும், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பாய்ந்து தாக்குதலும் செய்துள்ளனர் (குறி: 123-132). குறிப்பாக வலை வேட்டைத் தொழிலுக்கு நன்கு உதவியுள்ளது.

கானவர் அகன்ற நிலப்பிளவின் வாயிலில் வார்களால் பின்னப்பட்ட கண்ணியும், வலையும் அமைப்பர். பன்றிகளை வேட்டைநாய் கொண்டு துரத்தி அப்பிளவில் விழச்செய்வர். அவை வலையில் சிக்குறும். அதனைத் தம் சிறுகுடிக்குக் கொண்டு வருவர்.

"சிறுகட் பன்றிப் பெருஞ்சி வொருத்தல்
சேறா டிரும்புற நீறொடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பழீஇக்
கோணாய் கொண்ட கொள்ளைக்
கானவன் பெயர்க்குஞ் சிறுகுடி யானே" (நற் : 82.7-11)

என்ற பாடலடிகள் முற்காட்டிய செய்தியினை விளக்குவதாக அமையும்.

வேட்டை நாய்களுடன் பசிய தூறுகளை அடித்து வேலியை அமைத்துப்பின் தொடர் வலைகளைக்கட்டிக் குறுமுயல்களை அவ்வலையகத்தே வளைத்துப் பிடிப்பர். இதனை,

"பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி" (பெரும் : 112-113)

என்ற அடிகள் சுட்டும். இவ்வாறு பன்றி, முயல் ஆகியவைகளை வேட்டையாடுவதற்கு வலை என்கிற வேட்டைசார் புழங்குபொருள் பயன்படுத்தப் பெற்றுள்ளமையை உணரலாம்.

பறவைகளைப் பிடிப்பதற்கும் வலை பயன்படுத்தப்பெற்றதாகத் தெரிகிறது. இவ்வலையை முதலில் விரித்துக்கட்டுவர். பின்னர் பிற பறவை இனத்தை வளைத்துக்கொண்டு வருமாறு பார்வைப் பறவையை செலுத்துவர். அத்தகைய பார்வைப் பறவையின் சூழ்ச்சியால் துணையினின்று நீங்கிச் சென்ற கணந்துள் என்னும் பறவை ஓரிடத்தே தனித்திருந்து கூவிய காட்சியினைக் குடவாயிற் கீரத்தனார் என்பார்,

"படுவலை வேட்டுவன் பார்வையின் ஒரீஇ
நெடுங்காற் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி" (நற். 212.1-2)

எனக் குறிப்பிடுவதினின்றும் உணரலாம்.

சேவற்புறாவானது வேட்டுவனது வலையை அறுத்துச் சென்றது. இதனை,

"கொலைவல் வேட்டுவன் பரிந்து போகிய
கானப் புறவின் சேவல்" (நற். 189. 8-8)

என்பார் ஔவையார். இவ்வகையில் பறவைகளைப் பிடிப்பதற்கும் வலையைப் பயன்படுத்தியமை தெளிவாகிறது.

## 2.2.2. வில் அம்பு

வேட்டுவர் வேட்டைக்குச் செல்லும்பொழுது வேட்டையாட வில் அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவியை விலங்குகளை வேட்டையாட மட்டுமின்றி, அவற்றிடமிருந்து தம்மைக் காத்துக்கொள்ளவும் பயன்படுத்தப்பெற்றதாகக் கருதலாம்.

"... .... .... ... ... பெருங்கை வேழம்

வெறிகொள் சாபத்து எறிகணை வெரீஇ"

என்று யானையானது வேட்டுவனுடைய அம்பிற்குப் பயந்து ஓடியதாகக் கூறப்பெற்றுள்ளது. மேலும் வேட்டுவன் யானையை அம்பினால் குறிபார்த்து மார்பில் செலுத்திக்கொன்று அதன் கொம்பினை வீட்டிற்குக் கொண்டுவந்ததை அகநானூறு சுட்டுகின்றது.

முள்ளம் பன்றியின் ஏற்றை வில்லை வளைத்துக் கணை எய்து கைக்கொண்ட செய்தியை,

"வன்கைக் கானவர் வெஞ்சிலை வணக்கி

உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு" (நற். 228.6-7)

மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் தம்பாடல் வரியில் பதிவு செய்துள்ளார்.

கானவன் சுனையருகே பதுங்கியிருந்து வில்லினால் எய்து கொன்று தந்த கோட்டினையுடையது ஆண் பன்றி (நற். 336. 3-4) என்பதிலிருந்து பன்றியை வேட்டையாடுவதற்கு வில் பயன்படுத்தப் பெற்றமை தெளிவுறும்.

"எலிவேட்டைக்கு உடைவேல் மரத்தின் முள்ளை ஊகம்புல்லின் நுண்ணிய கோலில் செருகிய அம்பை வில்லில் வைத்துப் பருத்தி வேலி அடியில் இருக்கும் எலியை வீழ்த்த குறிபார்த்தனர்"[45] என்பதால் எலிவேட்டைக்குக் கூர்மையான வேலமரத்தின் முள்ளைப் பயன்படுத்தியமை விளங்கும்.

## 2.2.3. ஊதுகொம்பு

வேட்டை நாயுடன் பலர் சேர்ந்து வேட்டைக்குச் செல்வதுண்டு. அவ்வாறு சென்று வேட்டையாடும்பொழுது அவர்கள் பிரிந்து செல்லும் சூழல் உருவாகும். அவ்வாறு பிரிந்து சென்று வேட்டையாடிய பின்னர், மீண்டும் எல்லோரும் ஒன்று சேரவும், வேட்டை நாயை அழைப்பதற்கும் ஊதுகொம்பினை ஊதுதல் வழக்கமாக இருந்துள்ளது. இதனை,

"ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டோடு
வேய்பலில் அழுவத்துப் பிரிந்தநின்
நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே" (அகம். 318.13-15)

என்னும் அகநானூற்றுப் பாடலடிகளால் அறியலாம். மேலும்,

"கோடு துவையாக் கோள்வாய் நாயொடு" (நற். 216.1-2)

என்பதும் சுட்டும்.

இவ்வாறு சங்ககாலத்தில் விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாட, வலைகளையும், வில் அம்பு, ஊதுகொம்பு ஆகிய புழங்குபொருட்களைப் பயன்படுத்திய பாங்கு தெளிவாகிறது. வேட்டையில் வேட்டை நாய்க்கும் சிறப்பான இடமுண்டு.

## 2.2.4. ஆறலைத்தல்

ஆறலைத்தல் என்பது பாலைநிலத்தில் வாழ்வோர் மேற்கொள்ளும் தொழிலாகும். இங்கு வாழ்வோர் கொலைக்கு அஞ்சாத வழிபறிக் கொள்ளைக்காரர்கள் ஆவர். இவர்கள் ஆநிரைகளைத் திருடுவர். பாலைநில வழிப் போக்கர்களிடமிருந்து

உடைமைகளைப் பறிப்பர். மேலும் அவர்களது துன்பங்களைக் கண்டு மகிழ்வர். இச்செயல்களையே தம் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்களைப் பற்றிய சில குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணப்பெறுகின்றன. இதனை,

"வழங்குநர் இன்மையின் வௌவுநர் மடிய" (அகம். 1:14)

"அன்பில் ஆடவர்" (நற் :352:1-2)

என்பவை சுட்டும். மேலும் வழிப்போக்கர்களிடமிருந்து பொருட்களைப் பெறுவதற்கு அம்பினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர்" (புறம் :3:20-21)

என்ற புறநானூற்று வரியின் வாயிலாக அறியலாம்.

பாரம் மிக்க கழுதைகளின் நீண்ட நிரையைப் பின்பற்றி வரும் வணிகரை வாட்டி, அவர்களது தலையைத் துணிப்பர். துடியினைக் கொட்டி அணிகலன்களைக் கொள்ளையிடுவர். அவற்றை அவரவர் கொள்ளவேண்டிய முறைப்படிப் பிரித்துக்கொள்வர் (அகம். 89:10-16). இவற்றிலிருந்து ஆறலைக்கள்வர் அம்பையும், துடியையும் தொழில்காலத்தில் பயன்படுத்தியதாகத் தெரிகிறது.

## 2.4. மீன்வேட்டம்

பரதவர் வாழ்க்கை முழுவதும் கடலோடு தொடர்புடையதாகும். நெய்தல் நிலத்துப் பரதவ மக்களின் தலையாய தொழில் மீன்பிடித்தலாகும். இவர்கள் தங்களின் மீன்பிடித்தொழிலுக்கு வலைகள், பறிகள், விசைத்தூண்டில், தூண்டில், எறியுளி ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இவைகள் குறித்த செய்திகளைப் பின்வரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

2.4.1. வலைகள்

2.4.2. பறிகள்

2.4.3. விசைத்தூண்டில்

2.4.4. தூண்டில்

2.4.5. எறியுளி

2.4.6. மரக்கலங்கள்

## 2.4.1. வலைகள்

இது சிறுசிறு கண்களையுடையது. நெடிய கயிற்றால் பிணைக்கப்பெற்றது. இவைகளில் சோவிகளைக் கொண்டு முடிச்சிட்டிருந்தனர் (ஐங். 166:1, பெ.பா. 274).

"குறுங்கண் அவ்வலை"[46] என்று பாடல்கள் குறிப்பதால் சிறிய கண்களையுடையதாக வலைகள் இருந்தமை விளங்கும். இவ்வலையானது செந்நிறமாக இருந்ததை,

"‥ … … …. …. …. … …. செங்கோற்

கொடுமுடி யவ்வலை" (நற். 303.9-10)

என்ற பாடல் வரியினின்றும் உணரலாம். பொதுவாக வலையானது சிறுசிறு கண்களையுடையதாகவும், சிவந்த நிறத்துடனும், கோல்கள் இணைக்கப்பெற்றதாகவும், நெடிய கயிற்றால் பிணைக்கப்பெற்றதாகவும் அமைந்தமை தெளிவுறும்.

இவ்வலை சுறாமீன் மற்றும் இறால்மீன்களைப் பிடிப்பதற்குப் பயன்பெற்றுள்ளது. மீனவர் கடலுக்குச் சென்று உறுதி வாய்ந்த முறுக்கிய கயிற்றால் முடிக்கப்பெற்ற வலையினைக் கடலில் வீசி எறிந்தனர். ஆனால் சிறிது நேரத்தில் சினச்சுறா வலையைக் கிழித்துவிடுகிறது. இதனை,

"கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை" (அகம்: 340:21)

என்பது சுட்டும். முதல்நாள் வலையை அறுத்து மீன்வேட்டம் நடைபெறாது போயினும் மறுநாள் மிக்க வலியுடனே சுறாமீனைப் பிடித்துக்கொண்டு வருவர். இதனை,

"கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
கோட்சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயாது எமர்வா ரலரே" (நற்: 215: 10-12)

என்ற அடிகள் குறிக்கும். இதிலிருந்து சுறாமீன் வேட்டத்தில் வலையின் பங்கு வெளிப்படும்.

"இறால் மீனையும் வலைவீசிப் பிடித்துள்ளனர். இதனைப் பாடல்கள்"[47] சுட்டுகின்றன. மேலும் இவ்வலை குறித்து நற்றிணையும், அகநானூறும் மிகுதியாகக் குறிப்பது இங்கு சுட்டத்தக்கதாகும்.

பரதவர் கடலில் மீன்பிடிப்பதோடு கழிகளிலும் மீன்பிடிப்பர். கழிகளிலும் சுறாமீன்கள் திரிவதுண்டு. வேறுசில மீன்களும் கழியில் மிகுதியாக வாழும். இக்கழிகளில் மீன்பிடிக்கும் வலை, கடலில் மீன்பிடிக்கும் வலையைவிட மாறுபட்டவை. கழியில் பயன்படும் வலைகளில் நேரிய சிறுகோல்களைப் பொருத்திப்

பிணைப்பர். அக்கோல் வலைமடிந்து விடாமல் விரித்துப் பிடித்திருக்கும். விரிந்திருக்கும் வலையில் மீன்களும் இறால்களும் சென்று சிக்கிக்கொள்ளும். இதனை,

" இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை
முடங்குபுற இறவோடு இனமீன் செறிக்கும்" (அகம் : 220: 16-17)

என்ற பாடல் சுட்டும். இதிலிருந்து பரதவர் கடலிலும், கழியிலுமாக மீன் பிடிக்க இருவேறு வலைகளைப் பயன்படுத்தியமை தெளிவுறும்.

## 2.4.2. பறிகள்

பறி என்பது மீன்பிடி கருவியாகும். இஃது மீன்களை வாரி எடுக்கப்பயன்பெற்றுள்ளது. இப்பறிகளைக் குறித்து அகநானூறு, நற்றிணை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்கள் சுட்டுகின்றன. இதனை,

"பறிகொள் கொள்ளையர் மறுக உக்க" (அகம் : 300:3)
"குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்" (பெரும் : 265)

என்ற பாடலடிகள் சுட்டும். இச்செய்திகளிலிருந்து மீன்களை வாரி எடுப்பதற்குப் பயன்பட்ட கருவி பறி என்பதை அறிய முடிகின்றது. ஆனால் இதன் அமைப்பைப் பற்றிய விரிவான செய்திகள் கிடைக்கப்பெறவில்லை.

## 2.4.3. விசைத்தூண்டில்

பரதவர் கடலில் மீன்பிடிக்க வலையைப் பயன்படுத்தியதோடு மட்டுமல்லாமல் விசைத் தூண்டிலையும் பயன்படுத்தியுள்ளனர். இஃது இழுக்கும்பொழுது விசையுடன் வெளிப்பட்டதால் இதற்கு விசைத் தூண்டில் என்ற பெயர் வழங்கப்பெற்றதாகக் கருதலாம். இதனை,

" ... ... ..... .......... ....      பரதவர்

வாங்குவிசைத் தூண்டி லூங்கூங் காசி"      (நற் : 199:6-7)

என்ற நற்றிணையடிகள் சுட்டும்.

## 2.4.4. தூண்டில்

தூண்டில் என்பதற்கு "மீன்பிடிக்கப் பயன்படும் தக்க இணைக்கப்பட்ட உறுதியான இழையின் நுனியில் கொக்கிபோன்ற இரும்பு முள்ளையுடைய நீண்ட கோல்"[48] என்று தற்காலத் தமிழகராதி விளக்கம் கூறும்.

குளம், குட்டை, ஏரி போன்ற நீர் நிலைகளில் மீன்பிடிக்கத் தூண்டில் என்கிற கருவி பயன்படுத்தப்பெற்றுள்ளது. கோலில் நூலைக் கட்டிப்போட்டு மீன் பிடித்தனர். இக்கருவியின் முன்பகுதி வளைந்து கூர்மையாக இருக்கும். அதன் மேற்பகுதியில் மீன்களுக்கு இரையாகிய உணவுப்பொருட்கள் கோர்க்கப்பட்டிருக்கும் இதனைக் "கொடுவாய் இரும்பு"[49] என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதனை,

"கோள்வல் பாணமகன் தலைவலித் தியாத்த

நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇக்

கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்

பொதுயிரை கதுவிய போழ்வாய் வளை"      (பெரும் :284-287)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் மீன்பிடிக்கும் தூண்டில் குறித்து விளக்குகின்றது. இத்தூண்டில் குறித்து,

"தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது"      (அகம் : 36:6)

என்று குறிப்பது இங்கு எண்ணத்தக்கதாகும்.

## 2.4.5. எறியுளி

பரதவர் சுறாமீன் போன்ற பெரிய மீன்களைப் பிடிப்பதற்கு எறியுளி என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். இ∴து எறிந்தே பயன்படுத்தப்பெற்றதாலும் இதன் அமைப்பு உளிபோன்று காணப்பட்டதாலும் இக்கருவிக்கு எறியுளி என்னும் பெயர் ஏற்பட்டிருக்கலாம். "இது படகிலிருந்து மீனின்மேல் எறிதற்குரிய கருவி என்றும், இவ்வுளி உலர்ந்த மூங்கிற்கழியின்றலையிலே கயிற்றால் யாக்கப்பட்டிருப்பது"[50] என்றும் உரையாசிரியர்கள் விளக்கம் கொடுக்கின்றனர். இதனை வாழ்வியல் களஞ்சியம், "எறி ஈட்டி என்று குறிப்பிட்டு இவை இரண்டு வகைப்படும் எனவும், ஒன்று கழியின் முனையில் முள்வடிவிலான அமைப்புடைய அம்பைப் போன்றது என்றும், மற்றொருவகை முனையில் முள்ளுடைய ஈட்டி போன்றது இதன் கைப்பிடி நீண்ட கயிற்றால் ஆனது என்றும் குறிப்பிடுகின்றது."[51] இதில் இரண்டாவதாகக் கூறப்பெறும் நீண்ட கயிற்றால் ஆனதையே பண்டைக் காலத்தில் பயன்படுத்தியுள்ளனர். இவ்வெறியுளி குறித்த செய்திகள் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்கள் வாயிலாக எறியுளி என்னும் கருவி முறுக்கப்பட்ட கயிற்று நுனியில் கட்டப்பட்டு எறியப்பெற்றதாக அறிய முடிகின்றது.

குறுந்தொகைப் பாடலில் "கொல்லுந் தொழிலிற் பொலிந்த கூர்வாய் எறியுளியைப் படகுடைய பரதவர் சுறாமீன் மீது எறியக் கரையிலிருந்து அன்னக்கூட்டம் அஞ்சி ஓடிய செய்தி கூறப்பெற்றுள்ளது."[52] அகநானூற்றுப் பாடலில் "பரதவர் எறியுளியால் எறியப்பெற்ற பெருமீன் புண் உமிழ் குருதியால் கடல் நீரைக் களங்கப்படுத்தி, வானவில் போன்று தோன்றுமாறு விண்ணிலே தாவியபின் கடலில் வீழ்ந்து உழக்கித் தோணியின் பக்கத்தே சென்றது"[53] என்று கூறப்பெற்றுள்ளது. நற்றிணையும்,

"கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்

திண்திமில் பரதவர் 'ஒண்சுடர்க் கொளீஇ" (நற்: 388: 3-4)

என்று சுட்டுகின்றது. இவற்றிலிருந்து கடலில் பெரிய சுறாமீன்களைப் பிடிப்பதற்கு எறியுளி பயன்பெற்றமை விளங்கும்.

## 2.4.6. மரக்கலங்கள்

கடலில் நெடுந்தொலைவு சென்று மீன் பிடிப்பதற்கு மரக்கலங்களைப் பயன்படுத்தியுள்ளனர். அம்மரக்கலன்கள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப் பெறுகின்றன.

1. திமில்
2. அம்பி
3. தோணி

மேற்கூறிய மூன்று மரக்கலங்களும் மீன்பிடித் தொழிலுக்குப் பயன்படுத்தப் பெற்றவை என்றாலும், திமில் என்னும் மரக்கலத்தைப் பற்றிச் சற்று விரிவான செய்திகள் கிடைக்கின்றன.

### திமில்

தமிழ் பெருஞ்சொல் அகராதியில் திமில் என்னும் சொல்லுக்குக் "கட்டுமரம், கலம் மற்றும் கப்பல்"[54] போன்ற பல பொருட்கள் கொடுக்கப்பெற்றுள்ளன. இலக்கியச் சான்றுகளைக் கொண்டு பார்க்கும்போது திமில் என்னும் கலம் கட்டுமரத்தைக் குறிப்பதாகக் கூறுவர்.

திமில் என்ற சொல் "கொடுந்திமில், நெடுந்திமில், திண்திமில், நிரைதிமில்"[55] என்று பல அடைமொழிகளால் குறிப்பிடப்பெற்றுள்ளது. இக்குறிப்பிலிருந்து நீண்ட பெரிய வடிவுடன் இத்திமில் இருந்திருக்க வேண்டும் என்பதை ஒருவாறு அறியமுடிகின்றது.

## அம்பி

அம்பி என்னும் கலம் மீன்பிடிக்கப் பயன்பெற்றுள்ளது. இதனைக் குறித்து நற்றிணைப் பாடல் விளக்குகின்றது. மீன்பிடிப்பதற்கு வலையுடன் அம்பியில் ஏறிச்சென்றுள்ளனர். இதனை,

> "வடிகதிர் திரித்த வன்ஞாட் பெருவளை
> யிடிக்குரற் புணரிப் பௌவத் திடுமார்
> நிறையப் பெய்த வம்பி காழோர்
> சிறையருங் களிற்றிற் பரதவ ரோய்யுஞ்" (நற். 74 : 1-4)

என்ற பாடல் அடிகள் சுட்டும்.

"அம்பி என்பது யானைப் பாகனுக்கு அடங்காது மதம் பிடித்து ஓடுகின்ற யானைகளைப் போன்று காணப்பெற்றது"[56] எனப்புலவரால் உவமை கூறப்பெறுவதினின்றும் அம்பியின் விரைவுத் தன்மை வெளிப்படும். அவ்வகையில் அம்பியை மீன்பிடித்தொழிலில் பயன்படுத்தியமையை உணரலாம்.

## தோணி

இத்தோணி என்பது ஒரே மரத்தில் குடைந்த செய்யப்பெற்ற ஒரு கலமாகும். ஒரே மரத்தைத் தோண்டி உருவாக்கப்பெறும் கலமாதலால் தோணி

எனப்பெற்றதாகலாம். பெரிய மரக்கலங்களில் கொண்டுவரப்பெற்ற பொருட்கள் சிறிய தோணிகளில் ஏற்றப்பெற்றுக் கரைக்குக் கொண்டுவரப்பெற்ற செய்தி புறநானூற்றுப் பாடலில் (343:5,6) கூறப்பெற்றுள்ளது.

மற்றொரு புறநானூற்றுப் பாடலில் (299:2,3) பகைவருடைய படையினை ஊடுருவிச் செல்லும் குதிரைக்குக் கடல்நீரைக் கிழித்துச் செல்லும் தோணி உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. இக்குறிப்புக்களிலிருந்து தோணி என்னும் கலம் வேகமாகச் செல்லும் குதிரையைப்போன்று செல்லக்கூடியது என்பதனை உணரலாம்.

## 2.5. உப்பு விளைவித்தல்

உப்புத்தொழிலில் ஈடுபட்டுள்ளவரை உமணர் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடும். சங்க காலத்தில் நெய்தல் நில மக்கள் மீன்பிடித்தலுடன் உப்பு விளைவித்தல் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர்.

சிறுசிறு பாத்திகள் அமைத்து அவற்றில் கடல் நீரையும், உப்பங்கழி நீரையும் பாய்ச்சி உப்பு விளைவித்துள்ளனர். ஆனால் உப்பு விளைவித்தற்குப் பயன்படுத்திய கருவிகள் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை. விளைவித்த உப்பைப் பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்பதற்கு வண்டிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

" .... ..... ..... .... .... .... உமணர்
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்" (நற். 4:7-9)

என்ற நற்றிணைப் பாடல் வரிகளினின்றும் உப்புத்தொழில் செய்வோர்க்குப் போக்குவரத்திற்குரிய புழங்குபொருளாக வண்டி இருந்தமை தெளிவாகும்.

## 2.6. முத்துக் குளித்தலும், சங்கெடுத்தலும்

முத்துச்சிப்பிகள் நிறைந்த கடற்பகுதிகளையொட்டி வாழ்ந்த நெய்தல் நில மக்கள் முத்துக்குளித்தல் தொழிலிலும், சங்கெடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர்.

கடலிலிருந்து கரைக்கு அலைகளால் அடித்து வரப்பெற்று வெண்மணற் பரப்பில் அம்முத்துக்கள் ஒளிசிந்தியதை,

"அலங்கு இதழ் நெய்தல் கொற்கை முன்துறை
இலங்கு முத்து" (ஐங் :185:1-2)

"…. ….. …. ….. ….. … முழங்குகடல்
திரைதரு முத்தம் வெண்மணல் இமைக்கும்" (ஐங் :185-1-2)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

கடலினின்றும் திரட்டி வந்த முத்துக்களைப் பரதவர்கள் பங்கிட்டுக் கொள்வர். இதனை அகநானூறு,

"வரிதிரைக்
கண்திரள் முத்துக் கொண்டு ஞாங்கர்த்
தேன்இமிர் பெருந்துறைப் பரதவன்" (அகம் : 280 :11-14)

என்று குறிக்கின்றது. எனினும் இத்தொழிலுக்குரிய தொழில் சார் புழங்குபொருள்கள் குறித்த குறிப்புக்கள் கிடைக்கவில்லை.

முத்துக்களைப் போலவே சங்குகளும் கடலில் சில பகுதிகளில் மிகுந்திருக்கின்றன. இச்செய்தியை,

"இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்" (அகம் : 350:10-11)

என்ற அகநானூற்றுப்பாடல் பகரும். சங்குகள் கரையிலும் வெளிப்பட்டு வருதலும் உண்டு. இதனை,

"வலம்புரி உழுத வார்மணல்" (ஐங் : 193 :1)

என்பார் அம்மூவனார். இவ்வாறு சங்கெடுத்தல் செய்திகள் கிடைக்கின்றன. பவளமும் பரதவரால் எடுக்கப்பெற்றது என்ற செய்தி பதிற்றுப்பத்தில்,

" தாழ் அடும்பு மலைந்த புணரிவளை ஞரல
இலங்குநீர் மூத்தமொடு வார்துகில் எடுக்கும் " (பதி: 30:6-7)

என்று கூறப்பெற்றுள்ளது. மேற்குறித்த செய்திகளின் வழி முத்துக்குளித்தல், சங்கெடுத்தல் தொழில் பற்றிய செய்திகள் மட்டுமே கிடைக்கின்றன.

## 3. கைவினைத் தொழில்கள்

கைவினைத்தொழில்கள் குறித்த செய்திகளைக் கீழ்க்கண்ட உட்தலைப்புக்களின் வழிப்பகுத்துக் காணலாம்.

3.1 ஓலைத்தொழில்

3.2 பொம்மை செய்தல்

3.3 பாவை செய்தல்

3.4. சாயப்பாக்குத் தயாரித்தல்

3.5 கயிறு திரித்தல்

3.6 களவுத்தொழில்

## 3.1. ஓலைத்தொழில்

பண்டைத் தமிழர் பனை, தென்னை மர ஓலைகளைக் கொண்டு தங்களுக்குப் பயன்படும் வகையில் பல புழங்குபொருள்களை உருவாக்கியுள்ளனர். அவர்கள் கைவினைத் தொழிலாக ஓலைத் தொழில்களைச் செய்து வந்துள்ளனர். இத்தொழிலுக்குரிய தொழில் சார்ந்த புழங்குபொருட்களைக் குறித்த செய்திகள் கிடைக்கவில்லை. அத்தொழில் வல்லுநர்கள் உருவாக்கிய புழங்குபொருட்கள் மட்டுமே இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. அவைகளை பின்வரும் தலைப்புக்களின் வழிக் காணலாம்.

3.1.1. கூடை

3.1.2. ஓலைப்பாய்

3.1.3. குடை

### 3.1.1. கூடை

ஓலைகளைப் பயன்படுத்திச் செய்தகொள்ளப்பெற்ற கூடைகள் வட்டில், புட்டில், குடை எனப்பட்டன என்பதை,

"வராஅல் சொரிந்த வட்டி" (ஐங். 48: 2)

"விதைக்குறு வட்டி" (குறு : 155.2)

"போழிற் புனைந்த வரிப்புட்டில்" (கலி : 117.8)

"சோறு பொதி வெண்குடை" (அகம் : 121.12)

"அவல் வகுத்த பசுங்குடையால்

புதல் முல்லைப் பூப்பறிக்குந்து" (புறம் : 352 : 4)

என்ற சான்றுகள் விளக்கும். இக்கூடைகள் சாதாரணமானவை என்றாலும் கலைத்திறனோடு செய்துகொள்ளப்பெற்றிருத்தல் வேண்டும். சங்கப் பாடல்களின் வருணனைகளிலிருந்து கூடை என்பதற்கு 'கொட்டம்' என்ற பெயரும் உண்டு என்பது விளங்கும். சான்றாக, சிறுபாணாற்றுப்படையில் முசுண்டை மலர் கொத்தாக மலர்ந்திருந்த தோற்றத்திற்கு உவமையாக,

'முசுண்டை கொட்டம் கொள்ளவும்' (சிறு : 166)

எனக்கூறப்பட்டுள்ளது. கொட்டம் என்பது பனை, ஈந்து முதலியவற்றின் ஓலையால் பின்னப்பட்ட சிறுபெட்டியைக் குறிக்கும். ஆகவே, கொட்டம் என்பதும் கூடையின் பெயர்களுள் ஒன்று என்பது திண்ணம்.

### 3.1.2. ஓலைப்பாய்

பண்டைக்கால எளிய மக்கள் ஓலைப்பாயைப் பயன்படுத்தியமையை,

"பறிப்புற இடையன்" (அகம் : 94 : 4)

"பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்

உயவற் பெண்டிரேம் அல்லம்" (புறம் : 246 : 9)

என்ற சான்றுகள் விளக்கும். இதிலிருந்து எளிய மக்களுக்குப் பயன்படும் வகையில் ஓலைத் தொழில் நடைபெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவுறும்.

### 3.1.3. குடை

தம்மை மழையினின்று நனையாமல் பாதுகாக்கும் வகையில் பனையோலைக் குடையைச் செய்து கொண்டுள்ளனர். அகநானூற்றுப் பாடலொன்று,

"கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்" (அகம் : 194:7)

எனக்கூறுகிறது. புறநானூறும் பனையோலைக் குடைபோல என்ற பொருளில் உறைப்புழி ஓலைபோல (290:7) என்கின்றது. இதிலிருந்து மழையினின்று தம்மைக் காத்துக்கொள்ள ஓலைகொண்டு குடையைச் செய்துகொண்டமை தெளிவுறும்.

## 3.2. பொம்மை செய்தல்

ஆடுவதும் பாடுவதும் இளமை முதலே இருக்கும் மானிட இயல்புகள். பொழுதை இனிமையாகப் போக்கிட விளையாட்டு வேண்டத்தக்கது. விளையாட்டும் வினையும் கலந்ததே வாழ்க்கை. குழந்தைகளும், சிறுவர்களும் விளையாடல் பொழுதுபோக்காகும். விளையாட்டிற்குத் தேவையான கருவிகளை அவர்களே செய்துகொண்டு விளையாடி வாழ்ந்தமையை இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க காலத்தில் தமக்குத் தேவையானவற்றைத் தாமே செய்து விளையாட்டிற்குப் பயன்படுத்தியுள்ளனர். கீழ்க்கண்ட விளையாட்டுப் புழங்குபொருட்களை குறித்த செய்திகள் கிடைத்துள்ளன.

3.2.1. கிலுகிலுப்பை

3.2.2 மரப்பொம்மைகள்

3.2.3 பாவைசெய்தல்

ஆகிய பொருட்களைச் செய்துகொண்டதைப் பற்றிக் கீழ்வரும் பகுதியில் காணலாம்.

### 3.2.1. கிலுகிலுப்பை

சிறுகுழந்தைகளின் அழுகையைப் போக்க கிலுகிலுப்பையை ஆட்டி மகிழ்விப்பது இன்றைய வழக்கு. இவ்வழக்குப் பண்டைக் காலத்திலேயே நடைமுறையில் இருந்து வந்துள்ளது. நெய்தல் நிலத்தில் கிடைத்த முத்துக்களை வாளின் வாய்போன்று கூர்மையான வாயையுடைய கிளிஞ்சலின் உள்ளே இட்டுப் பொதிந்து ஆட்டுவர். இதனை,

"........... .................. நளிநீர் முத்தம்
வள்வாய் எருந்தின் வயிற்றகத் தடக்கி
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்". (சிறு: 57-61)

என்ற அடிகள் விளக்கும். இ·து ஓசை காரணமாக '.கிலுகிலி'. என அழைக்கப் பெற்றிருத்தல்வேண்டும். இதனைப் பரவலாக அத்தொழில் வல்லுநர்கள் செய்திருக்கவேண்டும்.

### 3.2.2. மரப்பொம்மைகள்

பண்டைக்காலத்தில் மரத்தாலாகிய வண்டி, யானை போன்றவைகளைச் செய்து பயன்படுத்தியுள்ளனர். சிறு குழந்தைகள் தளர் நடை பயில நடை வண்டிகளைச் செய்து கொடுத்துள்ளனர். இதனை,

"கால்வறோர் கையின் இயக்கி நடைபயிற்றா". (கலி 81:8)

"பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர்". (பட்:24-25)

என்ற பாடலடிகள் மூன்றுகால்களையுடைய நடைவண்டியைக் குறிக்கின்றன.

பண்டைக் காலத்தில் செல்வந்தர்கள் பொன்னைப் பயன்படுத்தித் தம் குழந்தைகளுக்கு யானை போன்ற பொம்மைகளைச் செய்து, அதனை நிற்க வைக்கும் பலகையை வைரம், பவளம் ஆகியவற்றை அத்தொழில் வல்லுநர்களைக் கொண்டு பதிக்கச்செய்தும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்பக்
கவழ மறியாநின் கைபுனை வேழம்
புரிபுனை பூங்கயிற்றிற் பைபய வாங்கி" (கலி: 80:4-9)
"கடியரணம் பாயாநின் கைபுனை வேழம்" (கலி:86:7)

என்று கலித்தொகையடிகள் சுட்டுகின்றன. இதிலிருந்து குழந்தைகள் விளையாட செல்வந்தர் உயர்தர வைரம், பவளம் கொண்டு செய்யப்பெற்ற யானைகளைக் கொடுத்தமை விளங்கும்.

### 3.2.3. பாவைசெய்தல்

பாவை என்றால் 'அழகிய உருவம்' என்பது பொருள். பாவை-பதுமை (பொம்மை) என்றும் விளக்குவர். இஞ்சிக்கு மற்றொரு பெயர் செய்யாப்பாவையாகும். எனவே பாவை என்பதற்கு உருவம் என்பதே பொருள் ஆகும். இப்பாவை ஆண், பெண் என்ற இருபால் உருவங்களையும் குறிக்கும்.

பாவை அவை செய்யப்படும் பொருட்களால் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகின்றது. 1. வண்டற்பாவை 2. பசும்பாவை 3. மரப்பாவை 4. பஞ்சாய்ப்பாவை 5. பூந்தாதுப்பாவை 6.அரக்குப்பாவை 7. பொன்பாவை என்பனவாகும்.

## 1. வண்டற்பாவை :

வண்டற்மண்ணைக் கொண்டு செய்யப்பெற்ற பாவை வண்டற்பாவையாகும். இதனை நற்றிணை குறிப்பிடுகின்றது. இதனை,

“நேரிழை மகளிர் வார்மண லிழைத்த

வண்டற் பாவை வனமுலை முற்றத்” (நற்: 191: 2-3)

என்று சிறுமியர் வண்டல் மண்ணால் செய்த பாவை கொண்டு மணலில் விளையாடுவதைக் குறிப்பிடுகின்றது. பெண்கள் இன்றும் மணலில் வீடுகட்டி விளையாடுவர். இன்று ஆற்றங்கரை, கடற்கடைகளுக்குப் போவதோ வண்டலில் பாவை அமைத்து விளையாடுவதோ இல்லை. இயற்கையோடு இணைந்து வாழ்ந்தபோது இருந்த இப்பழக்கம் அழிந்து போய்விட்டது. இன்று வண்டல் என்கிற களிமண்ணைக் கொண்டு கைத்தொழில் வல்லுநர்கள் வண்டற்பாவை செய்திருக்கின்றனர்.

## 2. பசும்பாவை

பசுங்கலம், பசுமட்கலம் என்ற தொடர்கள் “சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன.”[57] இவை பசிய சுடப்படாத மண்ணால் இயன்ற என்ற பொருளைத் தருவன. பசும்பாவை என்பதும் சுடப்பெறாத மண்ணால் செய்துகொள்ளப் பெற்றது என்பது விளங்கும். இப்பசும்பாவை கொண்டு தலைவி விளையாடி மகிழ்ந்துள்ளாள். தலைவியானவள் தலைவன் பிரிந்து சென்றபொழுது “சிறிய பசிய விளையாட்டுப் பாவையினையும் எம்மையும் நினையாராயினர்”[58] என்று கூறி வருந்துகின்றாள். இதிலிருந்து தலைவனும் பாவை கொண்டு தலைவியுடன் விளையாடியமை புலனாகும். பாவைக்கு முதலிடம் கொடுத்து முதலில் கூறியமை நோக்கத்தக்கது. பாவையைப்புனைந்து கொடுப்பதில் தலைவனுக்கும் பங்கிருந்தமை வெளிப்படுகின்றது.

## 3. பயிரினப் பாவைகள்

மரப்பாவை, பஞ்சாய்ப்பாவை, பூந்தாதுப்பாவை இவை மூன்றும் பயிரினங்களைக் கொண்டு செய்துகொள்ளப் பெற்றவைகளாகும்.

### 1. மரப்பாவை

தச்சுத்தொழில் வல்ல தச்சர்களும் பண்டைக்காலத்தில் தங்கள் தொழிலில் சிறந்து விளங்கியுள்ளனர். அவர்கள் மரத்தால் பாவை செய்துள்ளனர். இப்பாவை கொண்டு தலைவி விளையாடியதை,

"சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட அரிப்பெய்த அழகமை புனைவினை" (கலி: 59:5-6)

என்னும் அடிகள் விளக்கும்.. இவ்வாறு மரத்தால் பாவை செய்தனர். மரப்பாவையை அடியொற்றியே கோபுரங்கள், விமானங்கள் ஆகியவை மரச்சிற்பங்களாக வடிக்கப்பட்டன. மரப்பாச்சி (மரப்பாவைச்சி) பொம்மை செய்து அதற்கு வண்ணம் அளிப்பதும், அதை நவராத்திரி விழாவிலே வைப்பதும் இன்றும் கண்டதாகும்.

### 2. பஞ்சாய்ப்பாவை

'பஞ்சாய்' என்னும் ஒருவகைக் கோரையைக் கொண்டும் பாவைசெய்து விளையாடியுள்ளனர். இதற்கு ஓரையாடல் என்ற பெயரும் உண்டு. கோரையாலாகிய இப்பாவை பற்றிய செய்திகள் குறுந்தொகை, நற்றிணை ஆகிய இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

"பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து. மற்றிவள்" (குறு:276:1-2)

என்ற அடிகளில் பஞ்சாய்ப் பாவையைப் பண்ணிக்கொடுத்தும் தலைவி விளையாடாமல் இருப்பதைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். இதன்வழி தலைவியானவள் பஞ்சாய்ப்பாவை கொண்டு விளையாடியது அறியப்படுகிறது. இவ்விளையாட்டு ஒருவர் மட்டும் விளையாடாமல் பலர்கூடி விளையாடும் விளையாட்டாகவும் அமைந்துள்ளதை,

"விளையா டாயமொ டோரை யாடா" (நற்: 68:1)

எனும் அடி சுட்டும்.

## 3. பூந்தாதுப் பாவை

பூக்களை இணைத்துப்பாவை (உருவம்) செய்து விளையாடியுள்ளனர். இது பூந்தாதுப்பாவை என அழைக்கப்பெற்றுள்ளது. "பூந்தாதாலே செய்யப்பட்டதாய்க் குளிர்ந்த பனியிடத்தே கிடந்த விளையாட்டுப்பாவை, காலை வெயிலில் கிடந்து முறுகுதல் கண்டு விளையாட்டு மகளிர் தலைவியிடம் எடுக்குமாறு கூறுகின்றனர்."[59] இதில் பூந்தாதால் என்று குறிப்பிடாமல் 'தாது' என்று மட்டும் வந்திருந்தால் அது பொன்னால் இயன்றது என்றாகும். பூந்தாது என்று குறிப்பிடுவதால் பூக்களை இணைத்துச் செய்துகொண்டது என்பது திண்ணம். வெறும் பூந்தாது மட்டும் கொண்டுசெய்யப்பட்டதா? அதனுடன் வேறு ஏதேனும் கொண்டு செய்யப்பட்டதா? என்பது தெரியவில்லை. வண்டல் மண்ணால் பாவை செய்தல்போல மகரந்தப் பொடிகளைக் கொண்டு பாவை செய்திருத்தல் வேண்டும்.

## 4. அரக்குப்பாவை

அரக்கால் செய்த பாவை பற்றிக் குறுந்தொகையால் அறியமுடிகிறது. ஆனால் விளையாட்டிற்குப் பயன்படுத்தியதாகக் கூறவில்லை. "அரக்கால் செய்த பாவை வெப்பத்தால் உருகும். அதுபோலத் தலைவி உருகினாள்"[60] என்று

உவமையாகப் பயின்று வந்துள்ளது. எனவே, அரக்கால் பாவை புனைந்துகொள்ளப்பட்டதை அறியமுடிகிறது.

## 5. பொன்பாவை

பொன்னால் செய்யப்பெற்ற பாவையை வழக்கில் பயன்படுத்தியமைக்கான செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. அகநானூற்றுப் பாடலில் "பொன்னாற் செய்த பாவை போன்ற கட்டழகினையும்"[61] என்று பெண்ணின் அழகிற்குப் பாவை உவமையாகிறது. சங்ககாலத்தில் பொன்னால் செய்யப்பட்ட பாவை சிறந்திருந்ததற்கான குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஒன்று "சேரலாதன் முசிறியை வென்று அங்கிருந்த பொன்செய் பாவையை வைரமோடு கவர்ந்திருந்தான்"[62] என்று அகநானூறு குறிக்கிறது. மற்றொன்று "நன்னன்தன் மரத்திலே இருந்த மாங்காய் ஆற்றில் விழுந்து செல்ல அதை அறியாது ஒரு பெண் எடுத்து உண்ண அவளுக்குக் கொலைத் தண்டனை விதித்தான். அந்தப்பெண்ணின் தந்தை அப்பெண்ணின் எடைக்கு ஏற்ற பொன்செய் பாவையைக் கொடுக்கிறேன் என்றபோதும் அதனைக் கேளாது அப்பெண்ணைக் கொலை புரிந்தான்"[63] என்று குறுந்தொகை கூறுகின்றது. இப்பாவையை அடியொற்றி வழக்கில் வந்தது பாவை-விளக்கு. இப்பாவை தன் கையில் விளக்கை ஏந்தியவாறு இருக்கும். இது யவனர் வழக்கில் கொண்டுவந்தது என்பர். இப்பாவை வைத்து விளையாடிய குறிப்பில்லை.

இவ்வகையில் பண்டைக்கால மகளிர் தங்களுக்குத் தேவையான பாவைகளைத் தாங்களே செய்துகொண்டமையும், தங்களுக்குக் கிடைக்கக்கூடிய பொருள்களையே பாவை புனைவதற்குப் பயன்படுத்தினர் என்பதும் விளங்கும். தவிர, இவ்வகைத் தொழில் வல்லுநர்கள் கைவினைத் தொழிலாகப் பலவகைப் பாவைகளை உருவாக்கிக் கொடுத்திருக்கின்றனர் என உணரலாம்.

## 3.4. சாயப்பாக்கு தயாரித்தல்

கருங்காலி மரத்தின் காயினைச் சீவிக் காய்ச்சி அதனைப் பசிய பாக்குடன் கலந்து சாயப்பாக்கு தயாரிக்கும் தொழில் நடைபெற்றுள்ளது. இதனை,

"தகைசெய் தீஞ்சோற் றின்னீர்ப் பசுங்காய்" (மது : 400)

என்ற மதுரைக்காஞ்சி சுட்டுகின்றது. இதிலிருந்து காய்ச்சும் தொழில் திறன் அக்காலத்தில் இருந்தமை உணரப்பெறுகிறது.

## 3.5 கயிறு திரித்தல்

சங்க இலக்கியப் பாடல்களில் கயிறு அல்லது தாம்பு பயன்படுத்தப் பெற்றதற்கான சான்றுகள் கிடைக்கின்றன. கன்றுகளைத் தாம்பினால் கட்டி வைத்துள்ளனர். யானைகளையும் கயிற்றால் பிணைத்து வைத்துள்ளனர். ஆயர் குலத்தவர் தயிரைக் கடைவதற்குக் கயிற்றினைப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றை,

"சிறுதாம்பு தொடுத்து பசலைக் கன்றின்" (முல்லை : 12)

"கயிறுபிணிக் கொண்ட பெருங்கையானை" (புறம் 3:10)

என்ற பாடல்களின் அடிகள் சுட்டும். இவ்வாறு கன்றுகளைக் கட்டி வைத்தது முதற்கொண்டு பல்வேறு நிலைகளில் மக்கள் வாழ்க்கையில் கயிறு பயன்படுத்தப்பெற்றுள்ளதால் இத்தொழில் செய்வோர் பரவலாக இருந்திருக்கவேண்டும். இத்தொழிலில் தொழில் திறன்தான் முதலிடம் பெறும். விரிந்த தொழில் சார்ந்த புழங்குபொருட்கள் தேவையில்லை.

## 3.6 களவுத் தொழிலில் ......

நள்ளிரவில் களவு செய்வதற்குச் செல்லும் கள்வர் தம் தொழிலுக்குப் பயன்படும் நூலாலாகிய ஏணியை உடன்கொண்டு சென்றுள்ளனர். இவர்கள் நூலேணியை இடையில் சுற்றியிருந்ததை,

"மென்னூல் ஏணிப் பன்மாண் சுற்றினர்" (மது : 640)

என்ற மதுரைக்காஞ்சியடிகள் சுட்டும். இதற்கு உரைகூறும் இடத்து, "மதிற்றலையிலே உள்ளே விழ வெறிந்தால் கைபோல மதிலைப் பிடித்துக்கொள்ளும்படி இரும்பாற் சமைத்ததனைத் தலையிலே உடைய நூல் கயிற்றை உள்ளே விழ ஏறிந்து அதனைப் புறம்பே நின்று பிடித்துக்கொண்டு அம்மதிலை ஏறுவாராகலின் ஏணி என்றார்."[64] என்பர் நச்சினார்க்கினியர். இதனால் நூலைக்கொண்டு உறுதியான, நீளமான ஏணியை அமைத்துக்கொண்டுள்ளமை விளங்கும்.

## 4. பிற தொழில்கள்

கள் சமைத்தல், சலவைத் தொழில் ஆகியன இவ்வகைத் தலைப்பின் கீழ் இடம்பெறுகின்றன.

## 4.1 கள் சமைத்தல்

"மாங்கனி, பலாச்சுளை, தேன் இம்மூன்றையும் சேர்த்து நீண்ட கணுவிடையுள்ள மூங்கில் குழாயில் நெடிதிருக்க வைத்து முதிர்தலின் உண்டான கள்ளினைத் தெய்வம் உறையும் உயர்ந்த மலைக்குப் படைத்துப் பின் தழையுடையணிந்த மகளிர் உண்டபின் புனங்காக்கும் குறவர் உண்பர்."[65] இதிலிருந்து மூங்கில் குழாயைப் பயன்படுத்திக் கள் சமைக்கும் தொழில் நிகழ்வுற்றதை அறியலாம்.

மா, பலா, வாழை போன்ற வீட்டில் விளையும் கனிகளுடன் தேனையும் சேர்த்து முதிரவைத்து மூங்கில் குழாய்களில் ஊற்றித் தோப்பி என்னும் கள்ளைச் சமைத்துள்ளனர். இதனை,

"கோடைக்கு ஊழ்த்த கமழ்நறுந் தீங்கனிப்

பயிற்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ

இளறாலொடு கலந்து வண்டுமூசு அரியல்" (அகம் : 348: 3-5)

என்ற அடிகள் சுட்டும். மேலும் மூங்கிற் குழாயிடத்துப் பெய்து முதிர்வித்த இனிய கள் என்ற பொருள் சங்கப்பாடல்கள் பலவற்றுள் காணப்படுகிறது. இவற்றிலிருந்து கள் சமைத்தல் தொழிலுக்குப் பயன்பட்டது மூங்கில் குழாயே என்பது திண்ணம்.

## 4.2 சலவைத் தொழில்

சலவைத் தொழிலில் ஈடுபட்டோர் காழியர் (அகம் : 89) எனப்பட்டனர். இவர்கள் ஆடையை ஒருவகை மணலைப் பயன்படுத்தி வெளுத்துள்ளார்கள். அம்மண் உவர் மண் எனப்பட்டது. இதனை,

.... ....... ...... ...... காழியர்

கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிய

களரி பரந்த கல்நெடு மருங்கின் (அகம் : 89: 7-9)

என்ற அடிகள் விளக்கும்."[66] வெளுக்கப்பெற்ற துணிகளை "சோற்றுக் கஞ்சியிட்டு உலர்த்தியுள்ளனர். இவ்வகையில் சலவைத் தொழிலுக்கு உவர்மண்ணும், சோற்றுக்கஞ்சியும் பயன்பெற்றுள்ளன.

## II. போர்த்தொழில்

பண்டைத் தமிழர் தம் பகைவர் மீது போர் தொடுக்கவும், தம்மீது போர் தொடுக்கும் போது தம்மைத் தற்காத்துக்கொள்ளவும் பலவிதமான போர்க்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### படைக்கல வகைகள்

"பண்டைக்காலப் போர்க்கருவிகள் எய்படை, எறிபடை, குத்துப்படை, வெட்டுப்படை, அடுபடை, தடுபடை என அறுவகைய. அம்பு எய்படை, விட்டேறு எறிபடை, வேல், ஈட்டி, குந்தம் முதலியன குத்துப்படை. வாள், மழு, வெட்டுப்படை, தண்டு முதலியன அடுபடை. கவசம், கேடயம் முதலியன தடுபடை. இவ்வறுவகைக் கருவிகளைச் செயலடிப்படையில் எய்படை முதல் அடுபடை வரை ஐந்தும் தாக்கும் படை (Offensive weapons) என்றும், ஆறாவதாக வரும் தடுபடை காப்புப்படை (Defensive weapons) என்றும்"[67] வகைப்படுத்தி விளக்குவர்.

கருவிகள் தாக்கும் இலக்கைக் கொண்டு எண்ணும்போது எய்படை, எறிபடை, தொலை இலக்குக் கருவிகள் (Long Range Weapons) என்றும், குத்துப்படை இடை அண்மை இலக்குக் கருவிகள் (Medium and Short Range Weapons) என்றும், வெட்டுப்படை, தடுபடை என்பன அணுக்கப்போர்க் கருவிகள் (Close Quarter, Buttle Weapons) என்றும் மூவகைப்படுத்திப் பார்க்கலாம். தடுபடை என்கிற தற்காப்புக் கருவிகளையும் இணைத்து பின்வருமாறு பகுத்துப்பார்க்கலாம்.

1 தொலை இலக்குக் கருவிகள்
2 இடை அண்மை இலக்குக் கருவிகள்
3 அணுக்கப்போர் கருவிகள்
4 காப்புக்கருவிகள்
5 மற்றும் பிற

## 1 தொலை இலக்குக் கருவிகள்

வில் அம்பு, எறிகோல் ஆகியவை குறிப்பிடத்தகுந்த தொலை இலக்குக் கருவிகளாகும். தொலை இலக்குக் கருவிகள் பின்வருமாறு அமையும்.

1. வில்லம்பு
2. எறிகோல்
3. கல்

இவைகள் குறித்த செய்திகள் பண்டை இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. இவற்றைப் பற்றிப் பின்வரும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

## 1. வில் - அம்பு

"மூங்கிற்கோலின் ஒரு தலையில் இரும்பால் இலை முதலிய வடிவங்களிற் செய்யப்பட்ட உறுப்பினைச் செருகியதே அம்பாகும்"[68]. என்று தற்காலத்தமிழ்ப் பெயரகராதி குறிப்பிடும். இவ்வம்பினை எய்துவதற்குப் பயன்படும் சாதனம் வில்லாகும். இது காம்பின் இருமுனைகளையும் வளைத்துக் கயிற்றால் கட்டியதாக அமைந்திருக்கும்.

வில் வகைகள், அம்பு வகைகள் ஆகியவற்றைப் பின்வரும் பகுதியில் வகைப்படுத்திக் காணலாம்.

### வில் வகைகள்

"சிலை தானு, வேணு, கார்முகம், சாபம்
முனியே, சார்ங்கம், சாரசளம், பினாகம்
கோதண்டம், தவர், கொடுமரம், துரோணம்
வார்வில் லெண்ப மதிநூற் புலவர்"[69]

என்று வில்லின் பெயர்களைச் சேந்தன் திவாகரமும், பதடி, முனி, சிந்துவாரம், சராசனம், தவர், வேணு, சாரங்கமுமாகும்''[70] என்று பிங்கல நிகண்டும் தொகுத்துரைக்கின்றன. இவற்றுள் சங்க இலக்கியங்களில் கீழ்க்கண்ட சொற்களே பயின்று வந்துள்ளன.

1. சிலை
2. சாபம்
3. கொடுமரம்
4. வல்வில்

## 1. சிலை

சிலை என்பதற்கு "முழக்கம்"[71] என்றும் பொருள். சிலைத்தல் என்பது வளைத்தல் என்பதைக் குறிக்கும். ஆகவே வளைத்து நாணேற்றி அம்பு எய்யும்போது முழங்கும் வில் சிலை ஆகும்.

இச்சிலை என்ற சொல்லாட்சி எட்டுத்தொகை நூல்களில் அகநானூறு, நற்றிணை ஆகிய அக நூல்களிலும், புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய புறநூல்களிலும் இடம்பெற்றுள்ளது. இதனை, "வீங்கு சிலை, நோன்சிலை"[72] என்று அகநானூறு சுட்டும். இதில் 'நோன்சிலை' என்ற சொல்லாட்சியே மிகுதியான இடங்களில் பயின்று வந்துள்ளது. சிலையைக் "கடுஞ்சிலை"[73] என்று பதிற்றுப்பத்து சுட்டும். இதிலிருந்து நொய்மை, கடுமை என்ற பண்புகளை உடையது சிலை என்பது விளங்கும். புறத்தில் இருபாடல்களில்[74] சிலை என்ற சொல் பயின்று வந்துள்ளது. இவற்றுள் ஒன்று வேட்டுவன் கைவில்லைக் குறிப்பது. மற்றொன்று கரந்தையாருடன் போர் புரிய வெட்சியார் பயன்படுத்திய வில்லைக்குறிக்கின்றது.

இவ்வகையில் 'சிலை' என்ற சொல் பண்பு அடிப்படையிலும், செயல் அடிப்படையிலும் அடைமொழியுடன் வழங்கப்பெற்றமை விளங்கும்.

## 2. சாபம்

சாபம் என்பது வில்லைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகும். இச்சாபம் பண்டை இலக்கியப் பாடல்களில் பயின்று வந்துள்ளது. சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் அம்பறாத்தூணியைப் புறத்தில் கொண்டு தேர்மிசை இருந்து சாபத்தின் வலிய நாண் வடுக்கொள வழங்கினான் என்பர் கபிலர் (புறம் : 14, 8-9). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன், 'கையில் சாபம் பற்றி நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றான் என்பர். இடைக்குன்றூர்க்கிழார் (புறம்: 77, 4-5). இவற்றால் தேரிலிருந்து போர்புரியப் பயன்படுத்தப்பெற்ற வில் 'சாபம்' என வழங்கியமையை உணரலாம். மேலும்,

> "மான்விசைச் சாப மார்புற வாங்கி
> ஞாண்பொர விளங்கி வலிகெழு தடக்கை" (பதி: 90, 32-3)

எனும் தொடரால் சாபம் மாட்சிமைப்பட்ட போர்த்தொழிலுக்குரியது என்பதும் அது மார்புற வாங்கிப் பின் எய்யப்படுவது என்பதும் தேர்மீதிருந்து போர் புரிவதற்குப் பயனாகியது என்பதும் வெளிப்படும்.

## 3. கொடுமரம்

பண்டை இலக்கியங்களில் பல இடங்களில் "கொடுமரம்"[75] என்னும் சொல் வில்லைக் குறித்து நிற்கிறது. 'கொடுமரம்' என்பதில் உள்ள 'கொடு' என்பதற்கு 'வளைந்த' என்று பொருள். ஆகவே, வளைந்த கொடுமைமிகு வில் கொடுமரம் ஆகும்.

"...................... வார்கோல்

கொடுமர மறவர் ...................... (புறம் : 43, 10-11)

எனும் தொடர் மறப்படை வீரர்கள் நீண்ட அம்பும் கொடுமரமும் கைக்கொண்டிருந்ததை வெளிப்படுத்துகின்றது. "கொடுவில் எயினர்"[76] "கொடுவில் கூளியர்"[77] "கொடுவில் ஆடவர்"[78] என்னும் தொடர்களால் எயினர், கூளியர், மறவர் போன்ற ஆடவர்கள் போர்ச்செயலில் ஈடுபட்டனர் என்பதையும் இணைத்துப் பார்க்கலாம்.

## 4. வல்வில்

"பொன்அணிவல்வில், உருவவல்வில், வாள்போழ் வல்வில், விசைப்புறு வல்வில், கைப்புனைவல் வில், அம்சிலை வல்வில்"[79] என்று வல்வில் பல அடைகளுடன் குறிக்கப்பெறுகின்றது. இவற்றிலிருந்து வல்வில் இரும்பாலானது, அழகு மிக்கது, அம்புகளை விரைந்து செலுத்தும் இயல்பினது என்பது விளங்கும். இவ்வகையில் வல்வில் போருக்காகப் பயன்பெற்றுள்ளது.

## அம்பு வகைகள்

"பகழி, வாளி, வண்டு, பாணம்
நிகழ்சரம், பத்திரி, சீலிமுகம், பல்லம்
புங்கம், கணை, குதை, கங்கபத்திரம்
அத்திரம், தோணி, கோல், விசிகம், அம்பே"[80]

எனச் சேந்தன் திவாகரமும்,

"பகழி வாளி தோணி வாணம்
கதிரம் பல்லம் கணைகோல் சரமொடு
வண்டு பத்திரம் சீலிமுகம், வசிகம்
அம்பின் பெயர் உருவாகலும் உரித்தே"[81]

எனப் பிங்கல நிகண்டும் அம்பின் பெயர்களைத் தொகுத்துரைக்கின்றன. இவற்றுள் பண்டை இலக்கியங்களில் கீழ்க்கண்ட சொற்களே பயின்றுவந்துள்ளன. அவையாவன,

1. பகழி
2. வாளி
3. கணை
4. கோல்
5. அம்பு

## 1. பகழி

பிளந்து அழிக்கும் அம்பு பகழி எனப்பெற்றது. இப்பகழி கூரிய நுனியை உடையதாகவும், நெடிய கோலும் உடு எனும் உறுப்பும் உடையதாக அமைந்திருந்ததைக் குறிஞ்சிப்பாட்டு (169-170) சுட்டுகின்றது. இப்பகழி உலைக்களத்தில் காய்ச்சி வடித்துக்கொள்ளப்பெற்றதால் ‘வடிஉறுபகழி’ என்றும், யானைகளை வீழ்த்தக்கூடியது என்பதால் ‘விழுத்தொடைப்பகழி’ என்றும் அழைக்கப்பெற்றுள்ளது. மேலும் போரில் பகழி பாய்ந்ததால் புல் உண்ணாமல் வருந்தும் குதிரையை எண்ணி அரசன் வருந்துகிறான் என முல்லைப்பாட்டுக் குறிப்பிடுகின்றது. இவற்றிலிருந்து ‘பகழி’ என்னும் அம்பு யானை, குதிரை போன்ற விலங்குகளைப் பிளந்து அழிக்கும் திண்மை வாய்ந்ததாக இருந்தமைத் தெளிவாகிறது.

## 2. வாளி

வாளின் இயல்புகொண்ட அம்பு ‘வாளி’ எனப்பட்டது. இவ்வாளி செம்மையுற்ற திரண்ட கோல்களால் செய்யப்பெற்றமையால் ‘செங்கோல் வாளி’ என்றும், கூர்மையும், நீட்சியும் கொண்டமையால் ‘வைவார் வாளி’ என்றும்

குறிக்கப்பெற்றது. இவ்வம்பு எய்யும்தொறும் ஒலித்துச் செல்லும் கொடிய வாயினையுடையது என்பதை,

"விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி" (அகம் 175: 3)

என்று அகநானூறு சுட்டும். இஃது அரத்தினால் அராவி செய்யப்பெற்றதை 'அரம்போழ் நுதிவாளி' என்று குறிக்கப்பெற்றது. இவற்றால் வாளி செம்மையும், கூர்மையும், நீளமும், விரைவும் கொண்டது என்பது நன்கு விளங்கும்.

## 3. கணை

கணை எனில் 'திரட்சி' என்று பொருள். 'கணைக்கால்' எனில் திரண்டகால் என்று உரையாசிரியர்[82] குறிப்பிடுகின்றார். ஆகவே, திரண்ட பிடியுடைய அம்பு கணையாகும். இக்கணை குறித்த செய்திகள் சங்கப் பாடல்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. "பொருகணை, எறிகணை, கடுங்கணை, தெரிகணை, இரும்புதலையாத்த திருந்து கணை"[83] எனும் சொற்களில் முன்னடையுடன் கணை குறிக்கப்பெறுகிறது. இவற்றிலிருந்து கணையானது விரைந்து சென்று தாக்கக்கூடியது என்பதும், கணைகளின் தலைகள் இரும்பால் செய்யப்பெற்றது என்பதும் தெளிவாகிறது.

இக்கணை பொருகளிற்றின் மேலிருக்கும் மறலிஅன்ன மன்னன் மார்பிலுள்ள புலிநிறக்கவசம் சிதையுமாறு எய்வதற்கு எய்கணை பயன்பெற்றதை,

"எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்" (புறம் : 13.3)

என்பது சுட்டும். மேலும் நிரை கவரவும், போரில் யானைகளைத் தொலைக்கவும், வீரர்களை வீழ்த்தவும் எய்கணை பயன்பெற்றதை இலக்கியங்கள் விளக்குகின்றன.

## 4. கோல்

காம்பு நீண்ட அம்பிணைக் 'கோல்' என்று குறித்துள்ளனர். இதனை "வார்கோல் கொடுமரம்"[84] என்று புறநானூறு சுட்டும். இதனால் கோல் என்பது கொடுமரத்தைக் குறித்திருக்கவேண்டும். அம்பை எய்யும் போது வில்லானது வளைந்து கொடுக்கக்கூடிய மரம் கொடுமரம் ஆகும். அம்மரம் பெரும்பாலும் மூங்கிலில் அமைக்கப்பெறுவதால் மூங்கிலைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

## 5. அம்பு

அம்பு எய்தவுடன் இலக்கு நோக்கிச் சென்று அப்பிக் கொள்வதால் இப்பெயர் பெற்றுள்ளது. "அழகிய பூ வடிவினையுடையதாலும்."[85] இப்பெயர் பெற்றிருக்கலாம். "கூர்நல்லம்பு, காலமாரியின் அம்பு"[86] என்று இலக்கியங்களில் பயின்று வந்துள்ள தொடர்களால் அம்பானது கூர்மையானது. தொடர்ந்து எய்யப்படும்போது பருவமழை போலப் பொழியக்கூடியது என்பதும் விளங்கும்.

இவ்வம்பினை "நாட்டின் எல்லை காக்கவும், அரண் அழிக்கவும், யானைகளை எய்து அழிக்கவும், அரண்காக்கவும்"[87] பண்டு பயன்படுத்தியதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன.

## 2. இடை அண்மை இலக்குக் கருவிகள்

தொலைவு, அண்மை இலக்குகளுக்கு இடைப்பட்ட இலக்குகளைத் தாக்கப் பயன்படும் கருவிகள் இடை அண்மை இலக்கக் கருவிகளாகும். இதனுள் இடம்பெறுவது வேலாகும்.

## வேல்

"சத்தி, எ்.கம், உடம்பிடி, குந்தம், விட்டேறு, அரணம் ஞாங்கர், அயில் என்பன வேலின் வேறு பெயர்கள் என்பதை நிகண்டுகள்[88] குறிக்கும். இவற்றுள் எ்.கம், அயில், உடம்பிடி என்பன பண்டை இலக்கியங்களில் பயன்று வரும் சொற்களாகும். தொல்காப்பியத்தில்,

"கணையும் வேலுந் துணையுற மொய்த்தலின்" (தொல்.நூ. 1017)

"பெறும்பகை தாங்கும் வேலினானும்" (தொல். நூ. 1022:6)

"நீத்த கணவற் றீர்த்த வேலிற்" (தொல். நூ.1025 : 12)

என்ற நூற்பா வரிகளில் 'வேல்' இடம்பெற்றிருக்கக் காணலாம். அவ்வகையில் தொல்காப்பியர் காலத்தில் வேல் வழக்கில் பயன்நிலையில் இருந்திருப்பதை உணர முடிகிறது. பண்டைக் காலத்தில் எ்.கு, எ்.கம் என்னும் சொற்களால் 'வேல்' குறிக்கப்பெற்றதை,

"ஒளிறிலைய வெ்.கேந்தி" (புறம். 26 : 5)

"எ்.குடை வலத்தர்" (புறம். 274 : 5)

"வடிமா ணெ்.கங் கடிமுகத் தேந்தி" (புறம். 275 : 5)

"சீறூர் மன்னன் சிறியிலை யெ்.கம்" (புறம். 308 : 4)

"நீளிலை யெ்.க மறுத்த வுடம்பொடு" (புறம். 341 : 14)

"நிரைகா ழெ்.க நீரின் மூழ்கப்" (புறம். 354 : 2)

என்னும் அடிகளின்வழி அறியலாம். இவைகளிலிருந்து வேலானது ஒளிரக் கூடியதாக வடித்துக் கொள்ளப்பெற்றதையும் அதன் இலைப்பகுதி சிறியதாகவும், நீண்டதாகவும், இருவேறு வடிவினையுடையதாகவும் இருந்தமை தெளிவுறும்.

அயில் என்பதற்கு அழகு, கூர்மை, வேல் என்னும் பொருள்களைக் குறிப்பர்.[89] சங்க இலக்கியங்களில் 'அயில்' என்ற சொல்லும் வேலைக் குறிப்பதற்குப் பயின்று வந்துள்ளது. அயில், உளி[90] என்றும், அயில் நுனை மருப்பு[91] என்றும் வருமிடங்களில் அயில் எனும் சொல் கூர்மை எனும் பொருளுணர்த்துகிறது.

மதுரைக் காஞ்சியில் 'நெடுஞ்செழியன் காவல் காட்டினையும் நெடிய மதிலையும் அயில் கொண்டு எறியும் அரண்களையும் உடைய பகைவரது நாட்டிடத்தே சென்று அவர்களை வென்ற சிறப்புடையவன்'[92] என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. மேலும் 'அயில்திணி நெடுங்கதவு'[93] என்பதால் கோட்டைக் கதவுகளில் அயில் பொருத்தப்பட்டிருந்தமை வெளிப்படும்.

'உடம்பிடித் தடக்கை' என்று பெரும்பாணாற்றுப் படையில் மட்டுமே 'உடம்பிடி' என்பது வேலைக் குறிக்க வந்துள்ளது.

## வேலின் அமைப்பு

'காழ்மாண்டு எ∴கம்', 'நோன்காழ் எ∴கம்', 'நிறைகாழ் எ∴கம்', 'கருங்கடை எ∴கம்', 'திண்பிணி எ∴கம்'[94] என்னும் தொடர்களைக் கொண்டு நோக்கும்பொழுது வயிரம் ஏறிய வலிமை பொருந்திய காம்புப்பிடியுடையது வேல் என்பது விளங்கும். ஆனால் இக்காம்பு உள்துளையுடையதாகவும் இரும்பால் இயன்றதாகவும் இருந்திருக்கவேண்டும்.

வேல் கையிலெடுத்து எறியப்படும் கருவியாதலால், உறுதியான இரும்பினால் காம்பு அமையுமாயின், அதன்பளு மிகுதியாகி அது செல்லும் தொலைவும் வேகமும் குறையும். எனவே, பளுவைக் குறைக்க உள்துளையுடைய இரும்புக் குழலால் ஆகியதாகக் காம்பு அமைந்திருக்கலாம் எனக்கருத இடமுண்டு. இதனால் வேகமாகவும், தொலைவாகவும் வேலைச் செலுத்த இயலும் என்ற நுட்பத்தைப் பண்டைத் தமிழர் அறிந்திருந்தமை புலனாகிறது.

## போரில் வேல்

பகைவர்மீது எறிவதற்கு வேலைப் பயன்படுத்தியமையை,

"மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக" (புறம் : 285 : 11)

"வேந்துடன் றெறிந்து வேலே யன்ன" (புறம் : 308 : 6)

"எறிந்திலை முறிந்த கதுவாய் வேலின்" (புறம் : 347 : 4)

என்னும் அடிகள் சுட்டும். மேலும், "தன்மேல் கொலை குறித்து வந்த களிற்றின் நெற்றியிலே வேலைச் செலுத்திப் போக்குதல்"[95] என்றும், "ஊக்கம் கிளர்ந்த தன் வேலாற் கொன்ற களிறுகளை ஒவ்வொன்றாக எண்ணி"[96] என்றும் வரும் செய்திகளால் களிற்றினைத் தாக்குவதற்கு வேலைப்பயன்படுத்தியமை தெளிவுறும். யானையானது வெகு தொலைவில் நிற்கும்போது அதன்மேல் எறிவதற்கு வேலைப் பயன்படுத்தியுள்ளனர். மேலும்,

"வெள்வே லாவ மாயி னொள்வாள்
கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியோ வேலொ னூரோ" (புறம் : 325 : 5-7)

இக்கூற்றின் வாயிலாக வேல் என்னும் ஆயுதம் பண்டைக் காலங்களில் பாய்ச்சுகிற (அ) எறிகிற ஆயுதமாகவே பயன்படுத்தப்பெற்று வந்திருக்கின்ற உண்மை தெளிவுறும். மேலும் போர்க்களத்தில் பகைவர் மார்பில் நேராகக் குத்துமாறு வேலை எறிந்துள்ளனர். இதனைப் புறநானூற்றுப் பாடல்கள்[97] சுட்டுகின்றன. அவ்வாறு மார்பில் தைத்த வேலைப் பிடுங்கித் திரும்ப எறிந்தமை புறப்பாடலில் (308 : 8) குறிக்கப்பெறுகிறது. மேலும், 'எஃகுளங் கழிய விருநில மருங்கின்' (புறம் : 282 : 1) என்பதால் வேலானது நெஞ்சில் பாய்ந்து உருவிச் சென்றமை விளங்கும். இவற்றிலிருந்து பகைவரை நெஞ்சில் எறிந்து தாக்கும் கருவியாக வேல் பயன்படுத்தப் பெற்றமை புலனாகிறது.

## 3. அணுக்கப்போர் கருவிகள்

படைவீரர்கள் அருகருகே இருந்து போரிடப் பயன்படுத்தும் கருவிகள் அணுக்கப் போர்க்கருவிகள் ஆகும். அவற்றுள் குறிப்பிடத்தகுந்தன பின்வரும் கருவிகளாகும்.

1. பல்வகை வாள்கள்
2. மழு
3. நவியம்

## 1. பல்வகை வாள்கள்

பண்டைக்காலத்தில் அணுக்கப் போரில் பயன்படுத்தப்பெற்ற ஆற்றல் மிகு படைக்கருவிகளுள் வாள் சிறப்பிடம் பெறும். தொல்காப்பியப்புறத்திணையிலில்,

"குடையும் வாளும் நாள்கோள் அன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமும்" (தொல். 1014 : 1-2)

என்று குறிப்பிடும். இதில் வாளோடு படை எழுக என்று குறிப்பிடுவதால் போர்த்தொழிலுக்கு வாளைப் பயன்படுத்தியமை வெளிப்படும். மேலும்,

"களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும்................" (தொல். 1018:19-11)

என்று யானையோடு போரிடச் சென்று பகைவனை வீழ்த்திய வேந்தனைத் தம்படை வீரர் புகழ்ந்து பாடி ஆடிய கூத்தைத் தொல்காப்பியம் மிக அழகாக வருணிக்கிறது.

## வாளின் தோற்றம்

சங்க இலக்கியங்களில் எ்.கு, எ்.கம் ஆகிய சொற்கள் வாளைக்குறிக்கப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

"கதுவாய் போகிய துதிவா யெ்.கமொடு" (புறம் : 353 : 15)

என்ற பாடலில் வாள் எ்.கம் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனால் வாள் இரும்பால் செய்து கொள்ளப் பெற்றமை வெளிப்படும். வாளானது மிகவும் கூர்மை வாய்ந்து காணப்பெற்றது என்பதை,

"கதுவாய் போகிய துதிவா யெ்.கமொடு" (புறம் : 353 : 5)
"கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப" (புறம் : 371 : 10)

என்ற புறப்பாடல்களின் அடிகள் விளக்கும்.

## ஒள்ளிய வாள்

'ஒள்ளிய வாள்' என்ற குறிப்புப் புறநானூற்றில் மிகுதியாக இடம்பெற்றுள்ளது. இதனை,

"... .......... வயங்குவினை யொள்வாட் " (புறம் : 250 : 5)

"புடையிலங் கொள்வாட் ................" (புறம் : 259 : 7)

"இழிதரு குருதியொடு ஏந்திய ஒள்வாள்" (புறம் : 373 : 5)

என்னும் பாடல்வரிகள் சுட்டும். இவ்வொள்ளிய வாளைப் பயன்படுத்தியமைக்குக் காரணம் தன் கையின் வலிமையைவிட வாளின் வலிமையைக் கூட்டினால் போர்ச் செயலில் விரைந்து செயல்பட முடியாது என்பதற்கே ஆகும் என்பது திண்ணம்.

## உறைவாள்

வாளினைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்வதற்கு உறைகளைப் பயன்படுத்தியுள்ளனர். உறையிலிட்டு வைத்திருந்தமையை,

"போர்க்குறைஇப் புகன்று கழித்த வாள்" (புறம் : 97 : 1)

"................................... னொள்வாள்

கறையடி யானைக்கல்ல" (புறம் : 323 : 5-6)

என்ற அடிகள் சுட்டும். இவ்வுறை என்பது முதலில் தனிப்பட்ட தோலால் செய்து கொள்ளப்பட்டதாக இருந்திருக்கவேண்டும். பிற்காலத்தில் உடையில் அணிந்து கொள்ளும் ஒருவகை வாளின் பெயராகி உடைவாளாக மாறியிருக்கவேண்டும். உறை-உடையாக ஆகியிருக்கலாம்.

## வாட்போர்

வாட்போரில் ஈடுபடும் வீரர்கள் வாளை ஒரே கையில் வைத்துக்கொள்ளாமல் கை மாற்றிப் போர்செய்திருக்கலாம். ஆனால் வலக்கையில் தாங்கிப் போர் செய்ததற்கான சான்றுகள் புறநானூற்றில் காணப்படுகின்றன. வாளைக்

கையில் ஏந்திப்போர் செய்தமையை ஆறு பாடல்கள் [98] சுட்டுகின்றன. இவ்வகையில் ஏந்திய என்பதால் போர்க்களத்தில் பகைவரை வெல்வதற்குத் தயாராக நின்றதையும், வாள் அணுக்கப்போர் கருவியாகப் பயன்படுத்தப் பெற்றதையும் அறிய முடிகின்றது.

## 2. மழு

மழுப்படை என்ற ஆயுதம் கோடரி வடிவில் காணப்பெறும். இதற்கு 'கணிச்சி' என்ற பெயரும் உண்டு. புறநானூற்றில் கணிச்சி என்னும் கூரிய ஆயுதத்தையுடைய கூற்றுவன், மரணக்காலத்தில் உயிர்களைப் பறிப்பதாகக் கூறப்பட்டுள்ளது.[99] இதிலிருந்து கணிச்சி என்பது மாட்டி இழுக்கும் அங்குசம் போன்ற ஓர் ஆயுதமாக இருக்கலாம் என்று ஊகிக்க முடிகின்றது. இக்கருவியைப் போருக்குப் பயன்படுத்தியதற்கான சான்றுகள் இல்லை.

## 3. நவியம்

நவியம் எனில் புதுமை, கோடாரி, குந்தாலி எனும் பொருளுரைக்கிறது.[100] செந்தமிழகராதி. இந்நவியம் 'வடிநவில் நவியம் என்றும், நெடுங்கை நவியம் என்னும்[101] குறிக்கப்பெற்றுள்ளது, என்றாலும் இதனைப் போருக்குப் பயன்படுத்தியதற்கான சான்றுகள் கிடைத்தில.

## 4. காப்புக்கருவிகள்

காப்புக்கருவி வகைகளை,

1. தற்காப்புக் கருவிகள்
2. அரண் காப்புக் கருவிகள் என இருவகைப்படுத்தலாம்.

தற்காப்புக் கருவிகளில் கவசம் (Armoar), கேடயம் (Shield) ஆகியவை குறிப்பிடத்தக்கவைகளாகும். கவசம் உடலில் அணியப்படுவது. கேடயம் கையில் ஏந்தப்படுவது. வாள், வேல், அம்பு முதலிய போர்க்கருவிகளின் தாக்குதலிலிருந்து உடலைக் காத்துக்கொள்ள இவைகள் பயன்படுத்தப்பெற்றன.

## 1. தற்காப்புக் கருவிகள்

"அரணம், சாலிகை, ஆசு, பரணம்
கவசம், கண்டம், மெய்யுறை, தம்பம்
கசையே, சுரிகை மெய்புகு கருவி
பாரமும், பரமும் அப்பெயர் பால"[102]

என்னும் சேந்தன் திவாகர நூற்பா கவசத்தின் பெயர்களைத் தொகுத்துரைக்கின்றது. இவற்றுள் அரணம், கவசம், என்னும் இரண்டு சொற்கள் மட்டும் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

### 1. அரணம்

'அரணம்' என்பதற்குக் காப்பாக விளங்குவது என்று பொருள்.[103] மேலும், அரணம் என்ற சொல் அடிபுதை அரணம் என்று காலணியையும், மெய்புதை அரணம் உடல் முழுவதும் மறைக்கும் கவசத்தையும் குறிக்கின்றது. இதில் மெய்புதை அரணம் போர்த்தொழிலுக்குப் பயன்பெற்றதைப் பதிற்றுப்பத்துச் சுட்டுகின்றது. இதனை,

"மெய்புதை யரணமெண் ணாது" (பதி. 52:6)

என்ற அடிசுட்டும். மேலும், இவ்வடிக்கு விளக்கம் கூறுமிடத்து, 'மெய்புதையரணம் இரும்பினாற் செய்யப்படும் கவசம்"[104] என்பர். இதனால் மெய்புதையரணம் இரும்பைக் கொண்டு செய்துகொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும்.

## 2. கவசம்

போர்க்காலங்களில் பகைவர்களின் தாக்குதல் தங்களது உடம்பில் தாக்காதவாறு உடம்பை இரும்பு உறைகளால் மறைத்துக்கொள்ளப் பயன்படுத்தப்படும் கருவிக்குக் 'கவசம்' என்று பெயர். கவசம் என்பதற்கு 'மெய்புகுகருவி'[105] என்று பொருள் குறித்துள்ளார் உ.வே.சா. களம் நோக்கிக் களிற்றின்மேல் சென்ற காவலர்கள் எழில் மார்பின் மேல் புலிநிறக்கவசம் பூண்டிருந்தனர். இதனை,

"புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய" (புறம் : 13 : 12)

என்னும் அடி விளக்கும். இதற்கு உரை கூறுமிடத்து 'புலியின் பொலிவினையுடைய தோலினது இணைப்பு என்று குறிப்பதால் புலித்தோலை இணைத்துக் கவசம் செய்து கொண்டமை தெளிவுறும். இக்கவசம் அம்புகளால் சிதைக்கப்பெறுதலும் உண்டு. இதனை,

"எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்" (புறம் : 13:2-4)

என்பதால் அறியலாம். இவ்வாறு போர்க்காலத்தில் கவசம் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

## 3. கேடயம்

கேடயம் என்பது "போரின்போது எதிரியின் வாள், வேல் போன்றவை தன்மீது தாக்கிடாமல் இருக்கவேண்டிக் கையில் ஏந்திய மரம் அல்லது உலோகத்தால் ஆன பாதுகாப்புத்தட்டு வடிவச் சாதனம்"[106] என்பர். இக்கேடயம் தோல் என்றும், பலகை என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. 'தோல்' என்பது கரிய நிறமுடையது.

"தொல்எயிற்கு இவர்தலும் தோலது பெருக்கமும்" (தொல்: 1013:3)

என்னும் தொல்காப்பிய உழிஞைத் திணை நூற்பாத்தொடர் பண்டைக் காலத்தில் தோற்படை மிகுந்திருந்ததை உணர்த்தும்.

"தோல் கழியொடு பிடி செறிப்பவும்" (புறம் : 98 : 11)

என்பதால் கழியொடு தோலைச் செறித்துச் செய்யப்படும் கேடயம் 'தோல்' எனப்பட்டது.

"தேர்தர வந்த சான்றோர் எல்லாம் தோல்கண் மறைப்ப", 'தோல் கொண்டு மறைக்கும் சால்பு', 'கணை பொருத துளைத் தோல்'[107] என்பவைகளால் தோல் மறைத்துக் கொள்ளப்பயன்பட்டமையையும் அத்தோலைக் கணை பாய்ந்து துளைத்தமையையும் அறியலாம்.

தோல் ஏந்திச் செல்லும்படை கார் மேகக் கூட்டம் போலத் தோன்றியதையும் புறநானூற்றுப்பாடல் சுட்டுகின்றது. தோல் என்பது யானையைக் குறிக்கும் சொல்லாதலால் (மலை : 99) யானைத் தோலால் செய்யப்பெற்ற கேடயமே தோல் எனப்பட்டது என்பது தெளிவுறும். தாக்கும் படைக்கலங்களால் எளிதில் துளைக்க முடியாத உறுதியும் கரிய நிறமும் உடைய இத்தோலே தற்காப்பிற்குச் சிறந்ததாக இருந்திருக்க வேண்டும்.

'பலகை' என்பது உலர்ந்த மரத்தால் செய்யப்பட்ட கேடயமாதல் வேண்டும். இப்பலகை அழகிய வேலைப்பாடு கொண்டதாகவும், மணிகள் பொருத்தப்பெற்று ஒளிமிக்கதாகவும் விளங்கியது. எனவே தோற்றத்தில் பலகைக்கும், தோலுக்கும் வேறுபாடு இருந்தமை தெரிகிறது. இருள் போன்ற கரிய நிறமுடையது தோல். மணிகள் பொறுத்தப்பெற்று ஒலியுடன் விளங்கியது பலகை. இவ்விருவகைக் கேடயங்களும் அக்காலப் போர் முறைகளுக்கு இன்றியமையாதனவாக இருந்தன என்று கொள்ளுதல் வேண்டும்.

தற்காலத்தில் போர்வீரன் இருகைகளாலும் துப்பாக்கி பிடித்துச் சுடவேண்டியிருப்பதால் கேடயம் ஏந்த இயலாது. கேடயம் அவனுக்குத்தேவையற்ற பளுவாகவும், முன்னேற்றத்திற்குத் தடையாகவும் இருக்கும். பகைவரின் வெடிகுண்டுகளிலிருந்து தப்புவதற்கு விரைவாகத் தரையில் பதுங்கி மறைந்து கொள்வதே தக்க பாதுகாப்பாகிறது.

## 2. அரண் காப்புக்கருவிகள்

பண்டைக் காலத்தில் அரணும், அரண்மனைகளும் வெற்றிக்கொடிகளையுடைய யானைகள் செல்வதற்கு ஏற்றவாறு உயர்ந்த வாயில்களைக் கொண்டிருந்தன. அவ்வாயிற் கதவின் வழியாகப் பகைவர்கள் வராமல் காப்பதற்காக, சில வாய்ற்காப்புக் கருவிகளைப் பயன்படுத்தினர். அவற்றுள் எழு, சீப்பு, ஐயவி என்பன குறிப்பிடத்தக்கனவாகும். இவைகள் பின்வரும் பகுதியில் விளக்கம் பெறுகின்றன.

### எழு

எழுவினைக் கணைய மரம் என்பர். இலக்கியப் பாடல்வரிகளுக்கு விளக்கம் கூறுமிடத்து, "எழு-கணைய மரம்"[108] என்றே குறிக்கப்பெற்றுள்ளது. இதனால் கதவை உள்வாயிற் படியில் தடுக்கும் மரமாக எழு விளங்கியமை தெளிவுறும்.

"எழுமரம் காக்கும் தாள், மதிற்கதவம்எழு, எழுவிட்டு அமைத்த தின் நிலைக் கதவு"[109] எனும் தொடர்கள் கோட்டை மதில் காக்கும் எழுவைக் குறிக்கின்றன. இவற்றால் மதிலின் உள்வாயிற் புறத்தே நிலத்திலிருந்து கோட்டைக் கதவின் உச்சிவரை உயர்ந்து எழுந்து நிற்கும் வலுவுடைய மரம் எழு என்பது விளங்கும்.

சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் அங்குசத்தால் கொலையானையை ஏவிப் பகைவரின் காவலையுடைய எழு-கணைய மரம் முறிபடச் செய்ததை,

“கடுங்கண்ண கொல்களிற்றாற்
காப்புடைய வெழுமுருக்கிப்” (புறம் : 14 : 1 - 2)

என்ற அடிகள் சுட்டும்.

## சீப்பு

“சீப்பு என்பது கதவின் தாழ். கதவுக்கு வலியாக உள்வாயிற் படியில் நிலத்தே விழ விடும்மரம்”[110] என்று பொருளுரைப்பர்.

புறநானூற்றில் ஏணியும் சீப்பும் மாற்றி எனும் தொடருக்கு விளக்கம் கூறுமிடத்து “மதில் கோடற்கேணியும், மதில் வாயிலைக் காத்தற்குச் சீப்பும் கருவிகளாம், சீப்பென்றது ‘உள்வாயிலில் கதவுக்கு வலியாக நிலத்தேவிழ இடுமரம் என்பார் அடியார்க்கு நல்லார்”[111] என உரைப்பார் ஔவை. சு. துரைச்சாமி. இதிலிருந்து கதவுக்கு வலுவூட்ட நிலந்தோய அமைக்கப்பட்ட தாழ்ப்பாள் சீப்பு என்பது விளங்கும்.

## ஐயவி

‘ஐயவி’ என்னும் ஒருவகைக் கருவியும் அரண்காப்புக் கருவியாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இதனை,

“பூணா ஐயவி தூக்கிய மதில” (பதி. 16:4)

“ஓங்கு நிலை வாயில்
தூங்குபு தகைத்த வில்லிசை மாட்டிய விழுச்சீர் ஐயவி” (பதி: 22:22-23)

என்ற அடிகள் விளக்கும். இதனால் வாயில் கதவுகளைத் தாண்டிப்புறத்தில் பகைவர் அணுகாதிருக்கப் பயனானது ஐயவி என்பது விளங்கும்.

## 5. மற்றும்பிற

இவ்வகையில் போர்க்கள இசைக்கருவிகள், வீரக்கழல், அடிபுதையரணம் ஆகியவை இடம்பெறுகின்றன.

## 1. போர்க்கள இசைக்கருவிகள்

முரசு, தண்ணுமை, போர்ப்பறை முதலிய தோற்கருவிகளும், வளை, வயிர் முதலிய ஊதுகருவிகளும் பண்டைப் போர்களில் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டன. இக்கருவியின் அமைப்பு, பயன்பாடு முதலியவற்றை விளக்குவனவாகப் பல குறிப்புகள் பண்டைய இலக்கியங்களில் காணப்படுகின்றன. இவைகளைக் குறித்த விளக்கக் குறிப்புக்களைப் பின்வரும் பகுதியில் விளக்கமாகக் காணலாம்.

### முரசு

முரசம் பெரிய உருவத்தினை உடையது. வலிமை மிக்க காளையின் தோலால் போர்த்து நன்றாக வரிந்து கட்டப்பட்டிருக்கும். இதனை,

"கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரசம் ஓவில கறங்க" (732 - 734)

என்ற மதுரைக்காஞ்சியடிகள் சுட்டும்.

போர் நிகழ்கையில் படையெடுத்து முன்னேறிச் செல்லுமாறு வீரரை ஏவுவதற்கு முரசு முழக்கித் தெரிவிப்பர். இதனை,

"எடுத்தேறு ஏய கடிப்புடை அதிரும்
போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்கு" (பதி: 84 : 1-2)

என்பதால் அறியலாம். இவ்வாறு போர்த்தொழிலில் போர் அறிவிக்க, படைகளுக்கு அறிவிக்க வேண்டிய விதிமுறைகளைத் தெரிவிக்க, போர் வெற்றியைக் கொண்டாட எனப்போர்முரசம் போர்த்தொழிலுக்குப் பெருமளவு பயன்பெற்றுள்ளது.

## போர்ப்பறை, தண்ணுமை

முதற்கண் போர்த்தொடக்கத்தைப் போர்ப்பறை அறிவிக்கும். அடுத்து, காஞ்சிப் பூக்கொள்ளுதற்கு வீரரை ஏவுதல் செய்வது தண்ணுமைப் பறையாகும். இதனை,

"இன்றும், செருப்பறை கேட்டு விழிப்புற்று மயங்கி" (புறம் :279:7)
"நிறப்படைக் கொல்கா யானை மேலோன்
குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை" (புறம்: 293:1-2)

என்பவை சுட்டும்.

## வளை, வயிர்

போர்க்களத்தில் முரசுடன் சேர்த்து இசைக்கப்படும் (ஊதும்) இசைக்கருவியாக வளையும் வயிரும் பயன்படுத்தப்பட்டன என்பதை,

"வயிரும் வளையும் ஆர்ப்ப" (முல் :92)

"வளைநரல வயிரார்ப்ப" (மது : 185)

"முரசு கடிப்பிருப்பவும் வால்வளை துவைப்பவும்" (புறம் : 158 : 1)

என்ற மேற்குறித்த இலக்கியத் தொடர்களால் அறியலாம்.

'வளை' என்பது சங்கைக் குறிக்கும். 'வயிர்' என்பது எக்காளம் அல்லது ஊது கொம்பைக் குறிக்கும். போரில் தொடக்கம் இறுதி ஆகியவற்றைச் சங்கின் முழக்கத்தால் புலப்படுத்துவது வழக்கம். வயிர் இசைப்பவரை வயிரியர், வயிரியமாக்கள் என்று வழங்கினர்.

உலோகத்தால் இயன்ற ஊதுகொம்பு (Bugle) இக்காலத்திலும் போர்ப்பயிற்சி மையங்களில் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது. காலையில் பணித்தொடக்கத்தையும் (Reveile), மாலையில் பணிமுடிவுறுதலையும் (Retreat) ஊதுகொம்பின் ஒலி அறிவிக்கும்.

## வீரக்கழல்

'கழல்' என்பதனை அக்காலப் போர்வீரர்தம் சீருடையின் பகுதியாகக் கொள்ளலாம். கழல், போர் வீரனுக்கு இன்றியமையாத ஓர் அணிகலனாக அமைந்திருந்தது. கழல் பற்றிய குறிப்புக்கள் சங்கப்பாடல்களில் பல இடங்களில் காணப்படுகின்றன.

கழல் உராய்ந்து கணுக்கால் காழ்ப்பேறியதால், வீரனின் பாதங்கள் உறுதிப்பட வாய்ப்பாக இருந்தது. இவ்வாறு உறுதியும் அழகும் பெற்றிருந்ததால்,

"பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்காற்" (பட் : 294)

என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. போர்க்களத்தில் எதிர்நிற்க ஆற்றாது அஞ்சி ஓடுங்கால் அக்கழல்ஓசை மானக் கேட்டினைப் பறைசாற்றும் என்பதை,

"........................ பகைவர்

ஓடுகழற் கம்பலை கண்ட

செருவெஞ் சேஎய் பெருவிற னாடே" (புறம் : 120 : 19 - 21)

என்ற அடிகள் விளக்கும்.

அரசர்கள் தம்மிடம் தோல்வியுற்ற மன்னரின் பொன்முடியை உருக்கிக் கழலாகச் செய்து தம் காலில் அணிவது உண்டு (புறம் : 40).

கழல் அழகாகவும் வேலைப்பாடு உடையதாகவும் செய்யப்படும். 'ஒண்பொறிக் கழற்கால்' (பதி. 32:2) என்ற பதிற்றுப்பத்துப் பாடல் உரையில் "ஒண்பொறிக் கழற்கால் என்றது, தாங்கள் போர்த்தொழில்களைப் பொறித்தலையுடைய ஒள்ளிய கழற்கால்"[112] என்று விளக்கப்பட்டுள்ளது. எனவே, ஒவ்வொரு வீரனும் தான் அணிந்திருக்கும் கழலில் தனது வீரச்செயல்களைப் பொறித்துக்கொள்ளும் வழக்கமுண்டு என்று தெரிகிறது. தற்கால வீரன் தனது சீருடையில் மார்பின் மீது இத்தகைய சிறப்புப் பதக்கங்களைத் (Medals) தரித்துக்கொள்ளும் வழக்கத்தோடு இதனை ஒப்பிடலாம். மேலும் தற்காலத்தில் வீரர்கள் காலில் அணியும் கணுக்கால்பட்டி (Anklet) என்பதற்கு ஈடாகக் கழலைக் கருத இடமுண்டு.

## அடிபுதையரணம்

காலணி சீருடையின் ஒரு பகுதியாகும். இக்காலப் படைவீரர் அடிமுழுதும் மறையுமாறு அணியும் காலணி (Boots) போன்று அக்கால மறவர் அடிபுதை அரணம் தரித்தனர் (பெரும். 69). இது தொடுதோல் எனப்படும். இது எளிய செருப்பினின்று மாறுபட்டதாகலாம்.

## போரும் கருவியும்

தேர்மீது நின்று போர்புரியும் வீரன் வேலையும் பயன்படுத்தலாம். எனினும், தரைமீது உறுதியாக நின்று கொண்டோ சிறிது தொலைவு ஓடிச்சென்றோ வேல் எறிவதுதான் வேற்படைக்கு உரிய சிறந்த முறையாம். தேர்மீது நிற்கும் வீரனுக்கு அத்தகைய வசதிகள் இருக்காது. எனவே, தேர்ப்படை வீரனுக்கு வில்லும் அம்புமே மிகப்பொருத்தமான படைக்கலன்களாக இருந்திருக்கின்றன. பொதுவாக எல்லா வீரர்களும் வாள் வைத்திருப்பதும், வாள் பயிற்சி பெற்றிருப்பதும் இயல்பு. எனவே, தேர் வீரரும் வாள் வைத்திருப்பர். தேரைவிட்டு இறங்கிப் பகைவரோடு நெருங்கிப்போர் புரிய வேண்டிய காலங்களில் அவ்வாள் அவர்களுக்குப் பயன்படும்.

இக்காலப் போர்ப்பயிற்சியிலும், காலாட்படையினருக்கேயன்றி (Infantry), பீரங்கிப்படை (Artillery), கவசவண்டிப் படை (Armoured), விமானப்படை (Airforce), கப்பற்படை (Navy) முதலிய அனைத்துப் படை வீரர்களுக்கும் துப்பாக்கிப் பயிற்சி அடிப்படையாக அளிக்கப்பெறுவது இங்கு கருதத்தக்கதாகும். எனவே, இன்றைய நிலையில் ஒவ்வொரு படை வீரனுக்கும் துப்பாக்கிப் பயிற்சி அளிக்கப்பெறுவது போல வாள் பயிற்சி பண்டைக்கால வீரர்களுக்குப் பயன்பெற்றுள்ளதை அறியலாம்.

அரண்காக்கும் போருக்கு அம்பு சிறந்ததாகக் கருதப்பெற்றது. மதிலின் உள்ளிருந்து புறத்தே மதிலை நெருங்கிவரும் பகைவரைத் தாக்குவதற்கு நிறைய அம்புகளும், அம்பு எய்துவதற்குரிய புழைகளும் மதிலில் இருக்கும். இதனை,

"அம்பு துஞ்சுங் கடியரணால்" (புறம் : 20:16)

என்ற அடி சுட்டும்.

## வணிகத்தொழில்

புண்ணிய பூமி என்று சிறப்பிக்கப் பெறும் இந்தியாவிற்குக் கரும பூமி என்ற பெயரும் உண்டு. இவ்வழக்கிற்கு உயர்ந்த தொழில் செய்வதற்குரிய பூமி என்று பொருள் கூறுவர். பரத கண்டத்திற்குரிய அறுவகைத் தொழில்களில் உழவும், வணிகமும் தலை சிறந்து விளங்கியுள்ளன. இதில் உழவைப் பற்றி முன்பே விரிவாக விளக்கப்பெற்றுள்ளது.

"இருவகையான் இசைசான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்" (121-122)

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடும். இவ்வகையில் உழவும் வணிகமும் தமிழகத்தில் போற்றப்பெற்றதை அறியலாம். பண்டைத் தமிழகத்தில் அவர்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்பத் தொழில் மாறுபட்டுக்காணப்பெற்றது. இதனால் அவர்களின் வாணிகநிலை உள்நாட்டு வணிகம், வெளிநாட்டு வணிகம் என்ற இருநிலைகளில் அமைந்தது.

## உள்நாட்டு வாணிபம்

பண்டை நாளில் உள்நாட்டு வாணிபத்தில் பண்டமாற்று முறை சிறப்பிக்கப்பெற்றுள்ளது. அவ்வகையில் ஒரு நிலத்தில் விளைந்தவற்றை மறுநிலத்திற்குக் கொண்டு செல்லப் போக்குவரத்துச் சாதனங்கள் தேவைப்பட்டன. ஆகவே, வண்டிகள், எருமை, கழுதை இவற்றைப் பயன்படுத்தினர்.

## வண்டிகள்

நெய்தல் நிலத்திலிருந்து உப்பு மூட்டைகளை எடுத்துச்செல்ல எருதுபூட்டிய வண்டிகள் பயன்பட்டதை,

"நோன்பகட்டு உமணர் ஒழுகையோடு வந்த" (சிறு. 55)

என்ற அடி சுட்டும்.

கடற்கரைக்கு அப்பாலுள்ள உள்நாடுகளுக்கும் மலைநாடுகளுக்கும் எருதுகள் உப்பு வண்டியை இழுத்துக் கொண்டு போயின. இதனை,

"கழியுப்ப முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்தாள் பகடு" (புறம் : 60 :8-10)

என்ற அடிகள் சுட்டும்.

## கழுதை

வண்டி இழுப்பதற்குக் கோவேறு கழுதைகளையும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"கொடிநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி" (அகம் : 350:6)

"நெடுஞ்செவிக் கழுதை குறுங்கால் ஏற்றை

புறநிறைப் பண்டத்துப் பொறை" (அகம்:343:12-13)

என்பன விளக்கும். மாட்டு வண்டிகள் போகமுடியாத இடங்களுக்கு உப்பு மூட்டையைக் கழுதைமேல் ஏற்றிக் கொண்டுபோய் விற்றனர். மிளகு மூட்டைகளைச் சுமந்து கொண்டுபோகக் கழுதைகளை அக்காலத்தில் பயன்படுத்தினர். இதனைப் பெரும்பாணாற்றுப் படையும் (80-81) குறிப்பிடுகின்றது.

## படகு

உள்நாட்டு வாணிகத்திற்குப் படகையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

"வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி

நெல்லோடு வந்த வல்வாய்ப் ப.்றி" (பட் : 28-30)

என்ற அடிகள் சுட்டும்.

## பண்டமாற்று

பழந்தமிழகத்தில் வாணிகத்தொழில் பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றுள்ளது. 'பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைக் கொள்வது' என்பர். தேன், நெய், கிழங்கு

ஆகிய பண்டங்கள் மீனுக்கும் நறவுக்கும் மாற்றப்பட்டன. கரும்பும், அவலும், மான் ஊனுக்கும் கள்ளுக்கும் மாற்றப்பெற்றுள்ளது. (பெரும். 161-165) உப்புக்கு நெல் மாற்றப்பெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.[113] மீனுக்கு நெல்லைப் பண்டமாற்றாகப் பெற்றுள்ளனர்.[114] பச்சைப்பயற்றுக்கு ஈடாகக் கெடிறு மீன் மாற்றுக் கொள்ளப்பெற்றதை,

"முள்ளெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டிநிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கும்" (ஐங். 47 : 1-3)

என்ற அடிகளால் அறியலாம். இவ்வாறு பண்டமாற்றில் விளைபொருளுக்கு விளைபொருளே மாற்றிக்கொள்ளப்பெற்றதோடு, வேறு பொருள்களையும் மாற்றிக்கொண்டுள்ளனர். வாளைமீனுக்கு இணையாக நல்ல முத்துக்களைப் பெற்றுள்ளனர் (அகம். 126 : 8). கள்ளுக்கு விலையாக முத்து, யானை வெண்கோடு கொடுத்ததையும் இலக்கியங்கள்[115] சுட்டுகின்றன. இவ்வகையில் பண்டைத் தமிழ்மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்கள் அனைத்தையும் பண்டமாற்று முறையில் பெற்று வாழ்ந்துள்ளனர்.

## வெளிநாட்டு வாணிபம்

சங்க இலக்கியங்களுள் தமிழர்வேற்று நாட்டினரோடு கடல் வணிகம் கொண்டிருந்தனர் என்பதற்குப் பல்வேறு சான்றுகள் கிடைக்கின்றன.

தமிழகத்தின் துறைமுகங்களுக்குப் பல்வேறு நாட்டிலிருந்தும் நாவாய்கள் வந்தன என்பதை,

வேறு பன்னாட்டிற் காறர வந்து

பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை (நற். 295 : 5-6)

என்ற நற்றிணை அடிகள் சுட்டும்.

யவனர்கள் பொன்னைக் கொண்டுவந்து தமிழகத்திற்குக் கொடுத்துவிட்டு அதற்குப் பண்டமாற்றாக மிளகை எடுத்துச் சென்றனர் என்ற செய்தி அகநானூற்றுப் பாடல் ஒன்றின் மூலம் (149:9-10) தெரியவருகின்றது.

குதிரை, மிளகு, மணி, பொன், அகில், முத்து, ஆரம், துகில், ஈழநாட்டு உணவு போன்ற பொருட்கள் காவிரிப்பூம்பட்டினத்துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட்களாக விளங்கிய செய்தியை பட்டினப்பாலை வரிகளால் (185-193) அறிய முடிகின்றது. இவ்வகையில் பண்டைக்காலத்தில் கடல் வாணிகத்தில் தமிழர் பிறநாடுகளுடன் கொண்டிருந்த வாணிபத்தொழில் திறத்தை அறிய முடிகின்றது.

வணிகக்கப்பலில் கொடி உயர்த்துதல், முரசு முழங்குதல் போன்ற நிகழ்வுகள் நடைபெற்றதை, மதுரைக்காஞ்சியடிகள் (79-80) சுட்டுகின்றன.

சங்ககாலத்தில் கடற்கரைத் துறைமுகங்களில் கலங்கரை விளக்கம் இருந்ததை,

“இரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி

உரவுநீர் அழுவத்தோடு கலங்கரையும்

துறைபிறக் கொழியப் போகி” (பெரும். 345-350)

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இதிலிருந்து பண்டைக்காலத்திலேயே கலங்கரை விளக்கம் அமைக்கப்பெற்றிருந்தமை வெளிப்படும்.

பண்டக சாலையில் சோழமன்னனின் புலிமுத்திரை இடப்பெற்ற பண்டங்கள் தான் வெளியேற முடியும் என்று பட்டினப்பாலை (133-136) குறிப்பிடுகின்றது. இதனால் புலிமுத்திரைக் கருவியைப் பயன்படுத்தியிருக்கலாம் என்று கருதவாய்ப்புண்டு.

## அங்காடிகள்

பல்வேறு பொருள்களை வைத்து வாணிகஞ்செய்யும் கடைத்தெரு அங்காடி எனப்பட்டது. நாட்காலத்தில் நாளங்காடியும், இரவுக்காலத்தில் அல்லங்காடியும் நடைபெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவ்வங்காடிகளில் ஒவ்வொரு விற்பனைப் பொருளுக்கும் கொடி நாட்டப் பெற்றிருந்தமையையும் இலக்கியங்கள் குறிக்கின்றன. இதனால், கொடியானது விற்பனைப் பொருளை அடையாளம் காட்டும் புழங்குபொருளாக விளங்கியமை வெளிப்படும்.

## 4. கலையியல் தொழில்கள்

பண்டைத் தமிழ் மக்கள் கலையை வளர்ப்பதிலும் சிறந்திருந்துள்ளனர். இசைக்கலை, சிற்பக்கலை, கட்டடக்கலை, இலக்கியக்கலை, நாடகக்கலை ஆகியவற்றில் சிறந்திருந்ததற்கான சான்றுகள் இலக்கியங்கள் இடம்பெற்றுள்ளன என்றாலும், ஒவ்வொரு கலைக்கும் பயன்பெற்ற புழங்கு பொருட்கள் பற்றிய விரிவான செய்திகள் வேறுவகைத் தலைப்பில் விரிவாகச் சிந்திக்கத்தக்கவை.

## தொகுப்புரை

பண்டைத் தமிழர் பல்வகைத் தொழில்களில் சிறந்து விளங்கினர். தொல்காப்பியத்தில் கருப்பொருள்களைப் பற்றிக்கூறும் போது செய்தி என்பது தொழிலைக் குறிக்கும் என்பர். அக்காலத்தில் ஐவகைத் திணைகளைச் சார்ந்த தொழில்கள் சிறந்திருந்தன.

தொல்காப்பியத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவும், தொழில் அடிப்படையில் தொடர்பு பெற்றிருக்கின்றது. மேலும், எழுவகைத் தொழில்களைத் தொல்காப்பியர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் தொழில்கள் பற்றிய செய்திகள் விரிவாகப் பதிவாகியுள்ளன. அப்பதிவுகளை வரையறுத்து விளக்குவதற்கு தொழில் பற்றிய கருத்துருவாக்கம் தேவையானதாகும்.

உழைப்பு, பணம் சம்பாதித்தல், கருவிகள் உற்பத்தி, தொழில் திறம் ஆகியவைகள் தொழிலோடு தொடர்பு பெறுகின்றன. பொதுவாக உழைப்பை மையமிட்ட தொழில் கருத்திற்குரியதாகும்.

வாழ்வியல் தொழில், போர்த்தொழில், வாணிகத்தொழில், கலையியல் தொழில் என்கிற வகைநிலையில் தொழில் சார்ந்த புழங்கு பொருள்கள் மதிப்பிடப்பெறுகின்றன.

வாழ்வியல் தொழில் மக்களின் வாழ்வியலோடு நேரடித்தொடர்பு பெற்றது. கைத்தொழில்கள், நிலம்சார் தொழில்கள், கைவினைத்தொழில்கள், பிறதொழில்கள் என்கிற வகைகளில் பகுத்து விளக்கப்பெற்றுள்ளது.

கைத்திறமை மற்றும் சிறுகருவிகளைப் பயன்படுத்திச் செய்யப்பெறும் தொழில்கள் கைத்தொழில் வகையில் அடங்கும். பயிர்த்தொழில், நெசவுத்தொழில், தச்சுத்தொழில், மட்கலத்தொழில், கொல்லுத்தொழில் உலோகத்தொழில் என்கிற வகைநிலையில் இலக்கியங்களிலிருந்து தொழில்கள் பற்றிய செய்திகள் கிடைத்துள்ளன.

நாஞ்சில், தளம்பு, ஆம்பி, கிழார், துளர், குளிர், தட்டை, தழல், வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி, தொண்டகச்சிறுபறை, தண்ணுமை, அரிப்பறை, குயம், வாள், கரும்பு அரவை இயந்திரம் ஆகிய கருவிகள் பயிர்த்தொழிலோடு தொடர்புடைய கருவிகளாகும்.

நிலத்தை உழுவதற்குப் பயன்படும் கருவி நாஞ்சில் ஆகும். இக்கருவியின் அமைப்பு பெண் யானையின் வாயை ஒத்து வளைந்தும் அதில் பொருத்தப்பெற்றுள்ள பெரும்கொழு உடும்பின் முகம் போன்று வளைந்து இருப்பது என்பது நச்சர் உரை. இக்கலப்பையை வைத்தெடுப்பதற்குத் தனிக்கொட்டில்கள் இருந்திருக்கின்றன. தற்பொழுது நாஞ்சில் கலப்பை என அழைக்கப்பெறுகின்றது, உழுதபின்னர் சேற்றுவயலைச் சமமாக்குவதற்கு தளம்பு என்ற கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவி தற்பொழுது பரம்பு என்று அழைக்கப்பெறுகிறது. ஆம்பி, கிழார் என்பன நீர் பாய்ச்சுவதற்குப் பயன்பெற்றவை. ஆம்பி ஏற்றக்கருவியாகும். கிழார் என்பது தோட்டப்பயிருக்கு நீர் இறைக்கும் கருவியாகும். பயிர்களுக்கு இடையிலுள்ள களையைக் களைவதற்குத் துளர் என்ற கருவி பயன்பட்டிருக்கின்றது. நாட்டுப்புறத்தில் இதனைக் களைக்கொட்டு என்று அழைக்கின்றனர். குளிர் என்பது ஒருவகை கிளிகடி கருவியாகும். அகம் சார்ந்த நூல்கள் இக்கருவியைப் பற்றி

மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளன. இதன் வடிவம் குறித்து சங்க இலக்கியத்தில் செய்திகள் கிடைக்கவில்லை. பிற்காலத்தில் தோன்றிய தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர் இதன் வடிவத்தினை, மூங்கிலை வீணை போல் கட்டித்தெரிக்கும் கருவி எனக் குறிப்பிடுகின்றார். தட்டை என்கிற கிளிகடி கருவி குறித்தும் அகநூல்கள் மிகுதியாகச் சுட்டுகின்றன. இக்கருவி இரு பகுதியாகப் பிளந்த வாயை உடையது. ஓசை விட்டுவிட்டு ஒலி எழுப்பும் தவளையின் ஒலியோடு இணைத்துப் பேசப்பெறுகின்றது. இது மூங்கிலால் செய்யப்பெற்றதாகத் தெரிகிறது. கையால் சுற்றி ஓசைஎழுப்பும் ஒருவகைக் கருவி தழல் ஆகும். இவ்வகையில் குளிர், தட்டை, தழல் ஆகிய கிளிகடி கருவிகளைப் பெண்கள் மட்டும் பயன்படுத்தியுள்ளனர்.

தினைப்புனங்களில் விளைந்த பயிர்களை விலங்குகளிடமிருந்து பாதுகாக்கச் சில புழங்குபொருள் கருவிகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. யானைகளை விரட்ட வில்லம்பு பயன்படுத்தப்பெற்றதாகத் தெரிகிறது. கவண்கல் என்னும் கருவியைக் கொண்டு குறிதப்பாது பறவை, விலங்குகளை ஓட்டியிருக்கின்றன. தினைகாக்க காட்டிடத்துச் செல்கின்றபோது பாதுகாப்புக் கருவியாக வேலைப்பயன்படுத்தியுள்ளனர். ஞெகிழி என்பது கொள்ளிக்கட்டையைக் குறிக்கும். தினைப்புனத்தில் யானையை எறிகொள்ளி கொண்டு விரட்டியதாகத் தெரிகிறது. பன்றியை வலிய காழ்ப்பேறிய குறுந்தடி தினையின் தாள்களை அழிக்கும் முயல்களை விரட்டப்பயன்பெற்றுள்ளது.

பயிர் அறுவடைக்கு முன் கூடமைத்து வாழும் பறவைகளை ஓட்டுவதற்கு இசைக் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வகையில் குறிஞ்சி நிலத்தில் வட்டமான வாயினையுடைய தொண்டகச் சிறுபறையினையும், தோலினால் ஆன தண்ணுமை என்னும் கருவியையும், அரிப்பறையையும் பயன்படுத்தியிருக்கின்றனர்.

இரவு நேரத்தில் தினைப்புனம் காக்க ஆண்கள் செல்கின்றபோது வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி போன்ற கருவிகளையும், இசைக்கருவிகளையும் பயன்படுத்தியுள்ளனர். பொதுவாகத் தினைப்புனத்தைப் பறவைகளிடமிருந்து பகலில் காக்கப் பெண்களும், இரவில் விலங்குகளிடமிருந்து பாதுகாக்க ஆண்களும் தொழிலில் ஈடுபட்டமை தெளிவாகிறது.

பண்டைத் தமிழர் கரும்பு உற்பத்தியில் சிறந்திருந்ததை இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. கரும்பிலிருந்து சாறுபிளிவதற்கு இயந்திரத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர். இச்சாற்றினின்றும் வெல்லம் தயாரிக்கும் பழக்கம் இருந்திருக்கின்றது, எனினும் சாறு பிழியும் இயந்திரம் குறித்த விரிவான செய்திகள் கிடைக்கவில்லை.

பண்டைத் தமிழர்கள் நெசவுத் தொழிலிலும் மேன்மை பெற்றிருந்தனர். பருத்தியாடைகள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. பஞ்சினை வில், எ.்.கு ஆகிய கருவிகளால் அடித்துத் தூய்மை செய்திருக்கின்றனர். அகநானூற்றில் 'பாவாற்றுதல்' பற்றிய குறிப்பு வருகின்றது. மேலும் தூய்மை செய்வதற்கு பல்வகைக் கருவிகளைப் பயன்படுத்தியிருக்கலாம். அவை இலக்கியங்களில் இடம்பெறவில்லை.

மரங்கொல் தச்சர்கள் தச்சுத்தொழிலைச் சிறப்பாகச் செய்திருக்கின்றனர். தேர், வண்டி, வீட்டு வாயில், கதவு அமைப்புகள், படகு, கப்பல் போன்றவை மரத்தோடு தொடர்புடையவை. இவ்வகைப் புழங்கு பொருள்களைத் தச்சுத்தொழில் வல்லுநர் சிறப்பாகச் செய்திருக்கின்றனர். இவ்வல்லுநர்கள் இரும்பால் செய்யப்பெற்ற உளியை கொண்டு, மரத்தை வெட்டவும் சீவவும் செதுக்கவும் தச்சுக் கருவியாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். இக்கருவியைக் கொண்டு மரம், யானைத்தந்தம் ஆகியவற்றைச் செதுக்கியுள்ளனர்.

மட்கலத்தொழில் செய்வோர் சக்கரங்களைப் பயன்படுத்தியிருக்கின்றனர். சக்கரத்தின் சுழற்சிக்கு நீர்க்குமிழிகள் உவமிக்கப் பெற்றதிலிருந்து சக்கரச் சுழற்சியின் வேகம் வெளிப்படும். இவர்கள் மட்கலம், புதைக்கும் பெரிய சாடிகள், செங்கற்கள், பல்வகை மண்பாண்டங்கள் போன்றவற்றைச் செய்திருக்கின்றனர்.

இரும்பைக் காய்ச்சி உருக்கி அடித்து வேலை செய்வதால் கொல்லர் ஆவர். இத்தொழிலுக்கு கொல்லுலை, துருத்தி, உலைமூக்கு, அரம், குறடு, சம்மட்டி, உலைக்கல், சாணைக்கல் போன்றவை பயன்படுத்தப் பெற்றிருப்பதை இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது.

பூமிக்கு அடியில் கொல்லுலை அமைக்கப்பெறும். இரும்புத்தாதுக்களை உருக்குவதற்கு இவ்வுலை பயன்படும். உலையின் நெருப்பின் வெப்பத்தை மிகுதிப்படுத்துவதற்குத் துருத்தி என்னும் தோற்கருவி பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது. துருத்திக் குழாய்க்கு இலக்கியத்தில் 'குருகு' என்ற பெயருண்டு. துருத்தியிலிருந்து உலைக்குழாயின் வழியாகக் காற்றுப்போகும். காலின் வழி துருத்தி இயக்கப்பெற்றதாகவும் தெரிகிறது. துருத்தியும் உலையும் இணையும் இடத்திற்கு உலைமூக்கு என்ற பெயர் இருப்பதாகத் தெரிகிறது. பிற கருவிகளின் நுனிப்பகுதியை அராவிக் கூர்மை செய்வதற்கு அரம் என்னும் கருவி பயன்படுத்தப் பெற்றதாகத் தெரிகிறது. சூடாக்கிய உலோகங்களைப் பிடிப்பதற்கும், கரியைத் தீயில் போடுவதற்கும் குறடு என்னும் கருவி பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது. நண்டின் கவைக்கால் போன்ற இரு பிளவாகக் குறடு அமைந்திருக்கின்றது.

கொல்லன் பயன்படுத்தும் 'கூடம்' அடிப்பதற்குப் பயன்படும். இதனை தற்காலத்தில் 'சம்மட்டி' என்று குறிப்பிடுவர். சூடாக்கப்பெற்ற இரும்பை பட்டடைக்கல்லில் வைத்தே அடித்திருக்கின்றனர். அவ்வகையில் அக்கல் 'உலைக்கல்' என்னும் புழங்குபொருளாக அமைகிறது. சாணைக் கல்லால் கருவிகள், ஆயுதங்களைக் கூர்மைப்படுத்தியிருக்கும் முறை தெரியவருகிறது.

வெண்கலம், செம்பு போன்றவற்றைப் பயன்படுத்திப் பல புழங்கு பொருள்களைச் செய்துள்ளனர். ஆனால், செய்வதற்குப் பயன்படுத்திய கருவிகள் பற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை.

பொன்தொழில் செய்பவர்கள் அணிகலத் தொழிலுக்கு, கொல்லுத்தொழிற் கருவிகளான துருத்தி, கெடிறு, உலை, சம்மட்டி, அரம் ஆகியவற்றைப் பயன்படுத்தியிருத்தல் வேண்டும். ஆனால் அவைகள் குறித்த செய்திகள் கிடைக்கவில்லை. பொன் வேலைக்குப் பயன்பட்ட உரைகல், அரம் குறித்த செய்திகள் கிடைக்கின்றன. பொன்னை உரைத்துப் பார்ப்பதற்கு உரைகல்லைப் பயன்படுத்தியுள்ளனர். இந்த உரைக்கல் கட்டளைக்கல் என்றும் அழைக்கப்பெற்றிருக்கின்றது. சங்கை அறுப்பதற்கும், வளையலைச் செய்வதற்கும் அரம் பயன்படுத்தப்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

நிலம் சார் தொழில்களில் கால் நடைபேணல், வேட்டையாடுதல், ஆறலைத்தல், மீன்வேட்டம், உப்பு விளைவித்தல், முத்துக்குளித்தல், சங்கெடுத்தல் போன்றவை குறிக்கத்தகுந்தன. கால்நடை பேணல் முல்லை நில மக்களின் தொழிலாகும். இடையர்கள் கால்நடைகளை மேய்க்கச் செல்லும்போது உறி,

தீக்கடைக்கோல், பனையோலைப் பாய், குழல், சிறியகோல், சோறு எடுத்துச் செல்ல மூங்கில் குழாய் ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். வேங்குழல் முல்லைப்பண் இசைப்பதற்குப் பயன்படும். கால்நடைகள் நீர் அருந்துவதற்கு ஊற்றுத்தோண்ட சிறிய கோலைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

வலைகள், வில் அம்பு, ஊதுகொம்பு போன்றவை வேட்டையாடும் தொழிலோடு தொடர்புடைய புழங்கு பொருள்களாகும். வலையைக் கொண்டு விலங்குகளைப் பிடித்தலும், பறவைகளைப் பிடித்தலும், அக்காலத்தில் முறையாக இருந்திருக்கின்றது. வில்லம்பு தம்மைக் காத்துக் கொள்ளவும் வேட்டையாடுவதற்கும் பயன்படுத்தப் பெற்ற வேட்டைக்கருவியாகும். வேட்டைக்குச் செல்லும் காலத்தில் எல்லோரும் ஒன்று சேரவும், வேட்டை நாயை அழைப்பதற்கும் ஊதுகொம்பைப் பயன்படுத்தியுள்ளனர்.

பாலை நிலத்தில் வாழும் ஆறலைக்கள்வர்கள் தம் தொழிலுக்கு அம்பையும், துடியையும் பயன்படுத்தியதாகத் தெரிகிறது.

நெய்தல் நிலத்துப் பரதவ மக்களின் தொழில் மீன்பிடித்தலாகும். இவர்கள் தங்கள் தொழிலுக்கு வலைகள், பறிகள், விசைத்தூண்டில், தூண்டில், எறியுளி, மரக்கலங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தியிருக்கின்றனர். சுறாமீன், இறாமீன்களைப் பிடிக்க வலை பயன்படுத்தப்பெற்றிருப்பதை இலக்கியங்கள் குறிக்கின்றன. கடலில் மட்டுமல்லாமல், கழிகளிலும் மீன்களைப் பிடித்திருக்கின்றனர். வலை மட்டுமின்றி விசைத்தூண்டிலும் மீன்பிடிக்கப் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது. தூண்டிலை இலக்கியங்கள் 'கொடுவாய் இரும்பு' எனக்குறிக்கும். சுறாமீனைப்

பிடிப்பதற்கு எறியுளியைப் பயன்படுத்தியுள்ளனர். இஃது மீன்களின் மேல் எறியப்பயன்படுவதாலும், உளிபோன்று இருப்பதாலும் 'எறியுளி' என்று அழைக்கப்பெற்றுள்ளது. முறுக்கப்பெற்ற கயிற்று நுனியில் இக்கருவி கட்டப்பெற்று எறியப்பெற்றதாகத் தெரிகிறது.

திமில், அம்பி, தோணி போன்றவைகளைக் கொண்டு கடலில் நெடுந்தொலைவு சென்று பரதவர்கள் மீன்களைப் பிடித்துள்ளனர். திமில் என்பது கட்டுமரத்தைக் குறிப்பதாகும். அம்பியில் ஒருவகை விரைவு இருப்பதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பெரிய மரக்கலங்களிலிருந்து கொண்டு வரப்பெற்ற பொருள்களைச் சிறிய தோணிகளில் ஏற்றிக் கரைக்குக் கொண்டு வந்துள்ளனர்.

உப்புத் தொழில் செய்வோர் போக்குவரத்திற்கு வண்டியைப் புழங்கு பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

முத்துக் குளித்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களுக்குரிய புழங்கு பொருள் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

ஓலைத்தொழில், பொம்மை செய்தல், பாவை செய்தல், சாயப்பாக்கு தயாரித்தல், கயிறு திரித்தல், களவுத்தொழில் போன்ற தொழில்கள் பண்டைத் தமிழர்களிடம் நிலவிய குறிப்பிடத் தகுந்த கைவினைத் தொழில்களாகும். இத்தொழில் வல்லுநர்கள் பயன்படுத்திய தொழில்சார் புழங்கு பொருள் பற்றிய விரிவான செய்திகள் கிடைக்கவில்லை.

பனை, தென்னை மர ஓலைகளைக் கொண்டு கூரை, ஓலைப்பாய், குடை ஆகிய பொருள்களைச் செய்துகொண்டுள்ளனர். ஓலைக்கூடை 'கொட்டம்' என்றும் வழங்கப்பெற்றுள்ளது. எளிய மக்கள் ஓலைப்பாயைப் பயன்படுத்தியுள்ளனர். மழையினின்று தம்மைக் காத்துக்கொள்ளப் பலையோலையால் 'குடை' செய்து கொண்டுள்ளனர்.

கிலுகிலி, மரப்பொம்மைகள், பாவைகள் ஆகியவற்றைப் பண்டைக்காலத்துச் சிறுவர்கள் தாங்களே செய்து கொண்டுள்ளனர். சிறுகுழந்தைகளின் அழுகையைப் போக்குவதற்கு நெய்தல் நிலத்தில் கிடைத்தது முத்துக்களை கிளிஞ்சலின் உள்ளே இட்டுப் பொதிந்து ஆட்டியுள்ளனர். சிறுகுழந்தைகள் தளர்நடை பயில நடைவண்டிகளைச் செய்து கொடுத்துள்ளனர். செல்வந்தர் பொன்னைப் பயன்படுத்தி தம் குழந்தைகளுக்கு யானைப்பொம்மையையும், அதனை நிற்க வைக்க வைரம், பவளம் ஆகியவற்றைக் கொண்டு பலகையும் செய்து கொடுத்துள்ளனர்.

வண்டற்பாவை, பசும்பாவை, மரப்பாவை, பஞ்சாய்ப்பாவை, பூந்தாதுப்பாவை, அரக்குப்பாவை, பொன்பாவை ஆகிய பல்வேறு பாவைகளைச் செய்துகொண்டுள்ளனர். தங்களுக்குக் கிடைக்கக்கூடிய பொருள்களையே பாவை புனைவதற்குப் பயன்படுத்தியதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

கருங்காலி மரத்தின் காயினைச் சீவிக்காய்ச்சி அதனைப் பாக்குடன் கலந்துசாயப்பாக்கு தயாரித்துள்ளனர்.

கயிறு திரிக்கும் தொழிலும் பண்டைக் கால மக்கள் சிறந்து விளங்கியிருக்க வேண்டும். பல்வேறு தொழிலுக்கும் கயிற்றைப் பயன்படுத்தியுள்ளனர்.

களவுத் தொழிலுக்கு உறுதியான, நீளமான நூலாலாகிய ஏணியைச் செய்துகொண்டுள்ளமையை அறிய முடிகின்றது.

முக்கனிகளுடன், தேனையும் சேர்த்துக் கள் சமைப்பதற்கு மூங்கில் குழாய் பயன்பெற்றுள்ளது.

சலவைத்தொழிலுக்கு உவர் மண்ணைப் பயன்படுத்தியுள்ளனர். சோற்றுக்கஞ்சியும் இத்தொழிலுக்குப் பயன்பெற்றுள்ளது.

பண்டைத் தமிழரிடம் போர்க்கருவி சிறப்பாக இடம்பெற்றிருந்தது. போர்க்கருவிகளைப் போர் தொடுக்கவும், தற்காத்துக்கொள்ளவும் பயன்படுத்தினர்.

வில்-அம்பு, எறிகோல், கவண்கல் ஆகியவை தொலை இலக்குக் கருவிகளாகும். சங்க இலக்கியங்களில் சிலை, சாபம், கொடுமரம், வல்வில் போன்ற சொற்கள் வில்லைக் குறிப்பதாக அமைந்துள்ளன.

வளைத்து நாணேற்றி அம்பு எய்யும் போது புழங்கு வில் சிலையாகும். சாபம் என்ற வில் தேர்மீதிருந்து போர் புரிவதற்குப் பயனாகியுள்ளது. 'கொடுமரம்" என்ற சொல்லில் உள்ள 'கொடு' என்பதற்கு வளைந்த என்று பெயர். கொடுமை மிகுந்த வில் கொடுமரம் என ஆயிற்று. பண்டை இலக்கியங்களில் எயினர், கூளியர், மறவர் போன்றோர்கள் போர்ச்செயலில் ஈடுபட்டபோது கொடுமரம் பயன்படுத்தப் பெற்றதாகத் தெரிகிறது.

இரும்பாலாகிய அம்புகளை விரைந்து செலுத்தக்கூடிய வல்வில்லையும் போரின்போது பயன்படுத்தியுள்ளனர்.

அம்பைக் குறிப்பதற்கு பகழி, வாளி, கணை, கோல், அம்பு போன்ற சொற்கள் பண்டை இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. பகழியைக் குறிப்பிடும் போது யானை, குதிரை போன்ற விலங்குகளைப் பிளந்து அழிக்கும் திண்மை வாய்ந்தது என்று குறிக்கப் பெறுகிறது. வாளியைக் குறிக்கும்போது அது செம்மையும், கூர்மையும், நீளமும், விரைவும் கொண்டது என்ற செய்தி தொடர்புபடுத்திக் கூறப்பெறுகிறது.

கணை என்றால் திரட்சி என்று பொருள். கணை குறித்த செய்திகள் பெருகணை, எறிகணை, கடுங்கணை என்று அடையுடன் குறிக்கப்பெறுகிறது. மேலும் கணைகளின் தலைகள் இரும்பால் செய்யப்பெற்ற செய்தியும் கூறப்பெறுகிறது. நிரைகவரவும், போரில் யானைகளைத் தொலைக்கவும் வீர்களை வீழ்த்தவும் இக்கணை பயன்படுத்தப்பெற்றதாகக் கூறப்பெறுகின்றது.

அம்பு அப்பிக்கொள்வதால் அம்பு எனப் பெயர் பெற்றது. இது தொடர்ந்து எய்யப்பெறும் போது பருவமழை போலப் பொலியக்கூடியது. இது நாட்டின் எல்லை காக்கவும், அரண் அழிக்கவும், யானைகளை அழிக்கவும் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

கோல் என்பது நீண்ட அம்பினை குறிக்கும். அக்கோல் அம்பை எய்யும் போது வளைந்து கொடுக்கக் கூடியது.

அம்பை எய்யும் போது வில்வளைந்து கொடுக்கவேண்டும். அதற்குக் கொடுமரம் என்று பெயர். அம்மரம் மூங்கிலினால் அமைக்கப்பெறும். வில்லில் பயன்படுத்துவது அம்பாகும். இது மிகவும் கூர்மையானது. தொடர்ந்து எய்யப்பெறுவது

என்பது புலனாகிறது. எல்லை காக்கவும், அரண் அழிக்கவும், அரண்காக்கவும் பயன்படுத்தியுள்ளனர்.

வேல் இடை அண்மை இலக்குக் கருவியைச் சார்ந்ததாகும். இலக்கியங்களில் எ்ஃகம், அயில், உடம்பிடி என்பன வேலைக்குறிக்கப் பயன்பெற்றுள்ளது. தொல்காப்பியர் காலத்திலேயே வேல் வழக்கில் இருந்திருக்கிறது. அதன் இலைப் பகுதி சிறியதாகவும், காம்பு நீண்டதாகவும் இருவேறு வடிவுடையதாக இருந்தமை புலப்படுகிறது.

கோட்டைச் சுவர்களில் அயில் என்கிற வேல் பொருத்தப்பெற்றமை புலனாகிறது. பெரும்பாணாற்றுப் படையில் மட்டுமே உடம்பிடி என்பது வேலைக்குறிக்க வந்துள்ளது. வலிமை பொருந்திய காம்புப் பிடியினையுடையது வேல். இக்காம்புப் பிடியானது உள்துளையுடைய இரும்பால் இயன்றதாக இருக்கவேண்டும். இதனால் வேகமாகவும், தொலைவாகவும் வேலைச் செலுத்த இயலும். பகைவர் மேல் எறிவதற்கும், யானையைத் தாக்குவதற்கும் இவ்வேல் பயன்படுத்தப்பெற்றதாகத் தெரிகிறது. குறிப்பாகப் பகைவரை நெஞ்சில் பாய்ந்து தாக்கும் கருவியாகும்.

பல்வகை வாள்கள், மழு, நவியம் போன்றவை அணுக்கப் போர்க் கருவிகளாகும். தொல்காப்பியத்திலேயே வாள் போரில் பயன்படுத்தப்பெற்றது குறிக்கப்பெற்றுள்ளது.

சங்க இலக்கியங்களில் எஃகு, எஃகம் ஆகிய சொற்கள் வாளைக்குறிக்கப் பயன்பெற்றுள்ளன. புறநானூற்றில் 'ஒள்ளிய வாள்' என்ற குறிப்பு

மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. வாளினைப் பாதுகாக்க உறை பயன்பெற்றுள்ளது. வாள் அணுக்கப்போர் கருவியாகப் பயன்பெற்றதை பல இலக்கியச் சான்றுகள் உணர்த்துகின்றன. கோடரி வடிவில் காணப்பெறும் மழுப்படைக்குக் கணிச்சி என்ற பெயருண்டு. நவியம் என்ற கருவியையும் போரில் பயன்படுத்தியதற்கான சான்றுகளில்லை.

காப்புக்கருவிகள் தற்காப்புக் கருவிகள், அரண்காப்புக் கருவிகள் என இருவகைப்படும். அரணம், கவசம், கேடயம் ஆகிய தற்காப்புக் கருவிகள் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன.

அரணம் என்பது காலணியையும், உடல் முழுவதும் மறைக்கும் கவசத்தைக் குறிக்கும். இ∴து இரும்பால் செய்யப்பெற்றதாகத் தெரிகிறது.

புலித்தோலை இணைத்துக் கவசம் செய்து கொண்டமை இலக்கியங்களின் வழி தெரியவருகின்றது. குறிப்பாக போர்க்காலத்தில் கவசம் பயன்பெற்றுள்ளது.

கேடயம் 'தோல்' என்றும், 'பலகை' என்றும் குறிக்கப்பெறும். போரின்போது எதிரியிடமிருந்து பாதுகாக்கக் கேடயம் பயன்படுத்தப்பெற்றது. அப்பாதுகாப்பையும் தாண்டி கணைகள் பாய்ந்ததற்கான செய்திகள் இலக்கியங்களில் கிடைக்கின்றன. யானைத் தோலில் செய்யப்பட்ட கேடயமே தோல் என்று அழைக்கப்பெற்றது. பலகை என்பது உலர்ந்த மரத்தால் வேலைப் பாடுடன் செய்யப்பெற்றதாகும். அக்காலத்தில் போர் முறைக்குக் கேடயம் சிறந்த கருவியாகும்.

ஏழு, சீப்பு, ஐயவி போன்றவை அரண்காப்புக் கருவியாகும். குறிப்பாக வாயில் காப்புக் கருவிகள் எனலாம். எழுவினை இலக்கியம் கணையமரம் என்று குறிப்பிடும். கதவின் உள்வாயிற் படியில் தடுப்பு மரமாக எழு விளங்குகிறது. நிலத்திலிருந்து கோட்டைக் கதவின் உச்சிவரை உயர்ந்து நிற்கும் மரம் கணையமரமாகும். சீப்பு என்பது கதவின் தாழைக் குறிக்கும். உள்வாயிலில் கதவுக்கு வலிமையாக நிலத்தே இடும் மரம் ஆகும். ஆகவே நிலம் தோய அமைக்கப்பட்ட தாழ்ப்பாள் சீப்பு ஆகும் என்பது விளங்கும்.

போர்க் கருவிகளில் போர்க்கள இசைக்கருவிகள், வீரக்கழல், அடிபுதை அரணம் ஆகியன கருதத்தக்கன. முரசு, தண்ணுமை, போர்ப்பறை முதலிய போர்க்கருவிகளும், வளை, வயிர் ஆகிய ஊது கருவிகளும் குறிக்கத்தகுந்த போர்க்கள இசைக்கருவிகளாகும். முரசு காளையின் தோலால் செய்யப்பெற்றதாகும். இது போரில் முன்னேறிச் செல்வதற்கும், வீரரை ஏவுவதற்கும் முழங்கப்பெற்றது. மேலும், போரை அறிவிக்கவும், படை வீரர்களுக்கு விதிமுறை தெரிவிக்கவும், போர் வெற்றியைக் கொண்டாடவும் முழங்கப்பெற்றுள்ளது.

போர்த் தொடக்கத்தைப் போர்ப்பறை அறிவிக்கும். காஞ்சிப் பூக்கொள்வதற்கும், வீரரை ஏவுவதற்கும் தண்ணுமைப் பறை முழங்கப்பெற்றுள்ளது.

முரசுடன் இசைக்கப்பெறும ஊதுகருவி வளையும், வயிரும் ஆகும். வளை என்பது சங்கைக் குறிக்கும். வயிர் என்பது எக்காளம் அல்லது ஊதுகொம்பைக் குறிக்கும். போரின் தொடக்கம் மற்றும் இறுதியை சங்கின் முழக்கத்தால் தெரிவிப்பர்.

வயிர் இசைப்பர் வயிரியர், வயிரியமாக்கள் என அழைக்கப்பெற்றனர். தற்காலத்தில் போர்க்காலங்களில் உலோகத்தால் இயன்ற ஊதுகொம்பைப் பயன்படுத்துவது இங்கு இணைத்துக் கருதத்தக்கது.

வீரர்க்குரிய அணிகலன்களில் ஒன்றாக வீரக்கழல் விளங்குகிறது. வெற்றிபெற்ற அரசர்கள் தோல்வியுற்ற மன்னனின் பொன் முடியைத் தம் கழலாகச் செய்து அணிந்தமை கருதத்தக்கது. இக்கழல் வேலைப்பாடு மிக்கதாகச் செய்து கொள்ளப்பெற்றுள்ளது. தற்கால வீரர்கள் காலில் அணியும் கணுக்கால் பட்டி என்பதற்கு ஈடாகக் கழலைக் கருத வாய்ப்புண்டு.

படைவீரரின் அடிமுழுதும் மறையுமாறு அமையும் காலணி அடிபுதை அரணமாகும். இது செருப்பினின்றும் வேறுபட்டது.

தேர்மீது நின்று போர் புரியும் வீரனுக்கு வில்லும், அம்பும் பொருத்தமான படைக்கலன்கள் எனினும் வாள் பயிற்சியிலும் அவர்கள் சிறந்து விளங்குவார்கள். இக்காலத்தில் பல படைவகையினருக்கும் துப்பாக்கிப் பயிற்சி அடிப்படையாக இருப்பது போல அக்காலத்தில் எல்லாப்படை வீரர்களுக்கும் வாள் பயிற்சி அளிக்கப்பெற்றதாகத் தெரிகிறது.

அக்காலத்தில் வாணிகம் உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் என இரண்டு வகைகளில் சிறந்து விளங்கியது. உள்நாட்டு வாணிகத்தில் போக்குவரத்து சாதனங்களாக வண்டி, எருமை, கழுதை ஆகியன பயன்படுத்தப்பெற்றன.

மாட்டுவண்டிகள் போக முடியாத இடத்திற்கு சுமைகள் ஏற்றிச்செல்லக் கழுதையைப் பயன்படுத்தினர்.

உள்நாட்டு வாணிபத்தில் படகு குறிப்பிடதகுந்ததாகும். உள்நாட்டு வாணிபத்தில் பண்டமாற்றில் விளைபொருளுக்கு விளைபொருளே மாற்றிக் கொள்ளப்பெற்றதோடு வேறு பொருள்களையும் மாற்றியிருக்கின்றனர். வெளிநாட்டு வாணிபத்தில் யவனர்கள் பொன்னைக்கொடுத்துப் பண்ட மாற்றாக மிளகை எடுத்துச் சென்றனர்.

காவிரிப் பூம்பட்டினத்தில் குதிரை, மிளகு, மணி, பொன், அகில், முத்து, ஆரம், துகில் ஆகியவை ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களாக விளங்கியுள்ளன. கடற்கரைத் துறைமுகங்களில் கலங்கரை விளக்கம் இடம் பெற்றமை கருதத்தக்கதாகும். பண்டக சாலையில் சோழ மன்னனின் புலி முத்திரை இடம்பெற்ற பண்டங்கள்தான் வெளியேற முடியும் என்று பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. இதனால் புலி முத்திரைக் கருவி இருந்தமை தெளிவாகும். பண்டைத் தமிழகத்தில் நாளங்காடியும், அல்லங்காடியும் இருந்தன. அங்காடிகளில் விற்பனைப் பொருளுக்குக் கொடி நாட்டப்பெற்றமை இங்கு கருதத்தக்கது.

பண்டைத் தமிழர் பலவகைக் கலைகளிலும் சிறந்திருந்ததற்கான சான்றுகள் இருந்தாலும் அக்கலைஞர்களுக்குரிய புழங்குபொருள்கள் பற்றிய செய்திகள் விரிவாகக் கிடைக்கவில்லை.

# சான்றெண் விளக்கம்

1. சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், பக். 6-7.
2. தமிழ் இலெக்சிகன், தொகுதி நான்கு, ப.2100.
3. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.36.
4. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி ஐந்து, ப.342.
5. தற்காலத் தமிழ் அகராதி, ப.360.
6. தமிழ் இலெக்சிகன், தொகுதி நான்கு, பகுதி ஒன்று, ப. 2203.
7. பெரும்பாணாற்றுப்படை, நச்சர் (வி.உ.), ப.63.
8. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, முதல் பாகம், ப.1099.
9. செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி, ப.188.
10. தமிழ் இலெக்சிகன், தொகுதி மூன்று, பகுதி ஒன்று, ப.936.
11. மது. பா. 93.
12. தமிழ் இலெக்சிகன், தொகுதி நான்கு, பகுதி ஒன்று, ப.2001.
13. குறுந்தொகை, பெருமழைப்புலவர் உரை, ப.583.
14. தமிழ் இலெக்சிகன், தொகுதி இரண்டு, பகுதி ஒன்று, ப.1041.
15. குறுந்தொகை, உ.வே.சா.(வி.உ.), ப.542.
16. தஞ்சைவாணன் கோவை.
17. தமிழ் இலெக்சிகன், தொகுதி மூன்று, பகுதி ஒன்று, ப.1723.
18. குறிஞ்சிப்பாட்டு, நச்சர் (வி.உ.), ப.487.
19. தமிழ் இலெக்சிகன், தொகுதி மூன்று, பகுதி ஒன்று, ப.1796.
20. குறிஞ்சிப்பாட்டு, நச்சர் (வி.உ.), ப.487.
21. தற்காலத் தமிழ்ப் பெயரகராதி, ப. 967.
22. மேலது.

23. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, முதல் பாகம், ப.39.

24. ஆர். ஆளவந்தார், தமிழர் தோற்கருவிகள், ப. 76.

25. புறநானூறு, ஔவை துரைச்சாமிப்பிள்ளை (வி.உ.) ப.450.

26. கே.வி. இராமன், தொல்லியல் ஆய்வுகள், ப.28.

27. கே. பகவதி, தமிழர் ஆடைகள், ப. 341.

28. புறம் : 206 : 11.

29. பெருஞ்சொல்லகராதி, தொகுதி மூன்று, ப. 448.

30. புறம் : 170 : 15-16.

31. பெரும் : 436 - 437, புறம் : 180 : 12-13.

32. அகம் : 202 : 6.

33. அகம் : 96 : 3-4.

34. புறம் : 37 : 5.

35. பெரும் : 142 - 144.

36. குறு. 198 : 1-4, பெரும். 206-208.

37. கதிர்வேற்பிள்ளை : 1981 : 98.

38. புறம் : 170 : 14-17.

39. கதிர்வேற் பிள்ளை, 1981 : 935.

40. குறு : 12:2-3.

41. நற் : 153 : 2.

42. அ. இராகவன், தமிழ்நாட்டு அணிகலன், ப.100.

43. அகம் : 334:1, புறம்: 308:2, மது : 310, பரி. 21:3.

44. புறம் : 324 : 3-7.

45. அகம் : 30:1, 70:3.

46. நற் : 49:3, 111:1-3, அகம் : 60:2.

47. தற்காலத்தமிழ் பேரகராதி, ப. 572.

48. அகம் : 36:2, பெரும் 286.

49. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை (வி.உ.) குறுந்தொகை ப.251.

50. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி ஐந்து, ப.955.

51. குறு. 304.

52. தமிழ்ப் பெருஞ்சொல் அகராதி, ப. 312.

53. அகம் . 70 :1, 64:11, குறு. 304:4, 123:5, அகம். 60: 3.

அகம். 240:5, 340:8, நற் : 331:6-8, 388:4, கலி : 149:1.

54. நற் : 74:1-4.

55. குறு. 29:2, நற்: 308.9.

56. குறு : 278:1.

57. குறு. 48.1-2.

58. மேலது, 195 : 6-7.

59. அகம். 392.

60. மேலது.

61. குறு. 292 : 3-4.

62. பத்துப்பாட்டு, நச்சர் (வி.உ), ப.413.

63. அகம். 348:1-10.

64. நற். 90:2-4, குறு : 330: 1-3.

65. ஞா.தேவநேயன், பழந்தமிழராட்சி, ப.104.

66. தற்காலத்தில் தமிழ்ப் பேரகராதி, ப.967.

67. தற்காலத்தில் தமிழ்ப் பேரகராதி. ப.967.

68. பிங்கல நிகண்டு, பா. 1535, 1536, ப. 225.

69. ந.சி.க.செ.அ., ப.284.

70. அகம். 89:10, 119:9.

71. பதி. 68:3, 81:4.

72. புறம் : 205:9, 257:10.

73. அகம். 215:10, கலி. 12:2, புறம் 43:11.

74. பெரும். 219, பட்.266.

75. மலை. 422, புறம் : 23:5.

76. நற்:164.6, அகம்: 159:5, 167:9, 179:7.

77. அகம். 44.9, 82:11, 281:5, புறம். 369:8, கலி. 7:6, 104:58, 15:1.

78. சேந்தன் திவாகரம், ப.138.

79. பிங்கல நிகண்டு, 1539.

80. புறநானூறு, ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை (வி.உ.) ப.117.

81. பெரும். 70, நற்.228:8, புறம் : 263:7, கலி:39:2, பெரும். 93.

82. புறம் : 43:10-11.

83. அகம். 9.3, 225:10-11.

84. குறு. 1:2

85. மலை:421, அகம். 69:15, புறம் : 63:1, புறம்.181:4-5, மது. 57, பதி. 20:19.

86. சேந்தன்திவாகரம், ப.138, பிங்கல நிகண்டு, பா.1573.

87. ந.சி.க.செ.அ., ப.20.

88. சிறு. 52.

89. முல்லை : 34.

90. மது. 65-67.

91. கலி. 135:3.

92. மது. 739, மலை. 129, நெடு.176, புறம்.354:2, மலை:490, பதி. 19:4.

93. புறம். 274:3.

94. புறம், 302 : 8-9.

95. புறம். 25:4, 308:8, 325:5-7.

96. புறம் 312:5.

97. புறம். 195 : 4 - 5.

98. ந.சி. கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.404.

99. புறம். 23: 8-9, 36.6-10.

100. திவாகரமுனிவர், சேந்தன் திவாகரம், ப.141.

101. தங்க கந்தசாமி, போரியல் அன்றும் இன்றும், ப.165.

102. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, (வி.உ.), பதிற்றுப்பத்து, ப.246.

103. உ.வே. சாமிநாதய்யர், (வி.உ.) புறநானூறு, ப.

104. ஔவை. சு. துரைச்சாமிப்பிள்ளை, (வி.உ.), புறநானூறு, ப.37.

105. புறம், 63:5-6, 311:7, 97:16, 4:5.

106. Subramaian . V.I. Index of Puranaanuru, P.155.

107. புறம். 14.2, 90:9, 98:4, 341:4, பதி. 45:10

108. ந.சி.க.செ.அ.பக். 290 ரு 138.

109. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை (வி.உ.), புறநானூறு, ப.209.

110. பதிற்றுப்பத்து, ப.168.

111. பட். 28 - 30, நற் . 254 : 6.

112. அகம் 340 : 14-15.

113. அகம் 61 : 8 - 10.

மனித குலத்தின் மேன்மைக்குச் சமூகத்தின் வளர்ச்சி குறிப்பிடத்தகுந்த காரணியாகும். சமூகத்தின் பல கூறுகளுள் சமயமும் ஒன்று. அச்சமயம் காலந்தோறும் வளர்ச்சிகளையும் மலர்ச்சிகளையும் பெற்று இன்றுள்ள நிலையை எய்தியிருக்கிறது. சமயத்தில் இறைவன் மையப் பொருளாக விளங்குகிறான். இறைவனை மையமிட்டுச் சமுதாய மதிப்புக்கள் (அ) விழுமியங்கள் (Values) போற்றப்பெறுகின்றன. சமயத்தின் ஏற்றத்திற்கான பல கூறுகளுள் வழிபாட்டுமுறை மற்றும் சடங்குமுறைகள் சிறப்பிடம் பெறுகின்றன. சமயப்பண்பாட்டிற்குள் வழிபாட்டு மரபுகளும், சடங்கு மரபுகளும் அடங்கும். சமயம் மற்றும் சடங்கு முறைகள் சார்ந்த புழங்கு பொருட்கள் பண்டைத் தமிழரிடம் இடம்பெற்றிருந்ததை சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. இந்நிலையை மதிப்பிடுவதாக இவ்வியல் அமைகிறது.

## சமுதாயத்தின் தோற்றம்

மனித இனம் தோன்றிய காலத்திலேயே சமய உணர்வும் தோற்றம் பெற்றதாகக் கூறுவர். சமயத்தைப் பின்பற்றச் சிற்சில வேளைகளில் மனிதன் தயங்கினாலும் முற்றிலும் விடுபட்டு வாழ்தல் இயலாத காரியம் என்று மதிப்பிடலாம். சமயம் மனித வாழ்விற்கு உயிர்நாடியாக விளங்குகிறது. "சமுதாயத்தின் வழியாக அவன் அடைய முயலும் உட்பொருளாவது (Reality) சத்தியத்தோடு தொடர்புடையதாகும். சமயம் வாழ்விற்கு மட்டும் பேரின்பமன்று, மனத்திற்கும் ஆனந்தமளிப்பது. அமைதியின் நித்திய பூரமென்றும் தைத்திரிய உபநிடதம் (1:6) குறிப்பிடுகிறது.

"சத்யாத்ம ப்ராணாநாமம் மன ஆனந்தம்
சாந்தி அம்ருதம்"[1]

“மேனாட்டு மொழிகளில் சமயம் என்பதற்கு நேராக வழங்கும் ரிலீஜன் (Religion) என்ற சொல் இரு பொருளில் வழங்கப்பெறுகிறது. ஒன்று குறி சொல்வது. அதாவது இறைவன் திருவுள்ளத்தை அறிவதற்குச் சில நிகழ்ச்சிகளையும், காட்சிகளையும் அடையாளமாகக் கொள்வது என்ற பொருள். மற்றொன்று, இறைவனோடு ஒன்றுபடுத்துவது அல்லது மீண்டும் பிணைப்பது என்பதாகும். நெறி அல்லது வழி என்ற பொருளிலும் பல சமயங்கள் கருதப்பட்டு வந்துள்ளன. தமிழ் நூல்களிலும் திருநெறி, செந்நெறி என்ற ஆட்சிகள் உண்டு.”[2]

வாழ்வின் முழுமைக்கும் சமயம் முக்கியப் பங்கு வகிக்கிறது. சமயம் குறித்த விளக்கத்திற்கு அறிஞர்கள் அவரவர் துறையைச் சார்ந்து விளக்கம் தருவர். எடுத்துக்காட்டாக உளவியல் அறிஞர் சிக்மன் பிராய்டு குறிப்பிடுவதைக் காணலாம். இவர் அச்சத்தின் காரணமாக சமயம் தோன்றியது என்று குறிப்பிடுவர்.

ஹேவல்லாக் எல்லிஸ் (Havelock Ellis) என்பவர் உலகத்தோடு தன்னை இணைத்துக் கொள்ளும் உள்ளுணர்வே சமய உணர்வு என்று கூறுவார். எட்வர்டு பர்னெட் டைலர் (Edward Burnet Tylor), பிரட்ரிக் மாக்ஸ் முல்லர் (Frededrich Maxmuller), வில்கெல்ஹம் ஸ்மித் (Wilhelm schmidt) ஆகியோர் அறிவியல் அணுகுமுறையில் சமயத்தைச் சிந்தித்துள்ளனர். சமய ஞானிகள் சமயத்திற்கு வேறு வகை விளக்கம் தருவர். உலகத்தின் நிலையற்ற தன்மையில் கலந்து கொள்ளாமல் தனித்துப் பற்றற்று நின்றால்தான் பரம்பொருளின் தன்மையைத் தனதாக்கிக்கொண்டு அதன் தத்துவ நிலைபேற்றில் தானும் ஒன்றி நிலைத்து நிற்கமுடியும் என்று பிளாட்டோ குறிப்பிடுகிறார்.

"சமயம் என்பதன் பொதுப்படையான கொள்கைகளை ஹெர்பர்ட் பிரபு (Lord Herbert of Cherbury) என்பவர் பின்வருமாறு தொகுத்துக் கூறுகிறார்.

1. உயர்வற உயர்ந்த ஒரு பொருள் உண்டு என்ற நம்பிக்கை. இப்பொருள் எல்லாவற்றிற்கும் முதற் காரணமாயிருப்பது, வரம்பில்லா ஆற்றல் உடைமை போன்ற பதினொரு பண்புகளை உடையது.

2. இந்தப் பொருளை வழிபடுவது மனிதன் கடமை.

3. அறமும் அன்பும் இவ்வழிபாட்டின் முதன்மையான கூறுகள்.

4. இப்பொருளுக்கு எதிராகச் செய்யும் பாவத்திற்கு மனம் வருந்தித் தகுந்த ஈடுசெய்ய வேண்டும்.

5. இவ்வுலகம் அற ஒழுங்குக்கு உட்பட்டதாகையால் மக்கள் தங்கள் செயல்களுக்கேற்ற பலன்களை அடைவார்கள்"[3]

சமயத்தில் இறைப்பண்பை மையமிட்ட அறமதிப்புக்கள் பிற்காலத்தில் அறிவியல் துறையாக மலர்ச்சிபெற்றது. "அறத்தின் அடிப்படைகளாக விளங்கும் செயல்களின் பொறுப்பு, ஏற்கும் ஆன்மாக்களின் இருப்பு, காலத்தின் கட்டுப்பாட்டுத் தன்மை, தீமையின் இருப்பு ஆகியவை சமயம் அளித்துள்ள தத்துவங்கள் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். சமயத் தத்துவங்கள் அறவொழுக்கத்தை மேலும் சிறப்பானதாக்குகின்றன. அறத்தின் நன்மை, தீமை போன்ற கருத்துக்கள் சமயத்தில் பல நிலைகளில் விளக்கப்பட்டு உறுதிப்படுத்தப்படுகின்றன. எனவே, சமயத்திலிருந்து தான் அறம் வளர்ந்திருக்கவேண்டும் என்பது புலனாகிறது"[4]

உலகியல் வாழ்க்கையைச் செம்மையாக வாழச் சமயம் துணைநிற்கிறது என்பதில் ஐயமில்லை! சமயங்களின் துணைகொண்டுதான் உலகியல் வாழ்க்கையை வெற்றிகாண இயலும். அறக்கடமைகளையும் செய்து இறைவனுடன் இரண்டறக் கலப்பதே சமயம் என்று அறிஞர்கள் சிந்திக்க வைக்கின்றனர். சமயம் வாழ்க்கையின் நோக்கம் ஆகும். சமயத்தில் சமயக்கோட்பாடு மட்டும் போற்றப்பெறவில்லை. வாழ்வியல் விழுமியங்களும் சடங்குகளும் போற்றப்படுகின்றன. விஞ்ஞானிகளும் மெய்ஞானிகளும் இருவேறு துருவங்கள். வாழ்வில் விஞ்ஞானத்தையும் மெய்ஞானத்தையும் சமமாகக் கொள்வதன் வாயிலாக மனிதன் வெற்றிகாண முடியும்.

## இந்து சமயம்

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே - அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே - அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே"[5]

என்று பாரதியார் பாடுவார். முந்தையர் தந்த எண்ணங்களில் இந்து சமயமும் ஒன்று. சமயத்தின் வளர்ச்சியில் சமுதாயம் மேன்மை அடைந்திருக்கின்றது. பலதுறைகளுக்கு ஆதாரமாகச் சமயம் விளங்குவதால் தொன்மைக்கும் பெருமைக்கும் சமயம் சான்றாகத் திகழ்கிறது.

இந்து சமயத்தின் 'இந்து' என்ற சொல் பழங்காலச் சமஸ்கிருத நூல்களிலும் பிற நூல்களிலும் கையாளப் பெறவில்லை. எனினும் யவனர், பாரசீகத்தினர், மேலை நாட்டினர்களால் கையாளப்பெற்றதாகக் கருதலாம். 'இந்து' என்னும் சொல் சிந்துநதி பாயும் நாட்டைக் குறித்துப் பிற்காலத்தில் மக்களைக் குறிப்பதாயிற்று. ஈரானியர் 'ஸ' வை 'ஹ' என்று உச்சரிப்பவர்கள் அவர்கள்தான். இனம் என்ற பொருளில் 'ஹிந்து' என்ற சொல்லையும் 'இந்தியா' என்ற சொல்லையும் கையாண்டனர். சிந்து சமவெளி நாகரிகச் சமுதாயத்தில் நிலவிய சமூகம் திராவிடச் சமூகமாகும். ஆரியர்களின் வருகைக்குப் பின் பண்பாட்டுக் கலப்பு உருவாகி 'இந்து சமயம்' உருவாகியது. அச்சமயம் காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை பரவியிருப்பதாக மதிப்பிடலாம். வேதங்கள், புராணங்கள் ஆகியவற்றின் செல்வாக்கால் மேலும், இந்து சமயம் வளர்ந்தது. மொழியில் வேறுபட்டிருந்தாலும் வழிபாட்டு முறையாலும் சடங்கு முறையாலும் இந்தியா முழுமைக்கும் ஆன்மீக ஒருமைப்பாடு நிலவுவதாக அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர்.

## தமிழர் சமயம்

பண்டைத் தமிழகத்தில் சமயம் சிறப்பாக விளங்கியது. "ஒவ்வொரு தேசிய இனத்தின் வாழ்விலும் வரலாற்றிலும் சமயம் முக்கியமான ஓர் இடத்தைப் பெற்றிருக்கிறது. இந்திய நாகரிகத்தின் உயிர்நாடியாக இருப்பது அதனுடைய சமயச் சிந்தனையாகும். தொல்பழங்காலம் முதற்கொண்டு அந்நாட்டில் வளர்ந்துவரும் பல்வேறு இனத்தைச் சார்ந்த மக்களின் எண்ணங்களும் சிந்தனைகளும் ஒன்றாக இணைந்ததன் விளைவாகத் தோன்றியதே இன்றைய இந்து சமயம் எனில் அது மிகையாகாது."[6] அவ்வகையில் இந்தியச் சமயமான இந்து சமயத்தில் குழுச்சமயங்களின் தனித்தன்மையும் தேசிய சமயத்தின் பொதுத்தன்மையும் நிறைந்திருக்கக் காணலாம். சமயத்தின் வளர்ச்சியில் குழுச்சமயங்கள் பல இணைந்து தேசிய சமயம் உருவான நிலையில் இந்து சமயம் உருவெடுத்ததாகக் கொள்ளலாம்.

இந்து சமயத்தின் தெய்வங்களான முருகன், சிவன், திருமால், கொற்றவை ஆகியோர் திராவிடச் சமயத்திற்கும் உரியவர். அதாவது தமிழ்ச் சமயத்திற்கும் உரியவர். சிந்து சமவெளி நாகரிக காலத்திலேயே சிவன், திருமால் வழிபாடு இடம்பெற்றமைக்கான சான்றுகளை அறிஞர்கள் சுட்டுகின்றனர். சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என்று ஹிராஸ் பாதிரியார் போன்ற அறிஞர்கள் சுட்டியுள்ளமை கருதத்தக்கதாகும். திராவிட நாகரிகத்தின் மையமாக விளங்குவது தமிழ் நாகரிகம் என்ற கருத்தும் அறிஞர்களிடையே பரவலாக உண்டு.

தமிழ் இலக்கண நூல்களில் தொல்காப்பியம் பழமையானதாகும். அந்நூலில் திணைகளை மையமிட்டுத் தெய்வங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. இதனை,

மாயோன்மேய காடுறை உலகமும்
சேயோன்மேய மைவரை உலகமும்
வேந்தன்மேய தீம்புனல் உலகமும்
வருணன்மேய பெருமணல் உலகமும் (தொல். 951)

எனக்குறிப்பிடுவார்.

முதல் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற பகுப்பில் கருப்பொருளில் தெய்வம் பற்றிய சிந்தனையை முன்வைக்கிறார்.

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப (தொல். 964)

மேலும், கீழ்க்கண்ட குறிப்புகள் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக் கொள்ளும் (தொல்: . 993)

கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே (தொல்: 1034)

வழிபடு தெய்வம் நிற்புறங்காப்ப (தொல்: . 1367)

சங்க இலக்கியங்களில் இறைவனின் இருப்பிடமாகிய கோயில்கள் குறித்தும், கோட்டம் குறித்தும், தெய்வம் குறித்தும், வழிபாடு குறித்தும் பல மெய்ம்மைகள் பதிவாகியுள்ளன. கோ + இல் என்பதே பின்னைய வழக்கில் கோயில் ஆயிற்று என்பர். துவக்கத்தில் மன்னர் வாழும் இடத்தைக் குறித்துப் பிற்காலத்தில் தெய்வங்கள் தங்கும் இடத்தைக் குறிப்பதாயிற்று. புறநானூற்றில் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் இந்திரன் இருப்பிடத்தை, 'வச்சிரத் தடக்கை நெடியோன் கோயில்' (புறம் : 241 : 3) என்பார். ஆய் என்ற வள்ளலின் அரண்மனையை 'கோயில்' என்று குறிப்பிட்ட மோசியார் இந்திரன் இருப்பிடத்தையும் கோயில் என்றார். பரிபாடலில்,

'அரும் பொகுட்டனைத்தே அண்ணல் கோயில் (பதி : 32 : 2)

என்று மதுரையிலுள்ள அண்ணல் கோயில் குறிக்கப்படுவதை காணலாம்.

பண்டைத் தமிழகத்தில் சுடுமண்ணோங்கிய நெடுநிலைக்கோட்டம் குறிப்பிடுவதிலிருந்து 'கோட்டம்' என்ற சொல்லாட்சி கோயிலுக்கு இணையாகக் கையாளப்பெற்றதை அறியலாம்.

பண்டைத் தமிழகத்தில் நீர்நிலைகளைச் சார்ந்தும் மரங்களைச் சார்ந்தும் திருக்கோயில்கள் வளம் பெற்றிருக்கின்றன. பண்டைக்காலத்தில்

ஆலமரத்தடியில் கோயில்கள் இருந்திருக்கின்றன. இதனை, ‘ஆல்கெழு கடவுள்’ எனத் திருமுருகாற்றுப்படை (256) குறிப்பிடும். ‘ஆலயம்’ என்ற சொல் சங்க நூல்களில் வழக்குப்பெற்றதாகத் தெரியவில்லை.

‘நகரம்’ என்ற சொல் கோயிலைக் குறித்ததைப் புறநானூற்றின் வழி அறியலாம். இதனை,

நெடுநகர் வினைபுனை நல்லில் (புறம் : 23 : 9-10)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் தோன்றிய முதல் நிகண்டான திவாகரம் கோயிலோடு தொடர்புடைய பெயர்களைத் தொகுத்துக் கூறுகின்றது.

சினகரம் சேதிமம் தேவ ராலயம்
நிலயம்பாழி பள்ளி நிகேதனம்
மந்திரம் ஆலயம் தேவகுலம் கோட்டம்
நகர்தளி வானவ ருறையுள் கோயில் (5 : 14)

பண்டைத் தமிழகத்திலிருந்த கோயில்கள் குறித்த சொற்களையெல்லாம் இந்நூல் தொகுத்துக் கூறுகின்றது. அவ்வகையில் காலப்போக்கில் ஊரின் நடுவேயும், கிராமங்களிலும் திருக்கோயில்கள் அமைக்கும் பழக்கம் உருவாகியதாகக் கருதலாம்.

சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும் (225) என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடும். அதாவது சிற்றூர்களின் நடுவில் நாற்சந்தியில் கோயில் அமைக்கப்பெற்று வழிபாடு நிகழ்த்தப்பெற்றது தெரியவருகிறது.

சிவபெருமானைப் பற்றிப் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய நூல்களில் அமைந்துள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சுட்டுகின்றன. பரிபாடலில் திருமால், முருகன் பற்றிய செய்திகள் எடுத்துரைக்கப்பெறுகின்றன. திருமுருகாற்றுப்படை முருகனை மையமிட்டதாகும். மேலும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகைகளில் பல கடவுளைப் பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன. இச்செய்திகளிலிருந்து பண்டைக் காலத்துத் தெய்வக் கோட்பாட்டை ஓரளவு உணரலாம். கடவுள்களுக்குத் திருவுருவம் அமைத்து வழிபாடு நிகழ்த்தினர். வேதங்கள், புராணங்கள் ஆகியவைகளோடு தொடர்பு படுத்திக் கடவுளர்களுக்குரிய புழங்குபொருட்களும் கடவுள் வழிபாட்டில் தொடர்பு பெற்றன. தமிழ்ச் சமுதாயத்தில் தமிழர் சமயம் சிறப்பிடம் பெற்றதைச் சங்க இலக்கியங்கள் நன்கு பதிவு செய்துள்ளன.

சமயம் சார்ந்த புழங்கு பொருட்களை எடுத்துரைப்பதற்கு முன் சமயத்தின் தோற்றம், இந்தியச் சமயம், தமிழ்ச் சமயம் என்ற பகுப்பில் மேலே அறிமுகச் செய்திகள் தொகுத்தளிக்கப்பெற்றன. அடுத்துச் சடங்குகள் குறித்தவிளக்கங்களைக் காணலாம்.

## சடங்குகள்

சடங்கு “சாஸ்திர விதி பற்றியும் வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரிகை”[7] என்று தமிழ் இலெக்சிகன் குறிப்பிடும். அம்முறையில் சடங்கு என்பது சாஸ்திர விதி மற்றும் வழக்கம் பற்றியும் இருப்பதைக் காணலாம். சாஸ்திரவிதி மற்றும் வழக்கம் தொடர்பான கிரிகைகள் இறைவனை மையமிட்டு அமையும் போது வழிபாடு எனக்கூறலாம்.

கடவுள் நம்பிக்கையுடையோர் கடவுளை ஆண்டவனாகவும் தம்மை அடிமையாகவும் கருதி அக்கடவுளுக்குத் தமது நன்றியைப் புலப்படுத்தும் முகமாகச் செய்யும் தொழுகையே வழிபாடு என்று குறிப்பிடுவர். இக்கருத்திலிருந்து இறைவனைத் தொழுதல் வழிபாட்டோடு தொடர்புடையது எனக்கூறலாம். மேலும், "கடவுள் வழிபாடு என்பது ஒரு பயிற்சி முறை உண்மையான வழிபாடு என்பது சடங்குகள் மட்டுமன்று கடவுள் நெறியில் தம்மை வழிப்படுத்திக் கொள்ளுதலாகும்"[8] என்று கூறுகிறார். சமயத்தின் வழிபாடு குறித்து வேதநெறி, ஆகமநெறி போன்றவைகள் நெறிப்படுத்துகின்றன.

மனித வாழ்வில் நம்பிக்கையை மையமிட்டுச் சடங்குகள் பல தொடர்பு பெறுகின்றன. "மனிதன் கரு உயிர்ப்பது முதல் இறப்பது வரை பல கட்டங்களைக் கடக்கிறான். ஒவ்வொரு கட்டத்தில் புகும்போதும் அந்த நிகழ்ச்சியைக் குறிப்பதற்காகவும் அதன் சிறப்பையும் பண்பையும் பலனையும் நினைவூட்டுவதற்காகவும் சில சிறப்புச் செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு மக்கள் இனத்தாரும் விதிகள் உண்டாக்கியிருக்கிறார்கள்"[9] இந்த விதிகள் வழக்கமாகவும். தர்ம சாத்திர நூல்களின் வழியாகவும் கூறப்பெறும். ஐம்பத்திரண்டு சடங்குகளைக் கலைக்களஞ்சியம் சுட்டுகின்றது. அவற்றுள் முக்கியமானவை என்று கூறப்பெறுவன.

| | | |
|---|---|---|
| 1. கர்ப்பாதானம் | 2. பும்சவனம் | 3. சீமந்தோந்நயனம் |
| 4. ஜாதகர்மம் | 5. நாமகரணம் | 6. அன்னப்பிராசனம் |
| 7. சூடாகரணம் | 8. கருணவேதம் | 9. வித்தியாரம்பம் |
| 10. உபநயனம் | 11. சமாவர்த்தனம் | 12. விவாகம் |

என்பனவாகும்.

ஒருசெயல் நன்மை விளைவிக்கின்றது என்று மக்கள் உணரும் நிலையில் அது பழக்கமாக மாறுகிறது. காலப்போக்கில் அறிவியல் கல்வி காரணமாகச் சமுதாயத்தில் முன்னேற்றம் ஏற்படும்போது அதுசடங்காக மட்டும் இருக்கிறது என்று குறிப்பிடுவர். மேலும், சடங்குகள் மக்களின் பண்பாட்டுக் கூறுகளாக விளங்குகின்றன. "சடங்கென்பது நிர்ணயிக்கப்பட்ட விரிவான நடத்தைகளின் வடிவமாகும். இது தனி மனிதனின் சுயமான ஆக்கமாகவோ பண்பாட்டினுடைய தனிச்சிறப்புக் கூறாகவோ அமையும். பண்பாட்டின் ஏனைய அம்சங்கள் இன்றிச் சடங்குகளிலேயே வெவ்வேறு நாகரிகங்களின் நம்பிக்கைகளும் இலட்சியங்களும் மிகத்தெளிவாக வெளிப்படுத்தப்படுகின்றன''[10] என்று சடங்குகளின் இன்றியமையாமையைப் பற்றிக் குறிப்பிடுவர்.

சடங்குகள் பலவகைப்படும். வாழ்வியல் சடங்குகள், தொழில் சடங்குகள் என வகைப்படுத்திப் பார்க்கலாம். வாழ்வியல் சடங்குகளில் பிறப்பு முதல் இறப்பு வரை உள்ளவைகளைக் குறிப்பிடலாம்.

## வகைநிலை

சமயம், சடங்குகள் குறித்த அறிமுக விளக்கங்கள் மேலே எடுத்துரைக்கப்பெற்றன. சமயம் சடங்குமுறை சார்ந்த புழங்குபொருட்களைக் கீழ்க்கண்ட வகையில் பகுத்துக் காணலாம்.

1. சமயம் சார்ந்த புழங்கு பொருட்கள்
2. சடங்குகள் சார்ந்த புழங்கு பொருட்கள்

## சமயம் சார்ந்த புழங்கு பொருட்கள்

சமயத்தில் இறைவன் மையப்பொருளாக விளங்குகிறான். இறைவன் எழுந்தருளியுள்ள இடம் திருக்கோயிலாகும். இறைவனோடும் திருக்கோயிலோடும் புழங்கு பொருட்கள் தொடர்பு பெற்றிருக்கின்றன. இறைவனின் தோற்றம் குறித்துத் தொல்பழங்கதைகள் பலவாறாக உள்ளன. புராணங்கள் பல உள்ளன. இறைவன் திருவுருவ அமைதிக்குச் சிற்ப சாத்திரங்கள், ஆகமங்கள் பல நெறிப்படுத்துகின்றன. மக்களால் உருவாக்கப்பெற்ற இறைவன் பண்பாட்டு மதிப்புகளுடன் தொடர்புடைய நிலையும் கருத்திற்குரியதாகும். எனவே, வரையறுக்கப்பெற்ற சூழலில் கீழ்க்கண்ட பகுப்பு நிலையை மையமிட்டுச் சமயம் சார்ந்த புழங்கு பொருட்கள் ஆராயப்பெற இருக்கின்றன.

1. இறைவனோடு தொடர்புடையவை
2. வழிபாட்டுடன் தொடர்புடையவை

## 1. இறைவனோடு தொடர்புடையவை

இப்பகுதியில் இறைவனுக்குரிய ஆடை, ஆபரணம், கருவிகள், கொடி, ஊர்தி ஆகியவை கருத்தில் கொள்ளப்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களில் சிவன், திருமால், இந்திரன், முருகன், கொற்றவை போன்ற தெய்வங்கள் குறித்த செய்திகள் பதிவாகியுள்ளன. அச்செய்திகளில் திருவுருவங்களை மையமிட்டுச் சிலவே அமைகின்றன. சில செய்திகளை எடுத்துக்காட்டின் வழி அறியலாம்.

### சிவன்

சிவன் எந்நிலத்திற்குரிய தெய்வமாகவும் சுட்டப்பெறவில்லை. பிற்காலத்தில் தோன்றிய பக்தி இலக்கிய காலத்தில் சிவனின் செல்வாக்கு எழுகிறது. ‘சிவன்’ என்ற சொல்லாட்சி சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பெறவில்லை.

‘முக்கண்ணன்’ (கலி : 2 : 4)

முக்கட் செல்வர்’ (புறம் : 6 : 18)

நீலமணிமிடற்று ஒருவன் (புறம் : 91 : 6)

கறைமிடற்று அண்ணல் (புறம் : 55 : 4)

போன்ற தொடர்கள் சிவன் மூன்று கண்களை உடையவன், நீலமணிமிடற்றைப் பெற்றவன் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன.

‘புதுத்திங்கள் கண்ணி’ (கலி :150 : 17)

‘பிறைநுதல்விளங்கும் ஒருகண்போல’ (புறம் : 55 : 5)

போன்றவற்றால் பிறையைச் சூடியவன் என்ற செய்தி கிடைக்கிறது.

‘அவிர்சடை’ (புறம் : 56 : 1)

‘நீள்நிமிர் சடை’ (புறம் : 166 : 1)

என்பவற்றின் வழி சிவன் நீண்ட சடைகளைப் பெற்றவன் என்று கூறப்பெறுவதைக் காணலாம். சிவனுக்கு எட்டுத்திருக்கைகள் என்ற குறிப்பு கலித்தொகை வழி கிடைக்கிறது. பொதுவாக இச்செய்திகள் சிவனோடு தொடர்புடைய திருவுருவ அமைதியை எடுத்துரைப்பதாகக் கருதலாம்.

## ஆடை

சிவபெருமானுக்குரிய ஆடை தோலாடையாகும். இதனை,

கொலை யுழுவைத் தோலசை இயும் (கலி : 1 : 11)

வரிகிளர் வயமான் உரிவை தை இயும் (அகம் : 1 : 14)

என்ற அடிகள் சுட்டுகின்றன. இவ்வடிகளிலிருந்து சிவன் மான்தோலை ஆடையாக அணிந்தவன் என்பதை உணரலாம்.

## கருவிகள்

இறைவனோடு தொடர்புடைய கருவிகள் இறைவனுக்குரிய புழங்கு பொருளாகக் கருத்தில் கொள்ளலாம். இவ்வகைப் புழங்கு பொருள்கள் தொன்மைக்காலக் கதைகளிலிருந்தும், சாத்திரச் செய்திகளிலிருந்தும் உருவாக்கம் பெற்றிருக்கலாம். இந்நிலை தனித்த ஆய்விற்குரியது. இவ்வாய்வில் இறைவன் பயன்படுத்தும் புழங்கு பொருள்கள் மட்டுமே கருத்தில் கொள்ளப்பெறுவதால் கதை விளக்கங்கள், காரணகாரிய விளக்கங்கள் எடுத்துரைக்கப்பெறவில்லை.

மாற்றருங் கணிச்சி மணி மிடற்றோன்" (புறம் : 56 : 2)
மழுவா ணெடியோன் றலைவனாக (மது : 455)
சீறருங் கணிச்சியோன் (கலி 1 : 6)

மேற்குறித்தவற்றில் கணிச்சி, மழு என்கிற கருவிகள் குறிக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தில் கணிச்சி, மழு, முத்தலைச் சூலம் ஆகியவற்றைப் பெருந்தேவனார் குறித்துச் செல்வதை இங்கு ஒப்பிட்டு நோக்கலாம். பொதுவாகச் சங்க காலத்தில் சிவ வழிபாடு சிறப்பிக்கப்பெறவில்லை.

## கொடியும் ஊர்தியும்

சிவபெருமானுக்குரிய கொடியை 'ஏற்றுவலனுயரிய' (புறம் : 36 : 1) என்று பாடுகிறார் நக்கீரர். 'ஆனேற்றுக் கொடியோன்' (கலி : 26 : 5) என்பார், பாலை பாடிய பெருங்கடுங்கோ. திருமுருகாற்றுப்படை 'வெள்ளேறு வலவயினுயரிய செல்வன்' (151) என்று போற்றும். இச்செய்திகளின் வழி சிவன் ஆனேற்றுக் கொடியை உடையவன் என்பது பெறப்பெறும். மேலும், ஆசிரியர் நல்லந்துவனார் 'புங்கவ மூர்வோனும்' (பரி : 8 : 2) என்று குறிப்பிடுவார். 'உருவேறூர்தி யான்' (கலி : 150 : 5) என்று இலக்கியங்கள் சுட்டுவதால் சிவனுக்குரிய ஊர்தி விடை என்பது விளங்கும்.

## திருமால்

பிரம்மன், திருமால், சிவன் ஆகியோர் மும்மூர்த்திகள் என்று குறிக்கப்பெறுவர். பிரம்மனை மையமிட்ட வழிபாடு பிற்காலத்தில் செல்வாக்குப்பெறவில்லை. திருமால் வழிபாடு வேதத்தைப் போன்ற பழமையான வழிபாடாகும். புராணங்கள், இதிகாசங்கள் திருமாலை வெகுவாக எடுத்துரைக்கின்றன. கண்ணன் அவதாரம் குறித்த செய்திகள் கருதத்தக்கவை. தமிழில் முல்லைநிலத் தெய்வமாகத் திருமால் போற்றப்பெறுகின்றார். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் விஷ்ணு, விட்டுணு என்ற பெயர் வழக்குப்பெறவில்லை. மால், மாயோன் என்ற பெயர்கள் இலக்கிய வழக்குப் பெற்றுள்ளன.

திருமால் கழுவப்பெற்ற அழகிய நீலமணி போன்ற திருமேனியை உடையவன் என்றும், கடல் போன்ற நிறத்தை உடையவன் என்றும் குறிக்கப்பெறுகிறான். மேலும் 'கழுத்தில் நறுமணம் வீசும் பூங்கொத்துக்களையுடைய துளவ மாலையையும் அணிந்திருப்பவன்' (பதி : 31 : 7-91) என்றும் சுட்டப்பெறுகிறான். இச்செய்திகளிலிருந்து கருமை நிறமுடையவன். பூங்கொத்துக்களால் ஆகிய துளவ மாலையை அணிந்தவர் என்பது விளங்கும்.

ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டவன் என்கிற குறிப்பையும் திருவுருவத்துடன் தொடர்புப் படுத்திப் பார்க்கலாம்.

## ஆடையும் கருவிகளும்

திருமால் பொன்னாடையை அணிந்திருப்பான். இதனை,

'பொன்புனை யுடுக்கை யோன்' (15 : 28) என்று பரிபாடல் சுட்டுகின்றது.

திருமால் தன்னுடைய கைகளில் சங்கையும் சக்கரத்தையும் தாங்கியிருக்கிறார். மார்பில் திருமகளைத் தாங்கியிருக்கின்றார் என்கிற செய்திகள் முல்லைப்பாட்டில் எடுத்துரைக்கப்பெறுகின்றன. மேலும்,

"நீனிற வுருவி னேமி யோன்" (புறம் : 58 : 15)

என்ற அடிகளில் சக்கரம் என்கிற கருவி சுட்டப்பெறுவதைக் காணலாம். பரிபாடலில் திருமால் வளைந்த கலப்பை, தண்டு, சங்கு, சக்கரம், வில், அம்பு, பாரவளை, வாள் ஆகியவற்றை (பரி : 15 : 57-61) ஏந்தியிருப்பதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

## கொடியும் ஊர்தியும்

திருமால் கருடக்கொடியை உடையவன் என்பதை,

விண்ணுயர் புட்கொடிவிறல்வெய் யோன் (புறம் : 56 : 5 - 6)

சேவலங் கொடியோய் (பரி : 1 : 11)

என்பது சுட்டும். மேலும்,

சேவ லூர்தியஞ் செங்கண் மாஅல்" (பரி. 3 : 60)

என்பது கருடன் ஊர்தியாகத் திகழ்ந்தமையைச் சுட்டும். சிந்துவெளி நாகரிக காலத்திலேயே கருடச் சின்னம் இடம்பெற்றதை அறிஞர்கள் எடுத்துரைப்பது கருதற்குரியதாகும். பிற்காலப் புராண வளர்ச்சியில் கருட புராணம் விரிவாகத் தோன்றிய நிலையும் கருத்திற்குரியது. சங்க இலக்கியங்களில் ஆரியக் கலப்பு நிகழ்ந்ததால் இத்தகைய கொடிகள் பற்றிய செய்திகள் இடம்பெற வாய்ப்புண்டு.

## சேயோன்

குறிஞ்சி நிலத்தெய்வம் முருகன் ஆவான். சங்க நூல்களில் பல இடங்களில் 'முருகு' என்னும் சொல் முருகனைக் குறித்து வந்துள்ளது. எனினும் 'முருகன்' என்ற சொல்,

'அணங்குடை முருகன் கோட்டத்து" (புறம் : 299 : 6)

என்றும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

## திருவுருவ அமைதி

சங்கப்பாடல்களில் குறிப்பாகத் திருமுருகாற்றுப்படை திருவுருவம் பற்றிய செய்தியைச் சுட்டுகின்றது. இதில் ஆறுமுகங்களும் முழுத்திங்கள் போல் விளங்க, அவன் காதில் அணிந்துள்ள மகர குண்டலங்களோ, முழுமதியைச் சூழ்ந்து நிற்கும் விண்மீன்கள் போல விளங்குகின்றன. மேலும், அவன் தலையில் பலவகை ஒளிமிக்க மணிகள் இழைத்த முடியோ மேலும் அழகு செய்கிறது என்று அவனுடைய முகத்தோற்றமும் கிரீடமும் வருணிக்கப்படுகிறது. முகத்தை அடுத்துப் பன்னிரு கைகள், அவற்றின் செயல்கள், கைகளில் உள்ள ஆயுதங்கள் ஆகியன பற்றியும் குறிப்பிடப்படுகின்றது. பன்னிரு கைகளுள் தோட்டி, பரிசை, வேற்படை, மணி ஆகிய நான்கு கைகளில் இடம்பெற்ற கருவிகள் மட்டும் சுட்டப்பெற்றுள்ளன. மற்றவை வெவ்வேறு தொழில்களைச் செய்கின்றதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

## ஆடை

வெண்மை ஆடை முருகனுக்கு அணியப்பட்டாலும் செந்துகில் தான் இவனுக்கு ஏற்புடையது என்று மக்கள் கருதினர் எனத் தோன்றுகிறது. ஏனெனில்,

"வேல்வலானுடைய தாழ்ந்த விளக்கு வெண்துகில் ஏய்ப்ப

வாலிது கிளர்ந்த வெண்காற் சேயும்" (மு.கலி : 105 : 18)

என்பது விளக்கும்.

## கொடி

'சேவற் கொடியோன்' (குறு : 1 : 5) என்று முருகன் சுட்டப்பெறுகின்றான். மேலும் சூரர மகளிர் முருகனைப் புகழ்ந்து பாடுகின்ற பொழுது,

"கோழியோக்கிய வென்றடு விறற்கொடி

வாழிய பெரிது" (திரு. 38 - 39)

என்று வாழ்த்துவர். இதிலிருந்து முருகனுடைய கொடி கோழிக்கொடி என்பது புலனாகும்.

## இந்திரன்

தொல்காப்பியம் இந்திரனை மருதநிலக் கடவுளாகக் குறிப்பிடுகின்றது. எட்டுத்தொகை நூல்களில் இந்திரன் குறித்த செய்திகள் சில இடங்களிலேயே காணப்படுகின்றன.

திருவுருவமைதி குறித்த விரிவான செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. ஆனால்,

"............................ ஒண்டொடி

வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்" (புறம் :241 : 2-3)

என்பதில் தொடியணிந்தவன், வச்சிராயுதத்தை ஏந்தியவன் என்கிற குறிப்புகள் பதிவாகியுள்ளன.

"இந்திரன் ஆயிரம் கண்களை உடையவன், நூறு யாகங்களை நடத்தியவன், நிறைந்த செல்வத்திற்கு அதிபதி, ஐராவதம் என்ற யானையின்மேல் ஏறிவருபவன்" [11] என்றெல்லாம் கூறப்பெறுவதால் இவன் யானையை ஊர்தியாகக் கொண்டவன் என்பதும் விளங்கும்.

## வருணன்

தொல்காப்பியம் வருணனைக் கடல் சார்ந்த நெய்தல் நிலப்பகுதியின் கடவுளாகக் குறிப்பிடுகின்றது. சங்க நூல்களில் இவனைப் பற்றிய செய்திகள் இல்லை. ஆனால், பட்டினப்பாலையில் பரதவர் சினைச்சுறவின் கோட்டை நட்டு வணங்குவதாகக் குறிப்பு உள்ளது. ஆனால், இதில் குறிக்கப்பெறும் தெய்வம் வருணன் இல்லை.

## கொற்றவை

பண்டைக் காலத்தில் நானிலத் தெய்வங்களேயன்றித் தாய்த்தெய்வ வழிபாடு இருந்ததைத் தொல்காப்பியம் சுட்டுகின்றது. வெட்சித்திணைக்குரிய இலக்கணம் கூறுகின்ற பொழுது அதன் துறைகளுள் ஒன்றாகக் கொற்றவை நிலை குறிக்கப்பெறுகின்றது. இதனை,

"மறங்கடை கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே" (தொல் : :1005)

என்று சுட்டும். தொல்காப்பியம் பாலைக்குத் தெய்வம் சுட்டவில்லை. பிற்காலத்து இலக்கண நூலார் கொற்றவையைப் பாலைக்குத் தெய்வமாகக் குறிப்பிடுவர்.

சங்க இலக்கியங்களில் கொற்றவை 'கானமர் செல்வி' (அகம் : 345 : 4) என்றும், முருகனின் தாயாகவும், முக்கண்ணனின் ஒரு பாகத்தே விளங்குபவளாகவும் குறிப்பிடப்பெற்றுள்ளாள். ஆனால், இவ்விடங்களில் திருவுருவம் பற்றிய செய்திகள் குறிக்கப்பெறவில்லை.

## பிறதெய்வங்கள்

திருமகளைப் பற்றிய செய்தி சங்க இலக்கியங்களில் மூவிடங்களில் (நெடு : 89, பட் : 29, கலி. 44, 6 - 7) குறிப்பிடப்பெற்றுள்ளது. என்றாலும் உருவம் பற்றியோ பிற செய்திகளோ குறிக்கப்பெறவில்லை

பிற தெய்வங்களாகிய நான்முகன், பலராமன் பற்றிய செய்திகள் இடம்பெற்றிருந்தாலும் புழங்கு பொருள் குறித்த விரிவான சிந்தனைகள் இடம்பெறவில்லை.

## 2. வழிபாட்டுடன் தொடர்புடையவை

தெய்வ வழிபாட்டு மரபில் பல புழங்கு பொருட்கள் தொடர்பு பெற்றிருக்கலாம். எனினும் அவை இலக்கியங்களில் சிற்சில குறிப்புக்களாகவே பதிவாகியுள்ளன.

## நடுகல் வழிபாடு

'நடுகல்' என்பதற்கு நடப்பட்ட கல் எனப்பொருள்படும். இதனை, 'நட்டபோலும் நடா அநெடுங்கல்' (அகம் : 269 : 7) என்று அகநானூறு குறிப்பிடும். போர்க்களத்தில் இறந்துபட்டவர்க்கு நடுகல் நட்டு வழிபாடு செய்யும்முறை பண்டைத் தமிழரிடம் இருந்தது. 'நடுகல்' என்கிற சமயம் சார்ந்த புழங்குபொருள் இங்குக்

கருத்திற்குரியதாகும். வீரயுகத்தில் தோன்றிய இவ்வழக்கம் காலப்போக்கில் சமுதாய மதிப்புப்பெற்ற சான்றோர்க்கும் தொடர்புறுவதாயிற்று. " வீரர்கள் போர்க்குச் செல்லும் பொழுது நடுகற்களை வாழ்த்திப்பலி கொடுத்துச்சென்றமை அக்கால நடுகல் நம்பிக்கையினைப் புலப்படுத்தும். இங்கு வீரர்கள் நடுகல்லில் அடங்கியுள்ள ஆவியின் துணைபெற்றுச் செல்வதே அந்நம்பிக்கையாகும். இவ்வழிபாட்டின் எச்சத்தைக் கல்நாட்டுதல் என்னும் சாவுச் சடங்கில் காணமுடிகின்றது"[12] என்று குறிப்பிடுவார்.

நடுகல் வழிபாட்டில் முன்னோர் வழிபாடு, தென்புலத்தார் வழிபாடு போன்றவைகள் பிற்காலத்தில் ஒன்றாக இணைந்தமையை அறிஞர்கள் சுட்டுவார்கள். தொல்காப்பியத்தில்,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தென்று
இருமூன்று மரபிற் கல்லொடு புணர" (தொல். பொருள் :63:9-21)

எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. நடுகல்லில் பெயரும் பீடும் எழுதி வழிபட்டமையை இக்குறிப்புக்களிலிருந்து உணரலாம்.

"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வில்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ் சுரம்" (அகம் : 35:6-10)

என்ற பாடலில் நடுகல் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளது. மறவர்க்கு நடுகல்நட்ட செய்தியும் வழிபட்ட மரபும் இப்பாடலில் விரிவாகச் சுட்டப்பெற்றுள்ளன.

செம்மறியாட்டுக் குட்டியினைப் பலியிட்டு, நெல்லாற் சமைத்த கள்ளோடு படையல் அளித்ததை உணரலாம். பீலி சூட்டுதல் வழிபாட்டில் இடம்பெற்றிருக்கின்றது. இக்குறிப்புப் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

நடுகல் வழிபாட்டில் துடி என்கிற இசைக்கருவி முழங்கப் பெற்றிருக்கின்றது. இக்குறிப்புக்கள் இக்காலத்திலிருக்கும் சிறு தெய்வ வழிபாட்டோடு ஒத்திருக்கக்காணலாம். இறந்த வீரன் பயன்படுத்திய போர்க்கருவிகளை நடுகல்லிற்கு அருகிலேயே வைத்து வழிபட்டிருக்கின்றனர்.

நெல்லும் மலரும் தூவி நடுகல்நட்டு வழிபட்டமையைப் பல சான்றுகளின் வழி அறிய முடிகின்றது.

## விழாக்காலப் பொருள்கள்

தெய்வ வழிபாட்டு மரபில் விழாவும், நம்பிக்கையும் குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெறுகின்றன. சிற்றூர்களிலும் பேரூர்களிலும் விழாக்கள் சிறப்பாக இடம்பெற்றிருந்தன. நல்ல நாளும், நல்ல கோள்களும் கூடிவரும் நேரத்தில் விழாக்கள் நடைபெற்றன. எடுத்துக்காட்டாக கார்த்திகைத் தீபவிழா முழுமதிநாளில் தொடங்கியதை,

“மழைகால் நீங்கிய மாக விசும்பிற்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன்சேரு மகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுட னயர” (அகம் : 141:6-11)

என்று அகப்பாடல் குறிப்பிடும்.

அன்றைய திருவாதிரை நாளில் அந்தணர் விழவு தொடங்கியதை,

"ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை
விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப" (பரி : 11 : 76 - 79)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவ்விழாக்களில் ஆரியச் செல்வாக்கு இடம் பெற்றதை உணரலாம். விழா வழிபாட்டு மரபில் கொடியேற்றுதல் குறிப்பிடத்தகுந்த மரபாகும். விழாத் தொடக்கத்தில் கொடியேற்றி விழா நாட்கள் வரை அவிழ்க்காது பாதுகாத்தல் குறிப்பிடத்தாகும். மதுரைக் காஞ்சியில்,

'சாறயர்ந் தெடுத்த உருவப் பல்கொடி' (மது.66)

என்று குறிக்கப்பெறுகின்றது. இங்கு கொடி என்கிற வழிபாட்டுப் புழங்கு பொருள் கருத்திற்குரியதாகும்.

விழாவில் முழவு, யாழ், முரசு, குழல் ஆகிய இசைக்கருவிகள் முழக்கப்பெற்றன. இதனைப் பின்வரும் சான்றுகளின் வழி அறியலாம்.

"முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கண்
கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும் (அகம் : 222 : 4-5)
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து" (பட் : 156 - 158)

ஆகவே, வழிபாட்டு மரபில் இசைக்கருவிகள் புழங்கு பொருளாகப் பயன்பட்டதை உணரலாம்.

விழாவிற்கென்று மக்கள் தழையுடையினையும், பல அணிகளையும் அணிந்து வந்திருக்கின்றனர். விழா நாட்களில் வாணிபம் சிறந்திருக்கின்றது. குருதியோடு கலந்த அரிசியும், தினையும் மலரும் தூவி வழிபட்டிருக்கின்றனர். இதனை,

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிக ளார்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலு மகன்றலை மன்றத்து
விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்" (நற் :293 :1-4)

என்னும் அடிகள் சுட்டும்.

புனலாடும் விழா சங்கத் தமிழகத்தில் சிறப்புப் பெற்றிருந்தது. அப்போது பொன்னாலாகிய சங்கு, நண்டு, இறகு, வாளை ஆகியவற்றைப் புதுப்புனலில் இட்டு பெண்டிர் விளையவும் பொலியவும் வேண்டியமை சங்கப்பாடல்களில் பதிவாகியுள்ளன. இவைகளைப் வழிபாட்டிற்குரிய புழங்குபொருள்களாகக் கருதலாம்.

பண்டைத் தமிழகத்தில் கார்த்திகை விழாச் சிறப்பாக் கொண்டாடப் பெற்றதை அறியலாம். இதனை,

"................ அகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கி" (அகம் : 141 : 8-6)

என்ற அடிகள் சுட்டும். விழாவில் விளக்குகள் ஏற்றி வைப்பதே சிறப்பாகக் கருதப்பெற்றிருக்கின்றது. விளக்கு என்கிற வழிபாட்டுப் புழங்குபொருள் இங்கு குறிக்கப்பெறுவதைக் காணலாம்.

## வெறியாட்டு

வெறியாட்டு என்பது பழந்தமிழரின் தனித்த வழிபாடாகும். மனிதனால் செய்யப்பெறுகின்ற இச்சடங்கில் குறத்தியும், வேலனும் இடம்பெறுகின்றனர். இச்சடங்கில் குறத்தி குறிசொல்கின்றாள். இதில் முறத்தில் பிடிநெல்லை இட்டுக் குறிபார்ப்பதை,

> "நன்னுதற் பரந்த பசலைக்கண் டன்ன
> செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
> கட்டிற் கேட்கு மாயின் " (நற் : 288 : 5-7)

என்ற அடிகள் சுட்டும். இவ்வகையில் இது முருகனால் வந்தது எனக் குறத்தி குறிப்பிடுவாள். பின் வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்துவர்.

வேலன் வெறியாடும் பொழுது பனந்தோட்டினை கடப்பமலலோடு சூடி, கழற்காயை மெய்யில் அணிந்துகொண்ட செய்திகளைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.

இவ்வெறியாட்டின்போது ஆட்டின் கழுத்தை அறுத்து, தினையையுடைய பிரம்பை வைத்து வழிபட்டதை,

> 'மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇ' (குறு : 263 : 1)

என்பது சுட்டும். மேலும், 'சிறிய தினை அரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாக வைத்து மறியை அறுத்து' என்று திருமுருகாற்றுப்படையும் சுட்டுகின்றது. இக்குறிப்புகளிலிருந்து வெறியாட்டுச் சடங்கில் தெய்வத்திற்கு மறிப்பலி கொடுப்பதும், தினையையுடைய பிரம்பு, தினையரிசி, பூக்கள் ஆகிய பொருட்கள் பயன்படுத்தப் பெற்றதையும் அறியலாம்.

திருமுருகாற்றுப்படை இவ்வெறியாட்டு நிகழ்ச்சியைப் பின்வருமாறு விளக்கிக் கூறுகின்றது. "குறமகள் முருக வழிபாட்டுக்குரிய இடத்தைத் தூய்மையாக்கி, அங்கு முருகற்குரிய கோழிக்கொடியை நாட்டினாள், அக்கொடி மீது நெய்யோடு வெண்சிறு கடுகை அப்பினாள், அழகிய மலர்களை அக்கொடிமீது தூவினாள், வெள்ளிய பொரியைத்தூவினாள், ஆட்டுக்கிடாயின் குருதியோடு பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறுபலியாக இட்டாள், பல பிரம்புகளை வைத்தாள், சிறிய பசிய மஞ்சளோடு நறிய சந்தனம் முதலியவற்றைத் தெளித்தாள். பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும் பிற குளிர்ந்த மணமிக்க மாலைகளையும் அசையத்தொங்கவிட்டாள், சேவற்கொடிக்கு நறிய தூபங்காட்டினாள், குறமகள் சிவந்த நிறமுடைய பல பூக்களையும் தூவிக் குருதியளைந்த சிவந்த தினையைப் பரப்பினாள், முருகன் உவக்கும் வாச்சியங்களை வாசிக்கப் பண்ணினாள் மனமுருகி வழிபட்டாள்."[13] என்று குறிப்பிடும்.

இதிலிருந்து முருக வழிபாட்டில் நெய், வெண்சிறுகடுகு, பொரி, குருதிதோய்ந்த அரிசி, பிரம்பு, மஞ்சள், சந்தனம், செவ்வலரி மாலை, மலர்கள், தூபம், குருதி தோய்ந்த தினை, வாச்சியங்கள் ஆகிய புழங்கு பொருட்களைப் பயன்படுத்தியமையை அறியலாம்.

## 2. சடங்குகள் சார்ந்த புழங்கு பொருள்கள்

சமயத்தில் சடங்குகளுக்குச் சிறப்பான இடமுண்டு. சடங்குகளின் தோற்றம் விரிவான ஆய்விற்குரியவை. தோற்றத்தில் சடங்குகள் விரிவான பொருள்களைக் கொண்டதாக இருந்திருக்கலாம். காலப்போக்கில் சடங்குகளின் உட்பிரிவை உணராமல் பின்பற்றத் தொடங்கியுள்ளனர். சடங்குகள் குறித்த செய்திகளைப் பின்வருமாறு வகைப்படுத்திக் காணலாம்.

1. வாழ்வியல் சடங்குகள்

2. தொழில் சடங்குகள்

## 1. வாழ்வியல் சடங்குகள்

மனித வாழ்வியல் சூழலில் பிறப்பிலிருந்து இறப்புவரை பல சடங்குகள் தொடர்புபெற்றுள்ளன. சமயத்தின் பெயராலும், இறைநம்பிக்கையின் பெயராலும் இவ்வகைச் சடங்குகள் நடைபெற்றிருக்கின்றன.

பண்டைத் தமிழகத்தில் இடம்பெற்ற வாழ்வியல் தொடர்பான சடங்குகளைப் பின்வருமாறு பகுத்துக்கொள்ளலாம்.

1. பிறப்புச்சடங்கு
2. தாலிகளைதல்
3. மடலேறுதல்
4. சிலம்பு கழிநோன்பு
5. திருமண சடங்கு
6. இறப்புச் சடங்கு

## பிறப்புச் சடங்கு

பண்டைத்தமிழர் மக்கள் பேற்றை உயர்ந்ததாக, சிறப்புடையதாகக் கருதினர். இதனால் குழந்தை பிறப்பிற்கு முன்பும், குழந்தை பிறந்த பின்பும் பல்வேறு சடங்குகளைச் செய்தனர். குழந்தை பெற்ற வீட்டில் 'ஐயவி' என்ற வெண்சிறு கடுகைப் பூசியும், தாய் நெற்பூசி நீராடிச் சடங்கு மேற்கொண்டதனை நற்றிணை,

"கடும்புடைக் கடுஞ்சூழ் நஞ்குடிக் குதவி
நெய்யோ டிமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வனை மீன்றெனப் பெயர் பெயர்த்து" (நற் : 370)

எனக் கூறுகிறது.

மன்னர்கள் பிறந்தநாள் கொண்டாடியதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. தொல்காப்பியர் பாடாண்திணையில்,

"சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்" (தொல். பொருள் :88:7-8)

எனப் பிறந்த நாளைப் பெருமங்கலம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.

மதுரைக்காஞ்சி நன்னனின் பிறந்தநாளைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடும்.

"மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள்
சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு" (மது : 615 - 619)

இதிலிருந்து விழாவில் குரவைக் கூத்துக்கள் நிகழ்த்தப் பெற்றமை தெரியவருகிறது. பிறந்தநாள் விழாவிற்கு வெள்ளணி விழா என்ற பெயரும் உண்டு. வெள்ளணி என்பது வெண்மையான ஆடை அணிவதாகக் கொள்ளலாம்.

## தாலிகளைதல்

பருவத்திற்குத் தகுந்த அணிகலன்கள் அணிவதைப் பண்டைத் தமிழர் மேற்கொண்டிருந்தனர். தம் குழந்தைகளுக்குப் 'புலிப்பல் தாலி' அணிவித்திருக்கின்றனர். இளஞ்சிறார்க்கு வீரத்தின் அறிகுறியாகவோ அல்லது ஆற்றலை அதிகரிக்கும் காப்பணியாகவோ முதலில் புலிப்பல் தாலியைப் பயன்படுத்தியிருக்கலாம். புலிப்பல்தாலி அணியும் வழக்கம் பண்டைய குறிஞ்சிநில மக்களாகிய கானவரிடையே நிலவியுள்ளது. இதனை,

'நின்னோடு வினவில் கேளாய் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி' (அகம் : 17:17-18)

'..... ......... ........... ........ அதன்றலைப்
புலிப்பல் தாலிப் புதல்வர்ப் புல்லி' (நற் : 361 : 3 - 4)

என்றப் பாடல்களின் அடிகள் சுட்டும். இதிலிருந்து நம்பிக்கையுடன் தொடர்புடையதாக புலிப்பல்தாலி அணிவித்தமையை அறியலாம்.

## மடலேறுதல்

பண்டைத் தமிழகத்தில் அகப்பொருள் சிறப்பாகப் போற்றப்பெற்றது. காதல் கொண்டவன் தன்னை வருத்திக் கொள்வதன் வாயிலாகப் பிறருக்குப் புலப்படுத்த வேண்டி மடலேறுவதை மேற்கொண்டுள்ளான். தொல்காப்பியர் இதனைப் பெருந்திணை என்று குறிப்பிடுவார். குறிஞ்சி மற்றும் நெய்தல் பாடல்களில் மடலேறுதல் இடம்பெற்றுள்ளது.

பனைமடலால் ஆக்கப்பெற்ற குதிரை ஊர்தியில் தலைவன் ஏறும்நிலை இடம்பெற்றிருக்கின்றது. அக்காலத்தில் இது இழிந்த செயலாகவும் கருதப்பெற்றுள்ளது. இம்மடலேறுதலுக்கு உ.வே.சா. அவர்கள் கீழ்க்கண்டவாறு விளக்கம் தருவர். "காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப் போல் ஓர் உருவம் அமைத்து அதன் கழுத்தில் மணி, மாலை, முதலியவற்றைப் பூட்டித்தன் உருவத்தையும் தலைவியின் உருவத்தையும் ஒரு படத்தில் எழுதிக் கையிலேந்தி அதன்மேல் யாவரும் அறிய ஊர்ந்து வருதலை மடலேறுதல் என்பர். அங்ஙனம் அவன் வருவதைக் கண்ட ஊரினர் பட முதலியவற்றால் 'இன்னவளுக்கும் இவனுக்கும் நட்பு உண்டு' என்பதை அறிந்து அதனை வெளிப்படக்கூறிப் பழிப்பர். அதுகேட்டுத் தமர் மணம் புரிவிப்பர். மடலேறும் தலைவன் நீறு, எருக்கமாலை, ஆவிரம்பூ மாலை முதலியவற்றை அணிந்து வருதல் வழக்கமென்று தெரிகின்றது"[14] எனச் சுட்டுகின்றார். இதிலிருந்து பண்டைக்காலத்தில் மடலால் ஆகிய குதிரை காதல்விருப்பத்தைப் பிறருக்குப் புலப்படுத்தும் புழங்கு பொருளாக விளங்கியமையையும், காதலால் சாவின் வாயிலில் நிற்பதால் இப்பூக்களை அவன் சூடியிருக்கலாம் என்பதையும் அறியமுடிகின்றது.

## சிலம்புகழி நோன்பு

திருமணத்துடன் தொடர்புடையதாகச் சிலம்புகழி நோன்பு அமைகிறது. திருமணம் ஆவதற்கு முன்பு இளம்பெண்கள் முடிவான பிறகும் திருமண வாழ்விற்கு முன்னரும் ஒரு நன்னாளில் அச்சிறு சிலம்பினை நீக்கும் விழா மணமகள் இல்லத்தில் நடைபெறும். இதனைச் 'சிலம்புகழி நோன்பு' என்பர். இச்சிலம்பு கழிநோன்பு குறித்து இலக்கியங்கள் சுட்டுகின்றன.

சிலம்பு கழித்தலாகிய வினைமுறை மணவினைக்கண் நிகழ்த்தப்பெறும் சடங்குமுறையென நற்றிணைக்கு உரைவரைந்த பின்னத்தூர் நாராணயசாமி ஐயர்

குறிப்பிடுவார். இவ்வகையில திருமணத்திற்கு முன்பு நிகழ்த்தப்பெற்ற சடங்கே சிலம்புகழி நோன்பு எனலாம். இதனை,

"செல்வழிச் செல்வுழி மெய்ந்நிழற் போலக்
கோதை ஆயமோ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்ப அவள்
ஆடுவழி யாடுவழி அகலோன் மன்னே" (அகம் : 49 : 15-18)

என்பது சுட்டும். இவற்றிலிருந்து சிலம்பு கழிநோன்பு பண்டைக்கால மக்களிடம் வழக்கிலிருந்த சடங்கு முறை என்பது விளங்கும். இவ்வகைச் சடங்கில் சிலம்பு என்னும் அணிகலன் புழுங்கு பொருளாகத் திகழ்வதைக் காணலாம்.

## திருமணச் சடங்கு

வாழ்வியலில் திருமணம் புனிதச் சடங்காகக் கருதப்படுகிறது. திருமணம் என்பதே மனிதனுக்காக மனிதனால் நடத்தப்பெறும் சடங்குமுறையாகும். நல்ல காலத்தையும் பொழுதையும் கணித்துப் பண்டைத் தமிழர் திருமணத்தை மேற்கொண்டுள்ளனர். வேங்கை மலரும் இளவேனிற் காலத்தைத் திருமணத்திற்குரிய காலமாகக் கருதியிருக்கின்றனர். மேலும், வளர்பிறை நாட்களிலும் திருமணம் நடத்தியிருக்கின்றனர். தொல்காப்பியர் திருமணத்தைக் கரணம் என்று சுட்டிக்காட்டியிருக்கின்றார். மணப்பந்தலில் விளக்கேற்றும்பழக்கத்தைக் கொண்டிருந்தனர். இதனை,

"மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலை" (அகம் : 86 : 4 - 5)

என்ற அடிகள் சுட்டும். கடவுள் வழிபாட்டினை ஆற்றிய பின்னரே மணவினையாற்றியுள்ளனர் என்பதை,

"சகட மண்டிய துகள்தீர் கூட்டத்துக்கு

கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்

படுமண முழவொடு பருஉப்பணை இமிழ" (அகம் :136 : 5-7)

என்ற அகநானூற்றுப் பாடல் சுட்டும். மேற்கண்ட அடிகளிலிருந்து திருமணத்தில் முரசு ஒலிக்கும் பழக்கம் இருந்தமையையும் அறியமுடிகின்றது.

பண்டைக்காலத்தில் திருமண முறை குறித்து அகநானூறும், கலித்தொகையும் சுட்டுகின்றன. திருமண நாளிற்கு முன்பு வீட்டின் முற்றத்தில வெண்மணல் பரப்பி, பந்தல் அமைத்துத் தோரணங்களைக் கட்டினர். மணமுழவுகள் முழங்கின. திருவிளக்குச் சுடருடன் ஒளிர்ந்தது. கடவுளைப் போற்றி வழிபட்டனர். வயது முதிர்ந்த மங்கல மகளிர் தண்ணீரைக் குடங்களில் முகந்து தம் தலையின் மேல் தூக்கிக் கொண்டு வந்து 'சிறுமண்டை' என்னும் அகன்ற வாயுடைய கலத்தில்பெய்து கொடுப்பர். குழந்தைகளைப் பெற்றெடுத்தமங்கல மகளிர் நால்வர் கூடி அத்தண்ணீரை வாங்கி, அதில் பூவிதழ்களையும், நெல்மணிகளையும் சொரிந்து அத்தண்ணீரினால் மணமகளை நீராட்டுவார்கள். இச்சடங்குக்கு 'வதுவை நன்மணம்' என்று பெயர். அப்போது அப்பெண்டிர் 'கணவனால் என்றும் விரும்பப்படும் மனைவியாக இருப்பாயாக' என்று வாழ்த்தினர்.

உளுந்தம் பருப்புடன் கலந்த அரிசிப்பொங்கல் மணவிழாவுக்கு வந்தவர்களுக்கு இடையறாது வழங்கப்பெறும் (அகம்: 86) இறைச்சியும், நெய்யும் கூட்டி ஆக்கிய வெண்சோற்றையும் வழங்குவதுண்டு என்று திருமணச் சடங்கை அகநானூறு சுட்டும்.

'பூவலூட்டிய இல்லின் முற்றத்தில் திரையிட்டு தருமணல் தாழப்பெய்து எருமைப்பேட்டின் கோடு நட்டு வழிபடப்பட்டு ஆயமகளின் திருமணம் நடைபெறும்' என்று கலித்தொகை முல்லை நிலத்திருமணமுறையைக் குறிப்பிடுகின்றது. இவ்வகையில் எருமைப்பேட்டின் கொம்பு நட்டுச் செய்யும் திருமணமுறை கலித்தொகை தவிர வேறெந்த நூல்களிலும் காணப்படாதது குறிப்பிடத்தக்கது.

மேற்குறித்த செய்திகளிலிருந்து திருமணச் சடங்கில் விளக்குப் பயன்படுத்தப் பெறுதல் தெளிவாகிறது. முழவு என்னும் இசைக்கருவி முழங்கப் பெற்றிருக்கின்றது.

*சிறுமண்டை எண்ணும் அகன்ற வாயுடைய பாத்திரம் நீராட்டுவதற்குப்* பயன்படுத்தப்பெற்றுள்ளது. முல்லைநிலத்து மகளிர் எருமைக் கொம்பை நட்டுத் திருமண நிகழ்வைத் தொடங்கியுள்ளனர். இக்கொம்பைப் புனிதப் பொருளாகக் கருதியுள்ளனர்.

## இறப்புச் சடங்கு

பண்டைத் தமிழரின் இறப்புச் சடங்குகளைப் பண்டை இலக்கியங்கள் மிகுதியும் சுட்டுகின்றன. கணவனை இழந்த மகளிரது நிலையைத் 'தபுதாரநிலை' என்றும் தொல்காப்பியர் புறத்திணையியலில் குறிப்பிடுகின்றார். பெருங்கோப்பெண்டு இறந்ததற்காக வருந்திப் பாடிய மாக்கோதையின் பாடல் தாபத நிலைக்குச் சான்றாகிறது. புறநானூற்றுக் கையறு நிலைப் பாடல்களில் பதினைந்து பாடல்கள் இறப்புத் தொடர்பான செய்திகளைப் பேசுகின்றன. வீரமரணம் அடைந்தவர்களை இடுகாட்டிற்குக் கொண்டு சென்று புதைத்தமையையும், தாழியில் வைத்துப் புதைக்கப் பெற்றதையும், இறந்தவர்களின் உடலை எரிக்கும் வழக்கம் இருந்தமையையும் பாடல்கள் சுட்டுகின்றன.

வீரத்தில் மேம்பட்ட அரசர்கள் போர்க்களத்தில் வீரப்புண்பட்டு வீரசுவர்க்கம் அடையாது, நோய்வாய்ப்பட்டு இறப்பின் இறந்தோர் உடலைத் தருப்பையில் கிடத்தி, அவர்கள் உடம்பை வாளாற் பிளந்து அடக்கம் செய்வது பண்டைக்கால மரபு. இதனை,

"நோய்ப்பால் விளிந்த யாக்கை....
..... ..... ...... ......
திறம்புரி பசும்புற பரப்பினர் கிடப்பில்
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ" (புறம்:93:5-11)

என்ற பாடல் சுட்டும்.

இறப்பு நிகழ்ந்தபின் நெய்தற்பறை என்னும் சாக்காட்டுப் பறையை முழங்குதல் (புறம் : 194, 389) பண்டைய வழக்கமாக அமைந்துள்ளது.

சுடுகாட்டின்கண் பிணத்தைப் பாடையிலிருந்து நீக்கி, தருப்பைப் புல்மேல் கிடத்தி, எதிரில் தருப்பையில் கள்ளினையும் சோற்றினையும் படைத்தலும் இறப்பின் பின் செய்யும் கிரிகைகளில் ஒன்றாக உள்ளது என்பதை,

"கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மே லமர்ந்துண்
டழல் வாய்ப் புக்க பின்னும்" (புறம் : 360 : 16 - 20)

என்ற அடிகள் விளக்கும்.

இறந்தவர்களை எரித்தமையை,

'ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது' (புறம் : 240 : 10)

'சுடு பிணக்காடு' (புறம் : 363 : 4-5)

என்பன சுட்டும்.

குழந்தைகள் பிறந்தவுடன் இறந்தாலோ இறந்தே பிறந்தாலோ அக்குழந்தையை வாளால் வெட்டி அடக்கம் செய்வது பண்டைக்கால மரபாகும். இதனை,

"குழவி யிறப்பினும் ஊன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்" (புறம் : 74 : 1-2)

என்ற அடிகளின்றும் உணரலாம்.

நோயினால் இறந்தோரைப் போர்க்களத்தில் உயிரைவிடாத குற்றம் நீங்கும்படி, பசும்புல் மீது கிடத்தி, 'அறநெறியில் வாழும் நான்மறை முதல்வர்கள் வீரமும் துணையாகப் போர்க்களத்தில் இறந்தோர் செல்லுமிடம் செல்லுக' எனக்கூறி வாளால் வெட்டிய பிறகு அடக்கம் செய்வது பண்டைத் தமிழரின் பழக்கமாகும். இதனை,

"நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த

நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென

வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ" (புறம் : 93:5-11)

என்ற அடிகள் சுட்டும். இதிலிருந்து இறந்து பிறந்த குழந்தையையும், நோய்வாய்பட்டு இறந்தோரையும் வாளால் வெட்டி அடக்கம் செய்யும் மரபு இருந்தமை வெளிப்படும்.

## ஈமத்தாழி

இறந்தவர் உடலை மண்ணால் செய்த 'தாழிக்குள் வைத்துப் புதைப்பதுஅக்கால மரபு. இதனை 'முதுமக்கட் தாழி' என்றழைத்தனர். சங்க இலக்கியங்களில் கலம், தாழி, கவிசெந்தாழி, ஈமத்தாழி, தாழிய பெருங்காடு, முதுமக்கட் தாழி, மன்னர் மறைத்த தாழி என்ற தொடர்கள் ஈமத்தாழியைக் குறித்து நிற்கின்றன. இத்தாழி மிகப்பெரிய அளவில் இருந்தமையை,

'மாஇருந் தாழி' (நற் : 271 : 11)

'ஓங்குநிலைத் தாழி' (அகம் : 275 : 1)

'கண்ணகன் தாழி' (புறம் : 228 : 12)

என்ற தொடர்கள் சுட்டும்.

சுரத்தில் தலைவனையிழந்த தலைவி, ஊர்க்குயவனிடம் தன் தலைவனுடன் தன்னையும் புதைத்ததற்கேற்ற வகையில் ஈமத்தாழியை - முதுமக்கள் தாழியை பெரிதாகச் செய்யுமாறு வேண்டினாள். இதனை,

"சுரம்பல வந்த எமக்கும் அருளி

வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி

அகலி தாக வனைமோ" (புறம் : 256. : 4 - 7)

என்ற பாடலடிகள் விளக்கும். இவ்வகையில் இறந்த பின்னர்த் தாழிக்குள் வைத்துப் புதைக்கும் பழக்கம் இருந்தமையை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

மேற்குறித்த செய்திகளிலிருந்து வீரமரணம் அடைந்தவர்கள் புதைக்கப்பெற்றமையை அறியமுடிகின்றது. சங்க காலம் வீரயுககாலமாகும். ஆகவே, வீரம் என்ற கருத்திற்கு முதன்மை கொடுக்கப்பெற்றது. ஆகவே, வீரர் நோய்வாய்ப்பட்டு இறந்தால் வாளால் வெட்டி அடக்கம் செய்துள்ளனர். குழந்தை இறந்தாலும் இவ்வாறு வாளால் வெட்டியே அடக்கம் செய்துள்ளனர். போருக்குப் பயன்படுகிற வாள் இங்கு இறப்புச் சடங்கில் தொடர்பு பெறுகிறது. இறப்பு நிகழ்வில் சாக்காட்டுப்பறை என்னும் இசைக்கருவி தொடர்பு பெற்றுள்ளது.

இறப்புச் சடங்கில் பாடை, தர்பைப்புல் படுக்கை தொடர்பு பெற்றுள்ளன. இறந்தவர்களைப் புதைக்கத் தாழி என்கிற புழங்குபொருள் அக்காலத்தில் சிறப்பாக பயனப்டுத்தப் பெற்றிருக்கின்றது. முதுமக்கள் தாழி என்கிற வழக்குப் பரவலாக உள்ளது. இத்தாழியைக் குயவர்கள் செய்திருக்கின்றனர் என்பதையும் பாடல்கள் வழி உணரலாம்.

## தொகுப்புரை

சமயம் வாழ்விற்கும் மனதிற்கும் பயனளிப்பது. சமயத்திற்கு பல விளக்கங்களை அறிஞர்கள் எடுத்துரைப்பார்கள். சிக்மன் பிராய்டு அச்சத்தின் காரணமாகச் சமயம் பிறந்தது என்பார். சமய ஞானிகள் வரம்பில்லா ஆற்றலை மையமிட்டு மனத்திற்குரிய கடமைகளைச் சமயத்தின் வாயிலாக வரையறுப்பர். சமயத்திற்கும் அறமதிப்புக்களுக்கும் தொடர்புண்டு.

தொன்மையான சமயங்களுள் இந்து சமயமும் ஒன்று. இந்தியா முழுமைக்கும் மொழிவேறுபாடு இருந்தாலும் சமய ஒற்றுமை இருப்பதாக அறிஞர்கள் குறிப்பிடுவர்.

தமிழர் சமயம் திராவிடர் சமயம் என்றும், சிந்து சமவெளி நாகரிகத்தில் தொடர்பு உடையது என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

தமிழரின் தொன்மை இலக்கணமாகிய தொல்காப்பியம் திணைகளை மையமிட்டுத் தெய்வங்களை வரையறுத்துள்ளது. மேலும், கருப்பொருளில் தெய்வங்கள் அடங்கும்.

சங்க இலக்கியங்களில் கோயில் செய்தி பரவலாக உள்ளன. கோட்டம், நகரம், ஆலயம் போன்ற சொற்கள் கோயிலைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றுள்ளன. கடவுள் திருவுருவங்கள் பற்றியும் வழிபாட்டுச் செய்திகள் குறித்தும் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன.

சடங்கு என்பது சாஸ்திர விதி மற்றும் வழக்கம் பற்றியதாகும். இறைவனைத் தொழுதல் வழிபாட்டோடு தொடர்புடையதாகும். இவ்வழிபாட்டோடு சடங்குகளும் தொடர்பு பெறுகின்றன.

சமயத்தில் மட்டுமின்றி மனித வாழ்விலும் சடங்குகள் தொடர்பு பெறுகின்றன. செயல் பழக்கமாக மாறி முன்னேற்ற காலத்தில் சடங்காக மாறுகிறது என்று குறிப்பிடுவர். சடங்குகள் பண்பாட்டு மதிப்பைப் பெறுகின்றன.

சமயம் சார்ந்த புழங்குபொருட்களை இறைவனோடு தொடர்புடையவை என்றும், வழிபாட்டுடன் தொடர்புடையவை என்றும் பாகுபடுத்திப் பார்க்கலாம். இறைவனோடு தொடர்புடைய புழங்குபொருளுள் ஆடை, ஆபரணம், கொடி, ஊர்தி ஆகியன கருத்தில் கொள்ளப்பெற்றன.

பண்டைத் தமிழர் சிவனை நிலத்திற்குரிய தெய்வமாக ஏற்றுக்கொள்ளவில்லை. மூன்று கண்களையும், நீலமணிமிடற்றையும், உடையவனாகச் சிவனை எட்டுத்தொகை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

சிவபெருமான் ஆடை தோலாடையாகும். குறிப்பாக மான் தோலை ஆடையாக அணிந்தவன். கணிச்சி, மழு, முத்தலைச் சூலம் ஆகிய கருவிகளைச் சிவன் பெற்றுள்ளதை இலக்கியங்களின் வழி அறியலாம்.

ஆனெற்றுக் கொடியையும், விடையையும், ஊர்தியாகவும் உடையவன்.

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் மால், மாயோன் என்ற பெயர்கள் வழக்குப்பெற்றன. கடல் போன்ற நிறத்தினை உடையவன். பூங்கொத்துக்களையும், துளவ மாலையையும் அணிந்தவன். ஆதிசேனடாகிய பாம்பைப் படுக்கையாகக் கொண்டவன் என்கிற குறிப்புக்கள் கிடைக்கின்றன.

பரிபாடலில் திருமால் வளைந்தகலப்பை, தண்டு, சங்கு, சக்கரம், வில், அம்பு, பாரவளை, வாள் ஆகியவற்றை ஏந்தியிருப்பதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது. திருமால் கருடனை ஊர்தியாகவும், கொடியாகவும் உடையன்.

பண்டை இலக்கியங்களில் 'முருகு' என்னும் சொல்லால் முருகனைக் குறித்துள்ளனர். திருமுருகாற்றுப்படை முருகனின் காதில் மகர குண்டலங்களை உடையவன், பன்னிரு கைகளில் தோட்டி, பரிசை, வேற்படை, மணி ஆகிய கருவிகளை ஏந்தியிருப்பவன் என்ற குறிப்புக்கள் கிடைக்கின்றன. இவர் ஆடை செந்துவராடையாகும். கோழிக்கொடியைத் தனக்குரிய கொடியாகப் பெற்றிருக்கின்றான் என்ற செய்திகளும் கிடைக்கின்றன.

ஆயிரம் கண்களையுடையவன் இந்திரன். வச்சிராயுதத்தை ஏந்தியிருப்பவன் என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன.

வருணன், கொற்றவை ஆகிய தெய்வங்கள் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன என்றாலும் அத்தெய்வங்களுடன் தொடர்புடைய புழங்குபொருட்கள் சுட்டப்பெறவில்லை.

வழிபாட்டுடன் தொடர்புடைய புழங்குபொருட்களுள் நடுகல் வழிபாடு குறிப்பிடத் தகுந்ததாகும். இவ்வழிபாட்டில் 'நடுகல்' குறிக்கத்தகுந்த புழங்குபொருளாகும். நடுகல்லில் பெயரும் பீடும் எழுதி வழிபட்ட நிலை சான்றுகளின் வழித் தெரியவருகிறது. பீலி சூட்டி வழிபட்டிருக்கின்றனர். நடுகல் வழிபாட்டில் 'துடி' என்னும் இசைக்கருவி இடம்பெற்றுள்ளது. விழாக் காலங்களில் கொடியேற்றுதல் நிகழ்ச்சியில் கொடிமரம் தொடர்பு பெற்றிருக்கின்றது. மேலும் முழவு, யாழ், முரசு, குழல் ஆகிய இசைக்கருவிகள் முழங்கப்பெற்றிருக்கின்றன. இவ்வகையில் வழிபாட்டு மரபில் இசைக்கருவிகள் புழங்கு பொருட்களாக பயன்பெற்றுள்ளன. விழா நாட்களில் தழையுடையினையும், பல அணிகலன்களையும் அணிந்திருக்கின்றனர்.

புனலாடும் விழாவின்போது பொன்னாலாகிய சங்கு, நண்டு, இறகு, வாளை ஆகியவற்றைப் புதுப்புனலில் இட்டுப்பெண்டிர் விளையவும், பொலியவும் வேண்டியுள்ளனர். இவ்வகையில் இவைகள் வழிபாட்டிற்குரிய புழங்குபொருட்களாக அமைகின்றன.

கார்த்திகை விழாவில் விளக்கு முதன்மை இடத்தைப் பெற்றிருக்கின்றது.

வேலன் வெறியாடும் போது கழற்காயை மெய்யில் அணிந்திருக்கின்றனர். தினையையுடைய பிரம்பு வழிபாட்டில் தொடர்பு பெற்றிருப்பதை அறிய முடிகின்றது.

வெறியாட்டு வழிபாட்டு மரபில் நெய், வெண்சிறுகடுகு, பொரி, குருதி தோய்ந்த அரிசி, பிரம்பு, மஞ்சள், சந்தனம், செவ்வலரி மாலை, மலர்கள், தூபம், குருதிதோய்ந்த தினை, வாச்சியங்கள் ஆகியவை வழிபாடு தொடர்புடைய புழங்கு பொருட்களாக இடம்பெற்றுள்ளன.

சடங்குகள் சார்ந்த புழங்கு பொருட்களை வாழ்வியல் சார்ந்தவை, தொழில் சார்ந்தவை என வகைப்படுத்திப் பார்க்கலாம்.

வாழ்வியல் சடங்குகளைப் பிறப்புச் சடங்கு, தாலி களைதல், மடலேறுதல், சிலம்புகழி நோன்பு, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு என வகைப்படுத்தப்படும்.

பிறப்புச் சடங்கில் வெண்சிறு கடுகு பயன்படுத்தப்பெற்றுள்ளது. மன்னர்கள் பிறந்தநாள் கொண்டாடும் பெருமங்கலத்தில் வெண்மையான ஆடையை அணிந்திருக்கின்றனர்.

குழந்தைகளுக்கு வீரத்தின் அறிகுறியாகவும் பாதுகாப்பு மற்றும் நம்பிக்கையின் அடிப்படையிலும் புலிப்பல்தாலி, ஐம்படைத்தாலி ஆகியவற்றை அணிவித்துள்ளனர்.

காதல் கொண்டவன் நிறைவேறாத போது மடலேறிப் பிறருக்குப் புலப்படுத்துவதை மரபாகக் கொண்டுள்ளனர். இதில் பனைமடலால் ஆகிய குதிரை புழங்கு பொருளாக இடம்பெற்றுள்ளது.

சிலம்புகழி நோன்பில் சிலம்பு என்கிற அணிகலன் புழங்கு பொருளாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

திருமண நிகழ்ச்சியின் போது விளக்கேற்றி வழிபட்ட பின் மணவினை நிகழ்த்தப் பெற்றுள்ளது. திருமணத்தின் போது முரசு ஒலிக்கும் பழக்கம் இருந்திருக்கின்றது. தண்ணீர்க் குடங்கள், சிறுமண்டை, பூவிதழ் நெல்மணி ஆகியவை புனித நீராட்டில் தொடர்பு பெற்றிருக்கின்றன.

எருமைப் பேட்டின் கொம்பு நட்டுச் செய்யும் திருமணமுறை கலித்தொகையில் மட்டும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

இறந்தவர்கள் உடலைத்தாழியில் இட்டுப் புதைத்தனர். தாழி இறப்புச் சடங்கில் பெரிதும் தொடர்பு பெற்றபொருளாகும்.

நோய்வாய்ப்பட்டு இறப்பவர்களை வாளால் பிளந்து அடக்கம் செய்துள்ளனர். அப்போதுதான் வீரசொர்க்கம் அடைவார்கள் என்பது அவர்கள் நம்பிக்கை. இச்சடங்கில் வாள் தொடர்பு பெற்றுள்ளது.

இறப்பு நிகழ்ச்சியில் சாக்காட்டுப் பறை, பாடை, தருப்பைப்புல் படுக்கை ஆகிய பொருட்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

சங்க காலத்தில் கலம், தாழி, கவிசெந்தாழி, ஈமத்தாழி, தாழிய பெருங்காடு, முதுமக்கள் தாழி, மன்னர் மறைத்த தாழி போன்றவை ஈமத்தாழியைக் குறித்து நிற்கும் தொடர்களாகும். இறந்தவர் உடலை அடக்கம் செய்வதற்கு அக்காலத்தில் இத்தாழியைப் பயன்படுத்தியுள்ளனர்.

தொழில் சடங்குகள் குறித்த புழங்கு பொருட்கள் மிகுதியாகக் கிடைக்கவில்லை. அந்தணர் வேள்விச் சடங்கின்போது கரகத்தினைப் பயன்படுத்தியமை தெரியவருகின்றது.

வேள்விச் சடங்கில் நெடியகம்பம் பயன்படுத்தப் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. வேள்வி செய்பவர் தோலாடையை அணிந்து முக்கோலைப் பயன்படுத்தியமை சான்றுகளின் வழி அறியமுடிகின்றது.

# சான்றெண் விளக்கம்

1. டாக்டர் இரா. பாலசுப்பிரமணியன், அத்வைதமும் தேசியமும், ப.1.
2. கலைக்களஞ்சியம், (தொகுதி 4), பக். 451 - 452.
3. மேலது, ப. 452.
4. இரா. பாலசுப்பிரமணியன், அத்வைதமும் தேசியமும், பக். 6-7.
5. பாரதியார் கவிதைகள், ப. 135.
6. கலைக்களஞ்சியம், தொகுதி 4, ப. 452.
7. தமிழ் இலெக்சிகன், ப. 1240.
8. கலைக்களஞ்சியம், (தொகுதி 4), ப. 392.
9. மேலது.
10. ரூத்பெனிடிக்ட், பண்பாட்டுக்கோலங்கள், ப.35.
11. பரி. 19.50 - 53, 8 : 33 - 35 பதி : 2 : 91 - 97.
12. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.250.
13. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 583.
14. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே.சா. (உ.ஆ) ப. 42.

பண்டைத் தமிழரின் புழங்கு பொருள்கள் என்பது ஆய்வுத் தலைப்பாகும். பண்டைத்தமிழரின் வாழ்வியலோடு தொடர்பு பெற்ற புழங்குபொருள்கள் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. பதிவாகிய அச்செய்திகள் முன் இயல்களில் வகை தொகைப்படுத்தப்பெற்று விளக்கப்பெற்றன. மக்களின் வாழ்வியல் அவ்வக்காலச் சமூகச் சூழலுக்கும் சிந்தனைப் பரிணாமத்திற்கும் தேவைக்கேற்பவும் அமைதல் இயற்கையாகும். பிற பண்பாட்டியலார் தொடர்பும் பிற நாட்டார் தொடர்பும் அறிவியல் தொடர்பும் மரபுசார்ந்த வாழ்வியல் சூழலை மாற்றத்தான் செய்யும். எனினும் பண்டைத் தமிழரின் மரபியல் வாழ்வு முற்றிலும் மாறிவிட்டதாகக் கருத இயலாது. பண்டைத் தமிழரின் மரபியல் வாழ்வு நாகரீகமடையாத நாட்டுப்புறங்களில் இன்றும் எச்சங்களாகத் திகழ்வதை அறிஞர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். அம்முறையில் நாட்டுப்புற மக்களின் வாழ்வியலோடு தொடர்புடைய புழங்கு பொருட்கள் நாட்டுப்புற இலக்கியங்களில் பதிவு பெற்றிருக்கும் எனக் கூறலாம். இந்நிலையைக் கருத்தில் கொண்டு பண்டைத் தமிழரின் புழங்கு பொருள்கள் நாட்டுப்புறமக்கள் வாழ்வியலோடு தொடர்புடைய புழங்கு பொருள்களோடு இவ்வியலில் ஒப்பிடப்பெறுகின்றன.

## வரையறையும் வகைப்பாடும்

நாட்டுப்புறவியல் அண்மைக் காலத்தில் ஆராய்ச்சி உலகில் பரவலாக வளர்ச்சிபெற்று வருவதை அறியலாம். நாட்டுப்புறவியலாய்வில் முதன்மைச் சான்றிற்குரிய தரவுகள் கள ஆய்வினை (Field studies) ஒட்டியே அமையும். மேலும், ஆய்வாளர்கள் குறிப்பிட்ட புவியியல் எல்லையை வரையறுத்துக் கொண்டு ஆய்வினை நிகழ்த்துவார்கள். இவ்வாய்வில் அவ்வாய்வுமுறை பின்பற்றப்பெறவில்லை. ஏற்கனவே தொகுக்கப்பெற்றுள்ள நாட்டுப்புறவியல் துறை சார்ந்த நூல்களிலிருந்து தரவுகள் சேகரிக்கப்பெற்றுள்ளன. அம்முறையில் நாட்டுப்பாடல் தொகுப்புகள், கதைகள், பழமொழிகள், ஆய்வுகள் போன்றவை கருத்தில் கொள்ளப்பெற்றன.

நாட்டுப்புறவியல் ஆய்வில் நான்கு வகைகள் பெரும்பாலும் வகைப்படுத்தப்பெறும்.

1. வாய்மொழி இலக்கியம் (Oral literature)
2. புழங்கு பொருள்களால் அறியப்படும் பண்பாடு (Materials Culture)
3. நாட்டுப்புறக்கலைகள் தொடர்பானவை (Folk Arts)
4. நாட்டுப்புறச் சமயம் சடங்குகள் மற்றும் நம்பிக்கைகள் தொடர்பானவை. (Folk Religion, rituals and beliefs)

இவ்வகைப்பாட்டில் புழங்குபொருள்களைக் குறித்த ஆய்வு நிலை வளர்ச்சி பெறவேண்டியுள்ளது. ஆகவே, புழங்கு பொருள் குறித்த ஆய்வில் வகைநிலைகள் விரிவாக உருவாகவில்லை. இவ்வாய்வில் பண்டைத்தமிழரின் புழங்கு பொருள்கள் மூன்றுவகைகளில் முன்னியல்களில் விளக்கப்பெற்றன. அவையாவன:

1. இல்லம் சார்ந்தவை
2. தொழில் சார்ந்தவை
3. சமயம் மற்றும் சடங்கு முறை சார்ந்தவை.

## 1. இல்லம்சார்ந்த புழங்கு பொருள்கள்

இல்லம் சார்ந்த புழங்குபொருட்களை முன் இயலில் வகைப்படுத்தப் பெற்றவாறு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

1. கல்லால் ஆனவை.
2. மண்ணால் இயன்றவை.
3. இலை, நார், மரம் மற்றும் பிற.
4. உலோகத்தால் இயன்றவை.

## 1. கல்லால் ஆனவை

பண்டைத் தமிழரின் கல்லால் ஆன புழங்குபொருள்களில் உரல் இடம் பெற்றமையை இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. நாட்டுப்புற மக்களிடமும் உரல் வழக்கில் இருப்பதை,

"கல்லுரலு மேலிருந்தது
கனிவாய நீ திறந்தா
செம்பங் கிளி வாய் திறந்தா
சேர்ந்த கிளி வந்திருமே" [1]

என்ற வரிகளின் வழி அறியலாம். மேலும் நாட்டுப்புற மக்களிடம் கல்லால் ஆன அம்மி பற்றிய செய்திகள் பரவலாக உள்ளன. "அணிற்பிள்ளையின் தலை மீது அம்மிக்கல்லை வைத்தது போல"[2] என்பது பழமொழியாகும்.

பண்டைத்தமிழரிடம் அம்மி புழக்கத்தில் இருந்ததா? அல்லது பிற்காலத்தில் தான் வழக்கில் வந்ததா? என்பது மேலும் ஆய்விற்குரியதாகும்.

## 2. மண்ணால் இயன்றவை

பண்டைத் தமிழரிடம் மண்ணால் இயன்ற புழங்கு பொருள்களின் பயன்பாடு மிகுதியாக இருந்தது. ஆனால் பிற்காலத்தில் உலோகத்தினால் ஆன புழங்கு பொருள்கள் பெருகப் பெருக மண்ணால் ஆன பொருள்கள் குறையத் தொடங்கின. அவ்வகைகளில், குழிசி, மிடா, குடம் ஆகியன நாட்டுப்புற இலக்கியங்கள் வாயிலாகக் கிடைக்கின்றன.

## 1. குழிசி

குழிசி என்பதற்குப் பானை என்பது பொருள். 'குழிசி' என்ற சொல்லாட்சியை விட 'பானை' என்ற சொல்லாட்சி நாட்டுப்புற இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றனது. அக்காலத்தில் தானியம் முதலிய பொருள்களைச் சேமித்து வைப்பதற்குப் பானைகளைப் பயன்படுத்தியிருகின்றனர். காலப்போக்கில் பானையின் பயன்பாடு குறையத் தொடங்கியது. நாட்டுப்புற இலக்கியங்களில் 'குழிசி' என்ற சொல் அருகியே காணப்படுகின்றது.

"ஆனையைத் தேடக் குடத்துக்குள் கை வைத்தது போல்"[3] என்பது பழமொழியாகும். இப்பழமொழியில் குழிசி வழக்கில் இல்லை.

## 2. மிடா

பானையின் வகைகளுள் மிடாவும் ஒன்று. இது பண்டைக்காலத்தில் சோறு சமைப்பதற்குப் பயன்பட்டதாகத் தெரிகிறது. புளிப்புத் தன்மையுடைய காடியை வைப்பதற்கு இம்மிடா பயன்பெற்றுள்ளது.

பானைகளில் வைத்துச் சோறுசமைக்கும் பழக்கம் நாட்டுப்புறத்தில் உண்டு. பெரிய வயிற்றை உடையவர்களைக் கேலி செய்யும் பொழுது 'மிடா' வயிற்றுக்காரன் என்று கூறுவார்கள். பழமொழியில் 'ஆனால் அச்சிலே வார், ஆகாவிட்டால் மிடாவிலே வார்'[4] என்று கூறப்பெறுகின்றது. எனினும் இம்மிடா எந்தச் சூழலில் குறிக்கப்பெறுகின்றது என்பது மேலும் ஆராயப்பெறவேண்டும். மேலும், 'உப்பு இல்லாமல் ஒருமிடா கஞ்சி குடிப்பான்'[5] என்ற பழமொழி இங்கு கருதத்தக்கது. இதில் 'ஒருமிடா கஞ்சி' என்பது ஒருபானைக் கஞ்சி என்ற பொருளில் ஆகும்.

## 3. குடம்

குடம் பற்றிய செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களில் மிகுதியாகப் பதிவாகியுள்ளன. பதிவாகியுள்ள செய்திகள் கீழே தரப்பெற்றுள்ளன.

‘கையில்லாக் கொசவன் செய்தது மூனு பானை
ரெண்டுபானை பச்சை ஒண்ணு வேகவே யில்லை
வேகாத பானையிலே போட்டரிசி மூவரிசி
ரெண்டரிசி நறுக்கு ஒன்று வேகவே யில்லை.’[6]

‘எண்ணெய்க்குடம் போல
எழுப்பி வந்த மேகம் போல
தண்ணிக்குடம் போல
தளும்புதடி என் மனசு’[7]

‘ஒரு குடம் தண்ணி ஊற்றி
ஒரே பூப் பூத்ததாம்
ரெண்டு குடம் தண்ணி ஊத்த
ரெண்டே பூப் பூத்ததாம்’[8]

‘தண்ணிக் குடத்தாலென்
தாகத்தைத் தீர்த்த தங்கம்’[9]
தலையிலே தண்ணிக்குடம்
தாகமெல்லாம் உங்கமேலே’[10]

'குடிதண்ணியும் குளிதண்ணியும் - கண்மணியே
குடம் குடமா எடுப்பாங்களாம்'[11]
'அரைக்குடம் ததும்பும் நிறைகுடம் ததும்பாது'[12]
'எண்ணெய்க் குடத்தைச் சுற்றும் எறும்பு போல'[13]
'பெரியய்யா பால்குடமோ பால்குடத்தை பார்க்கவந்த
பாலகனை யாரடித்தார்'[14]

மேற்கண்ட பாடல்களிலிருந்து குடம் பற்றிய சில செய்திகளைக் காணலாம். குயவர்கள் கிராமத்தில் பானை செய்வது வழக்கம். இவர்களை நாட்டுப்புறப் பாடல்கள் 'கொசவன்' என்று குறிப்பிடப்பெறுகின்றன. குயவன் செய்யும் அந்தக்குடம் தண்ணீரை எடுப்பதற்கும், பாதுகாத்து வைப்பதற்கும் பரவலான அளவில் பயன்படுத்தப்பெற்றிருக்கின்றது. குடிதண்ணீர் எடுப்பதற்கும் குடம் பயன்படுத்தப் பெற்றுள்ளது. குளிப்பதற்குரிய தண்ணீர் எடுப்பதற்கும் இக்குடம் பயன்பெற்றுள்ளது. தலைவன் கூற்றில் தண்ணிக் குடத்தால் என்தாகத்தைத் தீர்த்த தங்கம் என்று கூறப்பெறுகின்றது. தலைவி கூற்றிலும் 'தலையிலே தண்ணிக்குடம் தாகமெல்லாம் உங்கமேலே' என்று குறிக்கப்பெறுவதும் கருதத்தக்கதாகும். குடத்தில் எண்ணெய்யும் வைக்கப்பெற்றிருக்கினறது. மேலும் பாலையும் குடத்தில் வைத்திருக்கினற சூழலில் பால்குடம் என்று கூறப்பெறுகிறது. தற்போது சமய வழிபாட்டில் பால்குடம் எடுப்பது நேர்த்திக்கடன் சார்ந்த வழிபாட்டு மரபாகும். ஆனால் இக்குடம் பித்தளை (அ) எவர் சில்வரால் இக்காலத்தில் பயன்படுத்தப்பெறுகிறது. தற்போதும் நாட்டுப்புறங்களில் பாலைக் குடத்தில் வைப்பது இல்லை. குடம் என்பது துவக்கத்தில் மண்ணால் ஆன பொருளைக் குறித்துத் தற்காலத்தில் உலோகத்தாலான பொருளையும் குறிப்பதாயிற்று.

'தங்கக்குடம் கொண்டு

தண்ணிக்குப் போற பொண்ணே'[15]

என்பதில் உள்ள தங்கக்குடம் என்பது உயர்வு கருதிச் சொல்லப்பெற்றது. வடிவத்தை மட்டுமே கருத்தில் கொள்ளவேண்டும்.

## 4. குதிர்

அறுவடை செய்யப்பெற்ற தானியங்களைக் குதிர்களில் சேமித்து வைக்கும் பழக்கம் நாட்டுப்புற மக்களிடம் இன்றும் காணப்பெறுகின்றது. சேமித்து வைக்கப்பெறும் குதிர் பொதுவாக மண்ணால் செய்யப்பெற்றதாகப் பெரியதாகவே இருக்கும். ஆகவே மனிதர்களில் சற்றப்பெருத்துக் குண்டாக இருப்பவர்களைக் 'குதிர்போல' என்று கூறுவது வழக்கம். இதனைக் கீழ்க்கண்ட பழமொழியால் அறியலாம்.

'ஐயா கதிர்போல் அம்மா குதிர்போல'[16] என்ற பழமொழி கருதத்தக்கது.

## 2. இலை, நார், மரம் மற்றும் பிற

ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை போன்றவை உண்ணுவதற்குரிய புழங்கு பொருள்களாகப் பண்டைக் காலத்தில் பயன்படுத்தப்பெற்றன. தற்காலத்திலும் வாழையிலை, தேக்கிலை ஆகியவைகள் விழாக்காலங்களிலும், விருந்துக்காலங்களிலும் உணவை உண்பதற்குரிய புழங்கு பொருளாக வழக்கில் உள்ளது. எனினும், நாட்டுப்புற இலக்கியங்களில் இவ்விலைகள் குறித்த செய்திகள் அவ்வகையில் பதிவாகவில்லை. பனையோலையை வடிவமைத்துப் பதநீர் அருந்தும் பழக்கம் தற்போதும் நாட்டுப்புற மக்களிடம் உண்டு. பனையோலையால் குடைகள்

செய்யப்பெற்றிருப்பதைப் பண்டை இலக்கியங்களின் வழி அறியலாம். நாட்டுப்புறப்பாடல்களிலும் குடை பற்றிய செய்திகள் கீழ்க்கண்டவாறு குறிக்கப்பெறுகின்றன.

'மழைக்கா இருட்டிலேயே
மாரளவு தண்ணியிலே
குடைபோட்டு நான் வருவேன்
குணமயிலே தூங்கிராத'[17]

'சடசடணு மழைபேய
சாமம் போல இடி விழுக
கொடை பிடிச்சு நான் வாரேன்
குணமயிலே தூங்கிராத'[18]

'அற்பன் பணம் படைத்தால் அர்த்த ராத்திரி குடை பிடிப்பான்'[19]

போன்ற பாடல்களில் குடை குறிக்கப்பெறுகின்றது. எனினும் தற்காலத்தில் நீர் இறங்கா கருப்புத்துணி மற்றும் கம்பிகளைக் கொண்டு நவீனக் குடைகள் புழக்கத்தில் வந்ததால் பனையோலைக் குடைகள் வழக்கற்றுப்போயின.

பனையோலையைப் பண்டைக் காலத்தில் மழைக்காகப் பயன்படுத்தப்பெற்றது போல இக்காலத்தில் இல்லை.

## ஓலைப்பெட்டி, கூடை

பண்டைக்காலத்தில் வட்டில் என்பது விதைவிதைக்கவும், பூக்களைச் சேகரிக்கவும், பயன்பெற்றதாகத் தெரிகிறது. இவை பெரும்பாலும் பனை ஓலையில்

செய்துகொள்ளப் பெற்றன. மீனைக் கொணர்வதற்கும், வேட்டையாடிய மான்தசையைக் கொண்டு வருவதற்கும் இக்கடகம் என்ற பெட்டி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

தற்பொழுது வட்டில் என்பது நாட்டுப்புற இலக்கியங்களில் குறிக்கப்பெறும் ஓலைப்பெட்டியுடன் தொடர்புபடுத்திப் பார்க்கலாம். நாட்டுப்புறப் பாடல்களில் ஓலைப்பெட்டியைக் குறித்த செய்திகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. சான்றாகச் சில பாடல்களைக் காணலாம்.

'ஓடுத ஓட்டத்திலே
ஓலைப் பெட்டி கக்கத்திலே
ஓலைப்பெட்டி போனாலும்
ஒன்னை விடப்போரதில்லை'[20]

'ஓலைப் பெட்டி
தலைமேலே
ஒம்பது மக்களும்
கக்கத்திலே'[21]

ஓலைப்பெட்டியைப் பொருள் எடுத்துக்கொண்டு செல்வதற்குப் பயன்படுத்தியிருக்கின்றனர். இதனைக் கக்கத்தில் வைப்பதும், தலைமேல் வைப்பதும் வழக்கமாக இருந்திருக்கின்றது. நாட்டுப்புறத்தில் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்வதற்கும், நாட்டுப்புறத்தில் சந்தைக்குக்கொண்டு செல்லவும் இன்றளவும் மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர்.

பனையோலை, தென்னையோலை, மூங்கில், ஓடைக்கொடி போன்றவைகளைக் கொண்டு இன்று கூடை வடிவமைக்கப்பெறுகின்றது. இக்கூடை குறித்த செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. அவையாவன:

'கூடைமேலே கூடை வச்சு
குமரிப் புள்ளே எங்க போற'[22]
'கூடை இடுப்பில் வச்சு
கோகிலம் போல் போற பொண்ணே'[23]

பொருள்களை எடுத்துச் செல்வதற்குக் கூடை நல்லதொரு புழங்கு பொருளாக நாட்டுப்புற மக்களிடம் இருந்திருக்கிறது. தற்பொழுது பெண்கள் கூடையை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். ஆண்கள் தொழிலிலும் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது. கூடைமேல் கூடை வைத்துக்கொண்டு செல்லும்முறை பெண்களிடம் நிலவியதை மேற்குறிப்பிட்ட நாட்டுப்புற இலக்கியங்களின் வழியாக அறியலாம்.

பொதுவாக ஓலைப் பெட்டியும் கூடையும் பண்டைத் தமிழ் மக்களிடம் பயன்பாட்டில் இருந்ததைப் போலத் தற்போதும் பயன்படுத்தப் பெற்ற நிலை கருத்திற்குரியது. மேலும், கைத்தொழில் செய்வோர்க்குக் கூடை, பெட்டி முடைதல் போன்றவை தற்போதும் வழக்கில் இருந்து வருகின்றன.

## பறி (பாய்)

மக்கள் பயன்படுத்தும் ஓலைப்பாய் அக்காலத்தில் 'பறி' என அழைக்கப்பெற்றது. பண்டைக் காலத்தில் கைம்மை நோன்பு மேற்கொள்ளும் மகளிர் ஓலைப்பாய் இன்றியும்படுத்து உறங்கியதை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. பாதுகாப்புத் தரவும் ஓலைப்பாய் பயன்பெற்றிருக்கிறது. நாட்டுப்புற மக்கள் பாய் பயன்படுத்திய செய்தியைக் கீழ்க்கண்ட பாடல்வரிகளினின்று உணரலாம். அவையாவன:

"படுத்தா உறக்கம் வல்லே
பாய் விரிச்சாத் தூக்கமில்ல
உறக்கச் சடவுலயே கண்ணே
உன் உருவம் தோணுதடி"[24]

"பாப்பா எதற்கு?
ஓலைப் பாயில தவழ்ந்து விளையாட
கோரப் பாயில குதித்து விளையாட"[25]

"பிள்ளை எதற்கு?
ஓலை பாயில ஓடி விளையாட
ஈச்சம் பாயில இருந்து விளையாட
கோரப் பாயில குதித்து விளையாட"[26]
"தாழம் பாய் போட்டுத்தவழ்ந்தாட வந்தாயோ"[27]

மேற்கண்ட செய்திகளிலிருந்து பாய் படுத்துத் தூங்குவதற்குப் பயன்படும் ஒரு புழங்குபொருளாக இருந்தமையை உணரலாம். இப்பாய் ஓலை, கோரை, ஈச்ச இலை, தாழம் இலை ஆகியவைகளைக் கொண்டு உருவாக்கியருப்பதை அறியமுடிகின்றது. அம்முறையில் ஓலைப்பாய், கோரைப்பாய், ஈச்சம்பாய், தாழம்பாய் என்ற வழக்குகள் நாட்டுப்புறங்களில் இடம்பெறுவதுண்டு எனினும் நாட்டுப்புறத்தில் கோரைப்புற்களைப் பயன்படுத்திச் செய்யும் தொழில் சிறந்த கைத் தொழிலாக நிலவிவருகின்றது.

## மரத்தால் இயன்றவை

பண்டைத் தமிழர்களிடம் திரிமரம், உரல், உலக்கை, மத்து, அம்பணம், கட்டில், தூதை ஆகிய மரத்தாலான புழங்கு பொருட்கள் பயன்பாட்டில் நிலவியதை இலக்கியச் சான்றுகளின் வழி அறியலாம்.

தற்காலத்தில் 'திரிமரம்' என்ற சொல் வழக்கில் இல்லை. அரிசி மற்றும் தானியம் உடைப்பதற்குக் கல் திரிகையைப் பயன்படுத்துகின்றனர். ஆகவே, அக்காலங்களில் மரத்தால் செய்யப்பெற்று, பின் கல்லால் செய்து கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும். இந்நிலை மேலும் ஆய்விற்குரியதாகும்.

உரல் என்பது கல்லாலும் மரத்தாலும் செய்யப்பெற்றது. நாட்டுப் புறப்பாடல்களில் கல்லுரல் என்ற வழக்கே பதிவாகியுள்ளது. எனினும் மரத்தாலான உரல்களும் தானியங்களை உடைப்பதற்குப் பயன்படுத்தப்பெற்றுள்ளன. பொதுவாக நாட்டுப்புற இலக்கியங்களில் உரல் பற்றிய செய்திகள் கீழ்க்கண்டவாறு கிடைக்கின்றன. பழமொழிகளில் உரலைப் பற்றிய செய்திகள் பின்வருமாறு இடம்பெற்றுள்ளன.

"அருமை மருமகன் தலைபோனாலும் போகட்டும்
ஆதிகாலத்து உரல் போகலாகாது" [28]

"உப்பைக் கடித்துக் கொண்டு உரலை இடித்தானாம்" [29]

"அவலைச் சாக்கிட்டு உரலை இடிக்கிறாள்" [30]

"உரலிலே தலையை மாட்டிக் கொண்டு உலக்கைக்குப் பயப்பட்டால் தீருமா"[31]

"உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா" [32]

இப்பாடல்களில் உரல் பற்றிய செய்திகள் உரலோடு தொடர்புடைய உலக்கை பற்றிய செய்திகள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். உரலில் மரஉலக்கை கொண்டு தானியங்கள் இடிப்பது தற்காலத்திலும் நாட்டுப்புறங்களில் இடம்பெற்றுள்ளது.

உலக்கை பற்றிய செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களில் இடம்பெற்ற விதம் பின்வருமாறு எடுத்துரைக்கப்பெறுகின்றது.

“உலக்கை தேய்ந்து உளிப்பிடி ஆச்சுது”[33]

“உலக்கை பெருத்து உத்திரம் ஆயிற்று” [34]

“போடு லக்கை போடு லக்கை
கைமாத்திப் போடு லக்கை” [35]

“உலக்கை போடும் கைதனிலே
ஓசையிடும் வளையல் சத்தம்” [36]

மர உலக்கைப் போடுவதற்கு வேகமும், ஒரு கையையும் மற்றொரு கையையும் பயன்படுத்தும் இலாவகமும் தேவை என்பதை மேற்கண்ட அடிகள் சுட்டுகின்றன.

உலக்கை அளவான நீளத்துடனும், பருமனுடனும் இருக்கவேண்டும். மிகவும் பெரியதானால் உத்திரம் போல் ஆகிவிடும் என்கிற குறிப்பு உலக்கையினுடைய வடிவமைப்பைச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

## அம்பணம் (மரக்கால்)

மரத்தால் இயன்ற ஓர் அளவைக்கருவி மரக்கால் ஆகும். இதனைப் பண்டை இலக்கியங்கள் அம்பணம் என்ற சொல்லால் குறித்துள்ளனர். இக்கருவியை இன்றைய நாட்டுப்புற மக்களும் பயன்படுத்துகின்றனர். இதனை,

"கோபுரம்போல் நெல்விளையும் கோபாலசமுத்திரத்தில்
மரக்கா மரநாழி மண்ணளக்கும் பொன்னாடி" [37]

என்ற பாடலடிகள் சுட்டும். மேலும், இன்றைய வழக்கில் மரத்தால் ஆகிய மரக்கால் இருப்பினும் உலோகத்தால் இயன்றதையும் பயன்படுத்துகின்றனர். ஆனால் மரக்கால் என்ற பெயரே வழக்கில் உள்ளது என்பது சுட்டத்தக்கது. இன்றைய வழக்கில் மரக்கால் மட்டுமின்றி படி, உழக்குப் போன்ற அளவைக்கருவிகளும் சிறப்பிடம் பெறுகின்றன.

## உலோகத்தால் இயன்றவை

பண்டை இலக்கியங்கில் பொன், வெள்ளி, இரும்பு, செம்பு ஆகிய உலோகங்களைப் பயன்படுத்தித் தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்து கொண்டதற்கான சான்றுகள் கிடைக்கின்றன. அவைகளாவன : பொன்கலங்கள், பசும்பொன் மண்டை, வெள்ளிக்கலம், மணிக்கலம் ஆகிய பொன் வெள்ளிக் கலங்களும், விளக்கு, எ்கு, மயிற்குறை கருவி, ஊசி, காழ் ஆகிய இரும்பாலாகிய புழங்குபொருட்களும், செம்பினாலாகிய செப்புக் குறித்த செய்திகளும் சங்க இலக்கியப்பாடல்களில் பதிவாகியுள்ளன.

நாட்டுப்புறப்பாடல்களில் விளக்கு, ஊசி, தூக்குச்சட்டி ஆகிய உலோகத்தாலான புழங்கு பொருட்கள் குறிக்கப்பெறுகின்றன. இதனை,

"ஒரு ஆயிரம் திருவிளக்காம் - ஏலேலோ
கணபதியாம்
திருவிளக்கு ஏலேலொ" [38]

"துணி தைக்கிற சின்ன ஊசி வாங்கலியோ ஆயோ

வாங்கலியோ ஆயோ

கோணி தைக்கிற பெரிய ஊசி

வாங்கலியோ ஆயோ" [39]

"ஊசிக் கண்ணில் ஆகாயம் பார்த்தது போல" [40]

"சலுப்பச்சட்டி ஊசி கொண்டு

சாக்குத் தைக்க நீங்க வாங்க

சாலைப்பாதை நான் வாரேன்" [41]

என்ற பாடல் அடிகள் வழியாக அறியலாம். மேற்கண்ட பாடல்களிலிருந்து விளக்கு என்று குறிப்பிடப்பெற்றுள்ளதே தவிர, எந்த உலோகத்தால் ஆனது என்பது குறிக்கப்பெறவில்லை.

ஊசி குறித்த செய்திகளினின்று துணி தைக்கும் ஊசி, கோணி (சாக்கு) தைக்கிற ஊசி என்று இரண்டு வகைகள் வழக்கில் இருப்பதை அறிய முடிகின்றது. 'எவர்சில்வர்' என்ற உலோகத்தால் ஆன தூக்குச்சட்டி குறித்த செய்தியும் கிடைக்கின்றது.

செப்பு என்பதற்குப் பண்டை இலக்கியங்களிலிருந்து பெறப்பெற்ற முடிவு குடுவை வடிவினதாகும். இவ்வகையில் இன்றும் செப்பு, குடுவை வடிவினதாகவே செய்து கொள்ளப்பெற்றது என்பதை,

"மண் எதற்கு

செப்புப் பண்ண

செப்பு எதற்கு

காசு போட" [42]

என்ற அடிகள் சுட்டும். இச்செப்பு இன்று 'செம்பு' என்றும் வழங்கப்பெறுகின்றது. இதனை நீருண்ணும் கலமாகப் பயன்படுத்துகின்றனர்.

"கொம்பை வித்தேன் குழலை வித்தேன்
குடிக்க இருந்த செம்பை வித்தேன்" [43]

இச்செப்பால் ஆகிய குடம் செம்புக்குடம் என்று வழங்கப்பெறுகிறது. பண்டை இலக்கியத்தில் இக்குடம் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் எப்பயன்பாட்டிற்கு உரியதாக இருந்தது என்பது புலப்படவில்லை. நாட்டுப்புறப்பாடல்களில் தண்ணீர் எடுப்பதற்கும் சோறு சமைப்பதற்கும் பயன்பெற்றதை,

"அஞ்சி கிணத்துத் தண்ணி
அரைக் கிணத்து உப்புத்தண்ணி
செம்புக் குடத்துத் தண்ணி
சேருகிறது எந்தக் காலம்" [44]
"மண் எதற்கு?
சொப்பு பண்ண
சொப்பு எதற்கு
சோறு ஆக்க" [45]

என்ற பாடலடிகள் விளக்கும். இவ்வகையில் தண்ணீர் எடுப்பதற்கும், சோறு சமைப்பதற்கும் செப்புக்குடம் நாட்டுப்புறங்களில் இன்றும் பயன்படுத்துவதைக் காணலாம்.

## 2. தொழிற் சார்ந்த புழங்கு பொருட்கள்

முன் இயலில் தொழில் சார்ந்த புழங்கு பொருட்கள் கீழ்க்கண்டவாறு நான்கு தலைப்புக்களில் விளக்கப்பெற்றன.

1. வாழ்வியல் தொழில்
2. போர்த்தொழில்
3. வாணிகத்தொழில்
4. கலையியல் தொழில்

## 1. வாழ்வியல் தொழில்

வாழ்வியல் தொழில் தொழில்கள் மேலும் நான்கு வகைகளாகப் பிரித்துப் பார்க்கப்பெற்றுள்ளன. அவையாவன :

1. கைத்தொழில்
2. நிலஞ்சார் தொழில்
3. கைவினைத் தொழில்
4. பிறதொழில்

## 1. கைத்தொழில்

கைத்தொழில்களில் முதன்மையாக வைத்து எண்ணத்தக்கது பயிர்த்தொழிலாகும். இவ்வகையில் பயிர்த்தொழிற்கான கருவிகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. மற்ற தொழில் வகைகளுக்கு ஓரிரு சான்றுகளே நாட்டுப்புற இலக்கியங்களின் வாயிலாகக் கிடைக்கின்றன.

நாஞ்சில், தளம்பு, ஆம்பி, கிழார், துளர், குளிர், தட்டை, தழல், வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார். குறுந்தடி, தொண்டகச் சிறுபறை, தண்ணுமை, குயம், வாள், கரும்பு அரவை இயந்திரம் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களின் வழி கிடைத்துள்ளன.

இவற்றுள் முதன்மையானது நாஞ்சில் ஆகும். இந்நாஞ்சில் என்ற பெயர் இன்றைய வழக்கில் இல்லை. கலப்பை, மேழி, ஏர் என்ற சொற்களை நாட்டுப்புறங்களில் பயன்படுத்துகின்றனர். இதனை,

“கலப்பை பிடிக்குந் தம்பி
கை சோர்ந்து நிக்கிறாங்க
.... .... .... .....
ஏர் பிடிக்கும் தம்பியெல்லாம்
எண்ணப்பட்டு நிக்கிறாங்க” [46]

“மேழி பிடிக்கும் தம்பி
முகம் சோர்ந்து போகுதம்மா
கலப்பை பிடிக்கும் தம்பி
கை சோர்ந்து நிக்குதம்மா” [47]

என்ற பாடலடிகள் சுட்டும்.

தளம்பு, அம்பி, கிழார், துளர் ஆகிய கருவிகள் நாட:டுப்புறப்பாடல்களில் பதிவுபெறவில்லை. இருப்பினும் நாட்டுப்புறமக்களிடம் தளம்பு - பரம்பு என்றும், ஆம்பி, கிழார் ஆகிய நீர் இறைக்கும் கருவிகள் நீர் இறைவாய்ப் பெட்டி என்றும், துளர் - களைக்கொட்டு என்றும் வழங்கப்பெறுகின்றன. தற்போதும் புழக்கத்தில் உள்ளன.

பண்டை இலக்கியங்களில் குளிர், தட்டை, தழல், வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி ஆகிய கருவிகள் விளைந்த பயிர்களைப் பறவைகள் மற்றும் விலங்குகளிடமிருந்து பாதுகாக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

இக்கருவிகளில் பலவும் இன்று வழக்கிழந்தன என்றாலும், வில், கிலுக்குப்பிரம்பு, இரண்டையும் பயன்படுத்தியதற்கான சான்றுகள் நாட்டுப்புற இலக்கியங்களின் வாயிலாகக் கிடைக்கின்றன. இதனை,

"வங்காளபட்சி வயலெறங்கி மேயுதுன்னு
சிங்கார வில்லெடுத்து செலுத்தப் பிறந்தவனே" [48]
'கிலுக்குப் பிரம்பெடுத்து கிளிவிரட்ட வந்த கண்ணோ" [49]
"வாழை பழுக்குதென்று வனக்கிளிகள் வந்ததய்யா
கிலுக்குப் பிரம்பெடுத்து நீ கிளிவிரட்ட வந்தகண்ணோ" [50]

என்ற நாட்டுப்புற பாடலடிகள் சுட்டுவது கருத்தில் கொள்ளத்தக்கது. இவ்வகையில் கிளிகளை விரட்ட மட்டுமே இக்கருவிகள் பயன்பெற்றுள்ளன.

விளைந்த கதிர்களை அறுவடை செய்யப் பண்டைத் தமிழர் வளைந்த கூர்மையான வாளைப் பயன்படுத்தினர். இவ்வாள் நாட்டுப்புறப்பாடல்களில் கதிர் அரிவாள் என்று குறிக்கப்பெற்றுள்ளது. இதனை,

"உன்னரிவாள் என்னரிவாள்
உருக்குவச்ச என்னரிவாள்
சாயப்பிடி அரிவாள்
சம்புதடி நெல்லம் பயிர்
வெளிப்பிடி அரிவாள்" [51]
"உழுகிற காலத்தில் ஊர்சுற்றிவிட்டு அறுக்கிற
காலத்தில் அரிவாள் எடுத்துக்கொண்டு புறப்பட்டான்" [52]

என்ற பாடலடிகள் சுட்டும்.

## பிறதொழில்கள்

பண்டை இலக்கியங்களிலிருந்து கிடைக்கக்கூடிய தொழில் சார்ந்த புழங்குபொருட்கள் மிகுதியானவை. நாட்டுப்புற இலக்கியங்களில் குறைவாகவே பதிவாகியுள்ளன. நெசவுத்தொழில், கொல்லுத்தொழில் பற்றிய செய்திகள் சில குறிப்புக்களே கிடைக்கின்றன. இதனை,

“தங்கத் தறியோட்டி - ஏ(ங்) ராஜாவே
தறிக்குள்ளே நூலோட்டி
.... .... .... .... ....
.... .... .... .... ....
பொன்னு தறியோட்டி - எனக்கு வந்த
பூமிக்குள்ளே நூலோட்டி” [53]

“நூலு நூக்கும் மில்லாவுசு
நூலு விலை ஆகிவிட்டாலும்
குமரி விலை ஆகல்லையே” [54]

“உச்சி மலையிலேயே
உளி யடிக்கும் ஆசாரி
சத்தம் போட்டு உளியடிங்க
சாதம் கொண்டு நான் வருவேன்” [55]

‘இழுக்கான பொன்னைப் புடத்தில் வைத்தெடுப்பார்கள்’ என்ற சான்றுகள் உணர்த்தும். நெசவுத்தொழிலைச் சார்ந்த தறி, தறிக்குள் ஓட்டும் நூல் போன்ற புழங்குபொருள்கள் குறிக்கப்பெற்றிருக்கக் காணலாம். சங்க இலக்கியங்களில்

பஞ்சை வில்லால் அடித்த பிறகு நூலை நூற்கும் கருவிகளில் நூற்றிருக்கின்றனர். நெசவுத்தொழிலுக்குரிய 'நூல்' பற்றிய குறிப்பு மட்டுமே ஒத்துக்காணப்பெறுகிறது. வில் போன்ற கருவி தற்போது புழக்கத்தில் இருந்தாலும் பாடல்களில் பதிவாகவில்லை.

கொல்லுத் தொழிலில் பல்வகைக் கருவிகள் பயன்படுத்தப் பெற்றதனை, சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டாலும் நாட்டுப்புற இலக்கியங்களில் அரம், உளி பற்றிய குறிப்பு மட்டுமே கிடைக்கிறது. "அரத்தை அரம் கொண்டும், வயிரத்தை வயிரம் கொண்டும் அறுக்கவேண்டும் என்பது பழமொழியாகும். இங்குக் குறிக்கப்பெறும் அறுக்கப்பெறும் கருவி அரம் கருத்திற்குரியதாகும். கூரிய பற்களைக் கொண்டதாகப் பெரும் பாணாற்றுப்படையில் சுட்டப்படுகிறது. கூர்மை செய்வதற்குப் பயன்பட்ட அரம் அன்றும் இன்றும் இருக்கக்காணலாம்.

## 2. நிலஞ்சார் தொழில்

வேட்டையாடுதல், மீன்பிடித்தல் குறித்த செய்திகளை இன்றைய நாட்டுப்புறப்பாடல்களின் வழியாக அறியலாம். மான்வேட்டையாடுவதற்கு வலைகளைப் பயன்படுத்தியதை,

"மானுக்குக் கண்ணி வைத்து மயில் வேட்டை ஆடயிலே" என்பது சுட்டும். இதிலிருந்து மான்வேட்டைக்குக் கண்ணி வலையைப் பயன்படுத்தியமை விளங்கும்.

மீன்வேட்டம் குறித்து வரும் பகுதிகள் பின்வருமாறு :

"துள்ளி வந்த மீன்களுக்கு தூண்டிவலை போட்டாரோ

தப்பி வந்த மீன்களுக்கு தத்துவலை போட்டாரோ" [58]

"வைகை பெருகிவர

வாளைமீன் துள்ளிவர

துள்ளிவந்த மீனுக்கல்ல - வேலவா

தூண்டி வலை போட்டாரே" [59]

என்பவற்றிலிருந்து மீன்வேட்டைக்கு இன்றைய மக்களும் வலையையும், தூண்டிலையும் பயன்படுத்துவதை அறியமுடிகின்றது.

## 3. கைவினைத் தொழில்

நாட்டுப்புறப்பாடல்களில் ஓலைத்தொழில், பொம்மை செய்தல் ஆகியவைகளைப் பற்றிய குறிப்புக்கள் கிடைத்துள்ளன.

ஓலைத்தொழிலில் பண்டைத் தமிழர் சிறந்து விளங்கினர் என்பதை அகநானூறு சுட்டியது முன்பே சுட்டப்பெற்றது. இன்றும் நாட்டுப்புற மக்கள் ஓலையைக் கொண்டு பெட்டி செய்து கொள்வதை,

"கொல்லையிலே தென்னை வைத்து

குருந்தோலை பெட்டி செய்து

சீனிபோட்டுத் திங்க - நீ

செல்லமாகப் பிறந்தவனோ" [60]

என்ற அடிகள் சுட்டும். இவ்வகையில் பண்டைக் காலத்துப் பனையோலை சிறப்பிக்கப் பெற்றது. இன்று தென்னையோலையும் சிறப்பிக்கப் பெறுகின்றது.

பண்டைக்காலத்துப் பல்வகைப் பொருட்களைக் கொண்டு செய்து கொள்ளப் பெற்ற பாவை (பொம்மை) குறித்த செய்திகள் விளக்கப்பெற்றன. இப்பொம்மை செய்யும் பழக்கம் நாட்டுப்புறப் பாடல்களிலும் குறிக்கப்பெற்றதை,

"மாவுல பொம்மை பண்ணி
மாடத்தில வச்சிருந்தேன்
பூவுல பொம்மை பண்ணி
புலத்தில வச்சிருந்தேன்" [61]

"வெச்சி விளையாட வர்ணம் வர்த்து தாரேன்
பார்த்து விளையாட பதும பண்ணித் தாரேன்
எடுத்து விளையாட எருது பண்ணித் தாரேன்
ஓடி விளையாட உண்ட பண்ணித் தாரேன்" [62]

என்ற பாடல்கள் சுட்டுகின்றன. இதில் மாவுப் பொம்மை, பூவுப் பொம்மை, வர்ணம் தீட்டப்பெற்ற பொம்மை, எருதுப் பொம்மை ஆகியவை குறிக்கப்பெறுகின்றன. இதில் குறிக்கப்பெற்றுள்ள பூவுப்பொம்மை பண்டைக்கால வழக்கத்துடன் ஒத்துக் காணப்படுவது சுட்டத்தக்கது.

## 4. பிறதொழில்

கள் சமைத்தல், சலவைத் தொழில் ஆகியவை பண்டை இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. இவ்வகைத் தொழில்கள் குறித்த செய்திகள் நாட்டுப்புறப்பாடல்களில் பதிவாகவில்லை. எனினும் கள்ளின் பயன்பாடும், சலவைத் தொழிலின் பயன்பாடும் நாட்டுப்புறத்தில் வழக்கில் இருக்கக் காணலாம். சங்க காலத்தில் கள் உருவாக்கும் தொழிலில் அரசின் கட்டுப்பாடுகள் இல்லை. தற்காலத்தில்

அரசின் கட்டுப்பாடு போன்றவை இருப்பதால் நாட்டுப்புறப்பாடல்களில் குறைந்திருக்கக் காணலாம். சலவைத் தொழில் குறித்த நிலை தற்போது நடைமுறையில் மாற்றம் பெற்ற நிலை கருத்திற்குரியது. ஆகவே, வழக்கில் அண்மைக்காலத்திய நாட்டுப்புறப்பாடல்களில் மேற்குறித்தவைகள் பதிவாகவில்லை. எனினும் இச்சிந்தனைகள் மேலும் ஆராய்வதற்குரியவை.

## 2. போர்த்தொழில்

பண்டைத்தமிழர் வாழ்வியலில் போர் முதன்மை பெற்றிருந்தது. ஆகவே, போர் சார்ந்த புழங்குபொருள்கள் மிகுதியாகச் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளதாகக் கருதலாம். காலப்போக்கில் சமூகம் போரைத் தவிர்த்து வந்தது. பிற்காலச்சமுதாயச் சூழல்களில் போர் சார்ந்த புழங்குபொருள்கள் இலக்கியங்களில் குறைவாகவே பதிவாகியுள்ளன. வில்லம்பு, ஈட்டி ஆகிய கருவிகள் குறித்த செய்திகள் மட்டுமே நாட்டுப்புற இலக்கியங்களில் பரவலாகப் பதிவாகியுள்ளன. அவற்றின் விவரம் வருமாறு:

"ஞாயிற்றுக் கிழமை
அம்பை விடலாமா
அமர்ந்த படைமேலே
அம்புக் கதிகாரி" [63]

"வடக்கே ஒரு மூங்கில்
வளருதில்ல கல்மூங்கில்
வில்லுக்கு வில்லாகும்
விஜயனுக்கு அம்பாகும்" [64]

அம்பு, வில் ஆகிய குறிப்புக்கள் இப்பாடல் வரிகளில் இடம்பெற்றிருக்கக் காணலாம். படை வீரனுக்கு வில்லம்பு சிறந்த கருவி என்பது மரபின் தொடர்ச்சிச் சிந்தனையாகவும் இருக்கக்காணலாம்.

ஈட்டி உவமையாக மட்டும் குறிக்கப் பெற்றுள்ளது. போரில் பயன்பெற்றதற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் உண்டு. நாட்டுப்புறப்பாடல்களில் போருக்குப் பயன்படுத்தப் பெற்றதாகத் தெரியவில்லை. கதைப் பாடல்களையும் ஆய்விற்குக் கருத்தில் கொண்டால் போர்க் கருவிகள், புழங்குபொருட்கள் குறித்த சிந்தனைகளும் மிகுதியாக வரலாறு மற்றும் புராணக் கதைப் பாடல்களில் கிடைத்திருக்கலாம்.

நாட்டுப்புற பாடல்களில் வாணிகம், மற்றும் கலையியல் சார்ந்த தொழிற்கான புழங்குபொருள்கள் குறித்த செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. இந்நிலை ஆய்விற்குரியது.

## 3. சமயம், சடங்கு சார்ந்த புழங்குபொருட்கள்

சமயம் சார்ந்த புழங்குபொருட்கள் குறித்த செய்திகள் பண்டைத் தமிழரிடம் இடம்பெற்ற நிலை முன்இயலில் விளக்கப்பெற்றது. அவ்வியலில் கண்ட வகைப்பாடு இங்கும் கருத்தில் கொள்ளப்பெற்றது.

1. சமயம்சார்ந்தபுழங்கு பொருட்கள்
2. சடங்குகள்சார்ந்த புழங்கு பொருட்கள்

## 1. சமயம்சார்ந்த புழங்குபொருட்கள்

சமயம்சார்ந்த புழங்கு பொருட்கள் இறைவனோடு தொடர்புடைய வழிபாட்டுடன் தொடர்புடையவை என முன்னியலில் பகுக்கப்பெற்றன.

## 2. இறைவனோடு தொடர்புடையவை

இதில் இறைவனுக்குரிய ஆடை, ஆபரணம், கருவிகள், கொடி, ஊர்தி ஆகியவை சங்க இலக்கியங்களில் பதிவு பெற்ற நிலை முன்பு மதிப்பிடப்பெற்றன. சங்க இலக்கியங்களில் சிவன், திருமால், இந்திரன், முருகன், கொற்றவை போன்ற தெய்வங்கள் குறித்த செய்திகள் பதிவாகியிருந்தன. அவைகளிலும் திருவுருவங்களை மையமிட்டுச் சில செய்திகள் கிடைத்தன. நாட்டுப்புற மக்கள் பெரும்பாலும் சிறுதெய்வ வழிபாட்டு மரபினைப் பின்பற்றுகிறவர்கள். ஆகவே, பெருந்தெய்வக் கடவுளைப் பற்றிய செய்திகள் பதிவாகவில்லை. இக்கருத்திற்கேற்பச் சான்றுகளும் கிடைக்கவில்லை எனலாம். முருகன் வழிபாடு குறித்த செய்திகள் மட்டும் பாடல்களில் பதிவாகியுள்ளன. பண்டைத் தமிழ் வழிபாட்டில் முருக வழிபாடு சிறப்புடையதாகும். எடுத்துக்காட்டாக முருகனைப் பற்றிய செய்தி பின்வருமாறு :

"உச்சியிலே சடையிருக்கும் உள்ளமாக வேலிருக்கும்" [65]

இங்கு முருகனுக்குரிய வேல் குறிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம்.

மாரியம்மன், காளியம்மன், ஐயனார் ஆகிய தெய்வங்கள் நாட்டுப்புறத்தில் பரவலாக வழக்கில் உள்ள தெய்வங்களாகும். இவ்வகைத் தெய்வங்களைக் குறித்த பாடல்களில் இறைவனோடு தொடர்புடைய புழங்கு பொருட்கள் பதிவாகியிருக்கலாம்.

எடுத்துக்காட்டாக மாரியம்மன் தாலாட்டு, கும்மிப்பாடல் போன்றவற்றைக் குறிப்பிடலாம். கருப்பசாமி போன்ற தெய்வங்களுக்குரிய தெய்வமேறிப்பாடும் பாடல்களும் நாட்டுப்புறத்தில் தனியாக வழக்கில் உண்டு. அவ்வகையில் சிறுதெய்வ வழிபாட்டுத் தெய்வங்களுக்குரிய புழங்கு பொருட்கள் வழிபாட்டுடன் தொடர்புடைய புழங்கு பொருட்கள் ஆய்வு குறித்த செய்திகள் நாட்டுப்புறப்பாடல்களில் கிடைக்கப்பெறவில்லை.

## 2. சடங்குகள்சார்ந்த புழங்குபொருட்கள்

சமயத்தில் சிறப்பிடம் பெறும் சடங்குகள் வாழ்வியலோடும் தொடர்பு பெற்றிருக்கக் காணலாம். தொழிலோடும் தொடர்பு பெற்றிருக்கக் காணலாம். பண்டைத்தமிழரிடம் மேற்குறித்த இரண்டு வகைகளிலும் செய்திகள் கிடைத்துள்ளன. நாட்டுப்புறப்பாடல்களில் தொழிற் சடங்குகள் குறித்த செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. வாழ்வியல் சடங்குகளிலும் திருமணம் மற்றும் இறப்புச் சடங்குகள் குறித்த புழங்குபொருள் செய்திகள் பரவலாகக் கிடைக்கின்றன. ஒன்று இன்பத்தை மையமிடடது. மற்றொன்று துன்பத்தை மையமிட்டது. அவ்வகையில் இன்பமும், துன்பமும் நாட்டுப் புறப்பாடல்களில் பதிவாவது இயல்பெனக் கருதலாம்.

பண்டைத் தமிழர் இறைவழிபாடு செய்தபின்னரே திருமணத்தை நிகழ்த்தியுள்ளனர். திருமணத்தில் வெண்மணல் பரப்புதல், பந்தல் அமைத்தல், தோரணங்கள் கட்டுதல், மணமுழவுகள் இசைத்தல், திருவிளக்கு இடம் பெறுதல் போன்றவைகள் தொடர்புபெற்ற நிலையைப் பண்டை இலக்கியங்களின் வழி அறியலாம்.

நாட்டுப்புற இலக்கியங்களில் மணவிழாவில் இடம்பெற்ற இசைக்கருவிகள் பலவாகக் கூறப்பெறுகின்றன. இதனை,

"சேகண்டி மல்லாரி

திமிர்தாளம் பம்பை

பம்பை பேரணி

அமளிகள் கேட்டு

பல்லக்கு முன்னடக்க

பாரிலுள்ளோர் சூழ்ந்து வர" [66]

என்பது சுட்டும். மேலும் பண்டைக் காலமக்கள் சின்மலர் தூவி. வாழத்துவதை,

"காதலர் பிரியாமல்

கவவுக்கை நெகிழாமல்

தீத றுகஎன ஏத்திச்

சின்மலர் கொடு தூவி" [67]

என்று நாட்டுப்புற இலக்கியமும் சுட:டுகின்றது, இவ்வகையில் சின்மலர் தூவி வாழ்த்தும் வழக்கம் அன்றிலிருந்து இன்று வரை தொடர்பு பெற்று வருவது குறிக்கத்தக்கதாகும்.

## தொகுப்புரை

பண்டைத்தமிழரின் வாழ்வியலின் எச்சங்கள் நாகரிகம் அடையாத நாட்டுப் புறங்களில் வாழ்வியல் எச்சங்களாகத் திகழ்கின்றன. அவ்வகையில் பண்டை இலக்கியங்களின் வழி அறியலாகும் புழங்கு பொருட்கள் குறித்த செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களின் வழி அறியலாகும் புழங்குபொருட்களோடு ஒப்பிடப்பெற்றன. தொகுக்கப்பெற்ற நாட்டுப்புறப்பாடல்களில் பதிவாகியுள்ள புழங்குபொருட்கள் இங்குக் கருத்தில்கொள்ளப்பெற்றன.

இல்லம் சார்ந்த புழங்குபொருட்கள், தொழில் சார்ந்த புழங்குபொருட்கள், சமயம் மற்றும் சடங்குமுறை சார்ந்த புழங்குபொருட்கள் என்ற மூவகைப்பாட்டில் பகுத்துக்கொள்ளப்பெற்றன. இல்லம் சார்ந்த புழங்குபொருட்கள் பல பண்டைத் தமிழரிடமும் நாட்டுப்புற மக்களிடமும் இயைந்து வருதலை இனம் காணமுடிகிறது. கல்லால் ஆனவைகளில் உரல் பற்றி நாட்டுப்புற இலக்கியத்திலும் பதிவாகியுள்ளன. அம்மி பற்றிய செய்திகள் பண்டைத்தமிழரிடம் இருந்ததற்கான சான்றுகள் இல்லை.

பண்டைத்தமிழரிடம் இடம்பெற்றிருந்த குழிசி, மிடா, குடம் பற்றிய செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ளன. நாட்டுப்புறத்தில் குழிசி என்பது பானை என்று வழங்கப்பெறுகின்றது.

பானையின் வகைகளுள் மிடாவும் ஒன்று. பானையை வைத்துச் சோறு சமைக்கும் வழக்கம் நாட்டுப்புறத்திலும் காணப்பெறுகிறது. மிடா என்பதற்குப் ‘பெரும்பானை’ என்ற பொருளும் இடம்பெறுகின்றது. குடம் பற்றிய செய்திகள் நாட்டுப்புறத்தில் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. குடிநீர் எடுப்பதற்கும், குளிப்பதற்குரிய தண்ணீர் எடுப்பதற்கும் குடம் நாட்டுப்புறத்தில் பயன்பெற்றுள்ளது. எண்ணெய், பால் போன்றவைகளைக் குடத்தில் வைக்கும் பழக்கமும் இருந்திருக்கின்றது. பால்குடம் சமயச் சடங்கோடு தொடர்பு பெறுகின்றது,

இலை, நார், மரம் போன்றவைகளால் செய்யப்பெற்ற புழங்கு பொருட்கள் பண்டைத்தமிழரிடமும் மிகுந்திருந்தன. இந்நிலைக்குக் காரணம் அவர்கள் இயற்கையோடு தொடர்புடைய வாழ்க்கையை வாழ்ந்தார்கள் எனக் கருதலாம். தற்காலத்திலும் வாழையிலை, தேக்கிலை போன்றவை விருந்துக் காலத்தில்

பயன்படுத்தப்பெறுகின்றது. பனையோலையை வடிவமைத்துப் பதநீர் அருந்தும் பழக்கம் நாட்டுப்புற மக்களிடம் உண்டு. பண்டைக்காலத்துப் பனையோலையால் ஆகிய குடை போன்ற கருவிகள் நாட்டுப்புற மக்களிடம் இல்லை. நவீனக் குடைகள் வழக்கத்தில் வந்துள்ளன.

வட்டில், கடகம் போன்ற பெட்டிகள் பண்டைத் தமிழரிடம் இருந்தன. இவ்வட்டில் நாட்டுப்புற இலக்கியங்களில் குறிக்கப்பெற்றுள்ள ஓலைப் பெட்டியுடன் தொடர்பு பெறுவதைக் காணலாம். ஓலைப்பெட்டியைக் குறித்த செய்திகள் நாட்டுப்பாடல்களில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

பண்டைத்தமிழரிடம் இருந்த கூடை தற்கால நாட்டுப்புற வழக்கிலும் இருக்கக் காணலம். அக்கூடை பனை, தென்னை போன்றவைகளைக் கொண்டு செய்யப்பெற்றன. பொருள்களைக் கூடைமேல் கூடை வைத்துக்கொண்டு செல்லும் வழக்கம் தற்காலத்தில் நடப்பில் உண்டு. கூடை, பெட்டி முடைதல் போன்றவை தற்போதும் வழக்கில் உள்ளமை கருதத்தக்கது.

பண்டைத்தமிழர் ‘பறி’ எனக் குறித்த பாய், தற்காலத்தில் நாட்டுப்புறத்தில் வழக்கில் உள்ளது. ஓலைப்பாய்கள் நாட்டுப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளன. நாட்டுப்புறத்தில் கோரைப்புற்களைப் பயன்படுத்திச் செய்யும் தொழில் சிறந்த கைத்தொழிலாக விளங்குவதைக் காணலாம். மரத்தாலான புழங்கு பொருட்கள் பண்டைக்காலத்தில் மிகுந்திருந்தன. மரஉரல் மற்றும் உலக்கை போன்றவை குறித்த செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களில் கிடைக்கின்றன. உலக்கை குறித்த செய்திகள் இரண்டிலும் இடம்பெற்றிருக்கக் காணலாம்.

மரத்தால் இயன்ற அளவைக் கருவியைப் பண்டைக்காலத்தில் 'அம்பணம்' என்று குறித்துள்ளனர். நாட்டுப்புறத்தில் அளக்கப்படும் மரத்தால் ஆன மரக்கால் இங்குக் கருதத்தக்கது.

பண்டைத் தமிழரிடம் இடம்பெற்றிருந்த உலோகத்தால்இயன்ற பொருட்களில் விளக்கு, ஊசி ஆகியவை குறித்த செய்திகள் மட்டுமே நாட்டுப் புறப்பாடல்களில் கிடைக்கின்றன.

தற்காலத்தில் செம்பினால் ஆகிய 'செப்பு' நாட்டுப்புறத்திலும் இடம் பெற்றிருக்கக் காணலாம். நாட்டுப்புறத்தில் வழங்கும் செம்பு, செப்புக் குடம் ஆகியன கருதத்தக்கன.

தொழில்சார்ந்த புழங்குபொருட்களில் வாழ்வியல் தொழில் சார்ந்த புழங்குபொருட்கள் நாட்டுப்புறப்பாடல்களில் மிகுதியாகக் குறிக்கப்பெறுகின்றன. போர்த்தொழில், வாழ்வியல் தொழில், கலையியல் தொழில் குறித்த புழங்குபொருட்கள் அவ்வளவாக நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறவில்லை.

வாழ்வியல் தொழில்களில் கைத்தொழில் குறிக்கத்தக்கது. இத்தொழில் வகையில் பயிர்த்தொழில் அடங்கும். பயிர்த்தொழிலில் முதன்மையான நாஞ்சில் நாட்டுப்புறத்தில் கலப்பை, மேழி, ஏர் எனக் குறிக்கப்பெறுகின்றது. பண்டைத்தமிழரின் பயிர்தொழிற் கருவிகளான தளம்பு, ஆம்பி, கிழார், துளர் ஆகியவை நாட்டுப்புறப்பாடல்களில் குறிக்கப்பெறவில்லை. நாட்டுப்புற மக்களிடம் தளம்பு - பரம்பு என்றும், அம்பி, கிழார் ஆகிய நீர் இறைக்கும் கருவிகள் - நீர் இறைவாய்ப்பெட்டி என்றும், துளர் - களைக்கொட்டு என்றும் வழங்கப்பெறுகின்றன. தற்போது நடைமுறையில் பயன்பாட்டிலும் உள்ளன.

பண்டைத் தமிழர்கள் விளைந்த பயிர்களைப் பறவைகளிடமிருந்து விலங்குகளிடமிருந்தும் பாதுகாக்க பல கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவிகள் பல இன்று வழக்கத்தில் இல்லை. வில், கிலுக்குப் பிரம்பு என்ற இரு கருவிகள் மட்டுமே நாட்டுப் பாடல்களில் பதிவாகியுள்ளன. இக்கருவிகளும் நாட்டுப்புறத்தில் கிளிகளை விரட்டப் பயன்பெற்றதாகத் தெரிகிறது.

விளைந்த பயிர்களை அறுப்பதற்குப் பண்டைக் காலத்தில் கூர்மையான வாளைப் பன்படுத்தியுள்ளனர். தற்போது நாட்டுப்புறப்பாடல்களில் குறிக்கப்பெறும் கதிர் அறுவாள் இங்குக் கருதத்தக்கதாகும்.

நெசவுத் தொழில், கொல்லுத்தொழில் சார்ந்த புழங்குபொருட்கள் நாட்டுப்புறப்பாடல்களில் அவ்வளவாகப் பதிவாகவில்லை. பெரும்பாணாற்றுப்படையில் குறிக்கப்பெற்ற அரம் இங்குக் கருதத்தக்கது. நாட்டுப்புறத்திலும் இக்கருவிகள் இடம்பெற்றுள்ளததைக் காணலாம். உளி குறித்த செய்திகள் பண்டை இலக்கியத்திலும், நாட்டுப்புற இலக்கியங்களிலும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

நிலம்சார் தொழில்களில் வேட்டையாடுதல், மீன்பிடித்தல் கருதத்தக்கன. பண்டைத் தமிழர் பயன்படுத்திய வலையையும், தூண்டிலையும் பயன்படுத்தியது போன்றே நாடடுப்புற மக்களும் பயன்படுத்தினர் என்பது சுட்டத்தக்கது.

பண்டைத்தமிழர் ஓலைத் தொழிலில் சிறந்து விளங்கினர். குறிப்பாக பனையோலை, தென்னையோலையைப் பயன்படுத்திப் பலவகைப் பொருட்களை உருவாக்கினர். பாவை என்ற பொம்மைகளையும் செய்தனர். நாட்டுப்புறப்பாடல்களில் ஓலைத்தொழில், பொம்மை செய்தல் இன்றளவும் வழக்கில் இருக்கக் காணலாம்.

பண்டைத் தமிழரின் வாழ்வியலில் போர்த்தொழில் முதன்மை பெற்றிருந்தது. அதனால் போர்தொடர்பான கருவிகளும் இலக்கியங்களில் பதிவாகியிருந்தன. பிற்காலத்தில் போரின் தேவை குறைய ஆரம்பித்தது. சமூகம் போரைத் தவிர்த்த சூழலில் மேன்மையடையத் தொடங்கியது. ஆகவே, நாட்டுப்புற இலக்கியங்களில் போரை சார்ந்த புழங்குப் பொருட்கள் மிகுதியாகப் பதிவுபெறவில்லை. எனினும், அம்பு, வில், ஈட்டி போன்ற போர்க்கருவிகள் நாட்டுப்புறப்பாடல்களில் பதிவாகியுள்ளன. புராணக்கதைப்பாடல் மற்றும் வரலாற்றுக்கதைப் பாடல்களை ஆய்விற்கு உட்படுத்தினால் மிகுதியான போர்க்கருவிகள் குறித்த செய்திகள் கிடைக்கலாம்.

பண்டை இலக்கியங்களில் இடம்பெற்ற வாணிகம் மற்றும் கலையியல் சார்ந்த புழங்குபொருட்கள் பற்றிய செய்திகள் நாட்டுப்புற இலக்கியங்களில் கிடைக்கவில்லை.

நாட்டுப்புற மக்களுக்கு உரிய சமயம் நாட்டுப்புறச்சமயம் (Folk Religion) எனலாம். அவ்வகையில் சிறுதெய்வவழிபாட்டினை ஒட்டிய சமயச் சிந்தனைகளும் சடங்குச் சிந்தனைகளும் மிகுதியாக இடம்பெற்றிருக்கக் காணலாம். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பெருந்தெய்வங்களுக்குரிய ஆடை, ஆபரணம், கருவி, கொடி, ஊர்தி ஆகியவை குறித்த செய்திகள் பதிவாகியிருந்தன. நாட்டுப்புற இலக்கியங்களில் அவ்வகைப் பதிவுகள் இடம்பெறவில்லை. எனினும் பெருந்தெய்வ வழிபாட்டைச் சார்ந்த முருகனைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. சிறுதெய்வ வழிபாட்டுடன் தொடர்புடைய நாட்டுப்புறத் தெய்வங்கள் குறித்த பாடல்களைக் கருத்தில் கொண்டால் சிறுதெய்வ வழிபாட்டுடன் தொடர்புடைய புழங்குபொருள் பற்றிய செய்திகள்

கிடைக்க வாய்ப்புண்டு. (எ.கா) மாரியம்மன் தாலாட்டு அம்மை நோய்வாய்ப்பட்ட பொழுது பயன்படுத்தப்பெறும் பாடலாகும். அவைகள் தனித்த விரிந்த ஆய்விற்குரியவை.

சமயத்தில் சடங்குகளுக்குச் சிறப்பான இடமுண்டு. பண்டைத்தமிழரிடம் நிலவிய சடங்குகளில் பயன்பட்ட புழங்குபொருள் குறித்த செய்திகளைப் பண்டை இலக்கியங்கள் விரிவாகப் பதிவுசெய்துள்ளன. நாட்டுப்புறப் பாடல்களில்வாழ்வியலோடு தொடர்புடைய சடங்குகள் பற்றிய சில செய்திகள் கிடைக்கின்றன. குறிப்பாகத் திருமணம் மற்றும் இறப்புச் சடங்கைக் குறிக்கலாம். திருமணம் இன்பத்தோடு தொடர்புடையது. இறப்புத் துன்பத்தை மையமிட்டது.

திருமணச் சடங்கில் பண்டைத்தமிழரிடம் இடம்பெற்றிருந்த இசைக்கருவிகள் இசைக்கும் பழக்கம் நாடடுப்புற இலக்கியங்களிலும் பதிவாகியுள்ளன. ஆனால், நாட்டுப் புறப்பாடல்களில் குறிக்கப்பெறும் சேகண்டி, மல்லாரி, திமிர்தாளம், பம்பை போன்ற இசைக்கருவிகள் பண்டைத் தமிழிரிடமும் இருந்தனவா? என்பது மேலும் ஆய்விற்குரியதாகும்.

இறப்புச் சடங்கோடு தொடர்புடைய சாக்காட்டுப்பறை, பாடை, தர்ப்பைப்புல் படுக்கை ஆகியவை பண்டைத்தமிழ் இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. நாட்டுப்புற இலக்கியங்களில் இறப்புச்சடங்கோடு தொடர்புபெறும் உருமி, சங்கு போன்ற இசைக்கருவிகளும், பாடை என்கிற பயன்பாட்டுப் புழங்குபொருட்களும் குறிக்கப்பெறுகின்றன. இசைத்தல் என்ற தொழில் ஒன்றுபடுகின்றது. ஆனால் கருவிகள் வேறுபடுகின்றன.

நாட்டுப்புற இலக்கியத்தில் தொகுக்கப்பெற்ற சில நாட்டுப்புறப் பாடல்களே இங்குஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்றன. கதைப்பாடல், கதைகள், கலைகள் போன்றவற்றையெல்லாம் விரிவான ஆய்விற்கு உட்படுத்தினால் நாட்டுப்புற மக்களுக்குரிய புழங்கு பொருட்கள் குறித்த செய்திகளை விரிவாக ஆராயலாம்.

## சான்றெண் விளக்கம்

1. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 161.
2. கழகப் பழமொழிகள், ப. 9.
3. மேலது, ப. 51.
4. மேலது, ப. 50.
5. மேலது ப. 53.
6. மா.கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 345.
7. நா. வானமாமலை, தமிழர்நாட்டுப் பாடல்கள், ப. 213.
8. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 323.
9. நா. வானமாமலை, தமிழர்நாட்டுப் பாடல்கள், ப. 306.
10. மேலது, ப. 221.
11. மேலது, ப. 74.
12. கழகப் பழமொழிகள், ப. 20.
13. மேலது, ப. 88.
14. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, ப. 366.
15. நா. வனமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 158.
16. கழகப் பழமொழிகள், ப. 102.
17. நா. வானமாமலை, தமிழர்நாட்டுப் பாடல்கள், ப. 138.

18. மேலது, ப. 145.

19. கழகப்பழமொழிகள், ப. 30.

20. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 169.

21. மேலது, ப.51.

22. மேலது, ப. 215.

23. மேலது, ப. 222.

24. மேலது, ப. 194.

25. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 327.

26. மேலது, ப. 327.

27. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 321.

28. கழகப் பழமொழிகள், ப. 20.

29. மேலது, ப. 73.

30. மேலது, ப. 22.

31. மேலது, ப. 74.

32. மேலது.

33. மேலது, ப. 75.

34. மேலது.

35. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 449.

36. மேலது, ப. 245.

37. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாடடுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, ப. 342.

38. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 54.

39. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாடடுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, ப. 327.

40. கழகப்பழமொழிகள், ப. 81.

41. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 250.

42 மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 327.

43. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 449.

44. மேலது, ப.135.

45. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 326.

46. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 69.

47. மேலது, ப.72.

48. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாடடுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, ப. 343.

49. மேலது, ப. 364.

50. மேலுது, ப. 344.

51. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 422.

52. கழகப் பழமொழிகள் ப. 76.

53. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 482.

54. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 437.

55. மேலது, ப. 440.

56. கழகப்பழமொழிகள், ப. 18.

57. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாடடுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, ப. 368.

58. மேலது, ப. 369.

59. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 93.

60. மேலது, பக். 105-106.

61. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 464.

62. மேலது, ப. 371.

63. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 417.

64. மேலது, ப. 92.

65. மா. கோதண்டராமன், வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள், ப. 424.

66. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 292.

67. மேலது, ப. 275.

ஒவ்வொரு இயலிலும் முடிவுரை தொகுத்தளிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பெற்றுள்ளது. அவைகளில் தேர்ந்தவற்றைத் தொகுத்தளிப்பதாக இப்பகுதி அமைகிறது.

மனிதனை அடையாளங்கான விரிந்த எல்லையாக விளங்குவது மானுடவியல் துறையாகும். மலினாவ்ஸ்கி, ராட்கிளிப் - பிரௌன் ஆகியோர் அமைப்பியல் செயல்பாட்டு அணுகுமுறையை மானுடவியல் துறையில் வளர்த்துள்ளார்கள். இத்துறை உயிர்வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களின் அடிப்படையைத் தாண்டிய விளக்கத்தின் துணையில் வளர்ச்சிபெற்று வருவதாகக் கருதுகின்றனர். மேலும் குழுக்களை ஆராயும் போக்குகளிலிருந்து பின்னைக் காலனித்துவக் கூறுகளை ஆராயும்முறை மார்க்சிய மானுடவியலில் உருவாவதைக் கூறுவர்.

மானுடவியலில் பண்பாட்டு மானுடவியல் குறிக்கத்தக்க வளர்ச்சி பெற்று வருகிறது. மானுடவியல் துறை தனித்தும் பிறதுறைகளைச் சார்ந்தும் வளர்ச்சி பெற்று வருகிறது. பண்பாட்டு மானுடவியலில் புழங்கு பொருட்கள் குறித்த சிந்தனைக்கு முதலிடம் உண்டு.

புழங்கு பொருட்களை அடிப்படையாகக் கொண்டு தொன்மைக் காலம் - பண்டைக் காலம் - அண்மைக்கால மக்களின் பண்பாட்டை அறிந்து கொள்ளுதல் இயலும். அம்முறையில் பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்களைப் பண்டைத் தமிழ் இலக்கியங்களின் வாயிலாக அறியும் முயற்சி இவ்வாய்வில் கருத்தில் கொள்ளப்பெற்றது.

மானுடவியலின் ஒருவகையான பௌதீக மானுடவியலில் மனிதனின் புற வளர்ச்சியைப் பற்றிய செய்திகள் கருத்தில் கொள்ளப்பெறும். அகவளர்ச்சி சார்ந்த பண்பாடும் கருத்தில் கொள்ளப்பெறும்போது புதிய ஆய்வுச் சிந்தனைகள் கிடைக்க ஏதுவாகும்.

புழங்குபொருள்களின் பயன்பாடு முதன்மை பெறும் எனினும் பயன்பாட்டுடன் உணர்வு, நம்பிக்கை, விழுமியம் இவைகளும் இணைகிறபோது முதன்மையுடன் முழுமையும் கிடைக்கிறது.

புழுங்கு பொருட்களின் உருவாக்கத் திறன் மரபாகவே நிலைபெற்று வருகிறது. உத்திகளும் வடிவமைப்புகளும் கூட மரபின் வழியாகவே வருகின்றன. புழங்கு பொருட்களின் வழியாகக் குறிப்பிட்ட சாதி, இனம், வட்டாரம் ஆகியன அடையாளப்படுத்தப்பெறுவது கருதத்தக்கதாகும்.

புரோவர் என்பவர் புழங்கு பொருட்களின் உற்பத்தியில் ஆண்கள் மற்றும் பெண்களின் பங்கு குறித்து விரிவாக ஆராய்ச்சி செய்து கோட்பாடுகளை உருவாக்கியிருக்கின்றார். ஆகவே, புழங்கு பொருட்கள் குறித்த ஆய்வு கோட்பாட்டு நிலையில் நிலைபெற்று இருப்பதும் கருதத்தக்கதாகும்.

மண்பாண்டத் தொழில் குயவர்களோடு அடையாளப்படுத்தப் பெறுகின்றது. இங்கு குயவன் சாதியத்தின் வழி அடையாளப்படுத்தப்பெறுகின்றான். குயவன் செய்யும் தீச்சட்டி வழிபாட்டுடன் தொடர்பு பெறுகிறது. அம்முறையில் பயன்நிலையில் பண்பாட்டுப் பதிவுகள் உருவாவதும் கருதத்தக்கதாகும்.

இவ்வாறு வேறுபடும் அடையாளப் பதிவுகளை ஆய்வாளர்கள் கருத்தில் கொள்ளவேண்டும்.

கைவினைப் பொருள்கள் புழங்குபொருள் பண்பாட்டில் தொடர்புபெறுகின்றன. அவைகள் அழகுபடுத்தப்பெறும் போது கைவினைக் கலைப்பொருள்களாக உருவாகின்றன. இயற்கை வளங்களைக் கலைப்படைப்புக்களாகவும் பண்பாட்டுத் தொடர்புடையவைகளாகவும் மாற்றிக் கொள்வது புழங்குபொருள் பண்பாடு ஆகும். குறிப்பாகப் பண்பாட்டின் கண்ணாடி புழங்குபொருள் என மதிப்பிடலாம்.

புழங்குபொருள் எவை எவை என்கிற வரையறை முற்றுப்பெறவில்லை எனினும் ஆய்வு எல்லை கருதி, இல்லம் சார்ந்த புழங்குபொருட்கள், தொழில் சார்ந்த புழங்கு பொருட்கள், சமயம், சடங்கு முறை சார்ந்த புழங்குபொருட்கள், அன்றும், இன்றும் என வகைப்படுத்தப்பெற்று இவ்வாய்வில் மதிப்பிடப்பெற்றன.

'இல்லம்' என்பதற்கு வீடு என்பது பொருள். வீட்டில் சமைத்தல், பரிமாறுதல், சேமித்தல் போன்ற செயல்களோடு புழங்கு பொருள்கள் தொடர்பு பெறுகின்றன. அப்புழங்குபொருட்கள் கள், மண், இலை, நார், உலோகம் ஆகியவைகளில் ஒன்றோடு உருவாக்கப்பெறும் நிலை கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

கல், மண் என்ற இரண்டில் மண்ணால் ஆன புழங்குபொருட்கள் பண்டைத் தமிழரிடம் மிகுந்திருந்தமையைப் பண்டை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. கல்லால் ஆன உரல் பற்றிய குறிப்பு மட்டும் இலக்கியங்களில் குறிக்கப்பெறுகின்றன. இவ்வுரல் மூங்கில் நெல், வெண்ணெல் ஆகியவற்றைக் குற்றப் பயன்படுத்தப்பெற்றது என அறியமுடிகின்றது.

பச்சை மண்ணால் செய்யப்பெற்ற பாண்டங்களை விடச் சுடப்பெற்ற மண்பாண்டங்கள் நீடித்திருக்கும் என்ற கருத்துப் பண்டைக்காலத்தில் நிலவியிருந்தது. பண்டைத் தமிழ் இலக்கியத்தில் குழிசி, மிடா, தசும்பு, குடம், கன்னல், சாடி, மண்டை, அகல், வள்ளம், குதிர், தாலம், பிழா, கறவைக்கலம் ஆகிய புழங்குபொருட்கள் பற்றிய செய்திகள் பதிவாகியுள்ளன.

குழிசி சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. 'குழி' என்பது பள்ளமாகும். குழிவான அமைப்புக்கொண்ட பானை 'குழிசி' எனப் பெயர் பெற்றதாகலாம். இச்சொல் புறஇலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளமையை அறிய முடிகின்றது. உணவு சமைப்பதற்கும், தயிர்கடைவதற்கும் இப்பானை பயன்பெற்றமையைத் தெளிவாக உணர முடிகிறது. மேலும் ஊர்த்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறையிலும் தொடர்பு பெற்றிருக்கின்றது. சோறு சமைக்கும் பானை இலக்கியங்களில் மிடா என்றும் மடா என்றும் அழைக்கப்பெற்றிருக்கின்றது.

தசும்பு, குடம் ஆகியவற்றில் பால், தயிர், கள் ஆகியவற்றை இட்டு வைத்திருக்கின்றனர். குறிப்பாக, பிறைதுளியிட்டுத் தேய்த்ததற்குரிய கலனாகப் பயன்பெற்றமை குறிப்பிடத்தக்கதாகும்.

கன்னல் என்னும் கரகம் பற்றித் தொல்காப்பியம் குறிக்கிறது. காலத்தை அளந்தறியும் நாழிகை வட்டில் குறுநீர்க்கன்னல் என அழைக்கப்பெற்றிருக்கின்றது. குறிப்பாக நீர் குளிர்ந்த தன்மையுடன் இருக்க, இக்கன்னல் உதவியுள்ளது.

கள் நிறைப்பதற்கும், நீர் முகப்பதற்கும் சாடி என்கிற கலன் பயன்படுத்தப் பெற்றிருக்கிறது. இதற்கு மூடியும் உண்டு. மண்டை என்னும் கலன் பண்டைக் காலத்தில் பாணர் விறலியர் ஆகியோரிடம் மிகுதியான பயன்பாட்டில் இருந்திருக்கின்றது.

குறிப்பாக மீன் நிறைத்துவைப்பதற்கும், கள் உண்பதற்கும், இரப்பதற்கும் மண்டை பயன்படுத்தப்பெற்றதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

காடி என்னும் கலன் புளிப்புத் தன்மையுடைய பொருட்களை வைத்துக்கொள்ளப் பயன்படுத்தப்பெற்றிருக்கின்றது.

உணவு சமைப்பதற்கும் சமைத்ததை வைத்து உண்பதற்கும் அகல் என்னும் கலன் பயன்படுத்தப்பெற்றது. இக்கலன் அகன்ற வாயினையும் கீழ்பகுதி தரையில் வைக்கும்படியான அமைப்பையும் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. கரிய அகல் எனச் சுட்டப்பெறுவதால் கருமை நிறத்துடன் இருந்திருக்கவேண்டும். பால், தேறல் போன்ற நீர்மப் பொருள்களை உண்பதற்கு வள்ளம் என்னும் கலனைப் பயன்படுத்தியுள்ளனர். உண்பதற்குரிய கலன்களாக தாலம், பிழா (தட்டு) போன்றவைகளும் பயன்படுத்தப்பெற்றதாகத் தெரிகிறது. கறவைக்கலம் என்பது பால் கறப்பதற்குரிய கலமாக இருந்திருக்கின்றது.

நெற்கூட்டில் தானியங்களைச் சேமித்திருக்கின்றனர். அது ஏணிக்கும் எட்டாத நீண்ட உயரத்தில் இருந்திருக்கின்றது.

உண்பதற்குரிய இலை வகைகளில் ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை ஆகியவை வழக்கில் இருந்தன.

பனையோலையை வடிவப்படுத்தி திட, திரவப்பொருட்களைப் பண்டைத்தமிழர் உண்டிருக்கின்றனர். வட்டில் (பெட்டி) எடுகலனாகப் புழங்கப்பெற்றுள்ளது.

'பறி' என்னும் ஓலைப்பாய் படுக்கைக்குரிய புழங்கு பொருளாகும். ஓலையில் செய்த குடையை மழைக்காலத்தில் பண்டைத் தமிழர் பயன்படுத்தியுள்ளனர்.

திரிமரம், உரல், உலக்கை, மத்து, அம்பணம், கட்டில், தூதை ஆகிய மரத்தாலான புழங்குபொருட்கள் இலக்கியங்களில் குறிக்கப்பெறுகின்றன. மரத்திரிகை, திரிமரம் எனக்குறிக்கப்பெறுகின்றது. இது உறுதியானதாகவும் கரிய நிறத்துடனும் இருந்திருக்கின்றது.

மரத்தால் ஆன உரலைத் தானிய வகைகளைக் குற்றி அரிசியாக்கப் பண்டைத் தமிழர் பயன்படுத்தியுள்ளனர்.

தானிய வகைகளை உரலில் இட்டுக் குற்றுவதற்கு உலக்கை என்னும் புழங்குபொருள் உதவுகின்றது. உலக்கை (வயிரம் பாய்ந்த) கருமை நிறமுடையதாக இருந்திருக்கின்றது. ஆயர் தயிர் கடைவதற்கு மத்து என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர்.

தானியங்களை அளக்கும் அளவைக் கருவியாகிய மரக்கால் பண்டைக்காலத்தில் 'அம்பணம்' என்று அழைக்கப்பெற்றுள்ளது.

பண்டைத்தமிழர் பொன், வெள்ளி, இரும்பு, செம்பு ஆகிய உலோகங்களைக் கொண்டு தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்து கொண்டுள்ளனர்.

பொன்னாலியன்ற கலன்களை 'பொற்கலம், பொலங்கலம்' என்ற சொற்களால் குறித்துள்ளனர். இக்கலன் அரசரிடமும், செல்வந்தரிடமும் புழக்கத்தில் இருந்தமையையும், அரசர் கள்ளுண்டு கழிப்பதற்கும், செல்வந்தர் திட, திரவப்பொருட்களை உண்பதற்கும் பயன்படுத்தியமையும் குறிக்கத்தக்கது.

பொன்னைக்கொண்டு செய்து கொள்ளப்பெற்ற மண்டை 'பசும்பொன் மண்டை' என்று வழங்கப்பெற்றுள்ளது. இது அரசர் கள் உண்பதற்கும், அவரிடம் பணிபுரியும் வீரர்களுக்கு உணவு கொடுப்பதற்கும் பயன்பெற்றுள்ளது.

அரண்மனையில் உணவு உண்பதற்கு வெள்ளியாலான கலன் பயன்பெற்றுள்ளது.

மணிகள் பதித்து அழகுடன் செய்து கொள்ளப்பெற்ற கலங்கள் 'மணிக்கலம்' என்று அழைக்கப்பெற்றுள்ளது. இது தேறலைப் பெய்து வைப்பதற்கு உதவியுள்ளது.

இரும்பால் இயன்ற விளக்கு, எ∴கு, மயிற்குறை கருவி, ஊசி, காழ் ஆகிய புழங்கு பொருட்கள் தொழில் சார்ந்த புழங்கு பொருட்களாக இடம்பெற்றிருக்கின்றன.

மாலைப்பொழுதில் இரும்பாலாகிய விளக்கு ஏற்றப்பெற்று நெல்லும் மலரும் தூவி வழிபடப்பெற்றமை குறிக்கத்தக்கதாகும்.

'இரும்பு', 'எ∴கு' ஆகிய இரண்டும் கத்தியைக் குறிக்கும் சொற்களாகும். இல்லங்களில் மாவடுவினை வெட்டுவதற்கும், இறைச்சியை அறுப்பதற்கும் பயன்பெற்றுள்ளது.

மகளிர் கூந்தலைச் சரி செய்ய 'மயிற்குறை கருவி' பயன்பெற்றுள்ளது. இது விலங்குகளின் மயிரினைக் குறைக்கவும், மகளிர் கூந்தலைக் குறைத்துச் சரிசெய்வதற்கும் உரிய புழங்குபொருளாக இருந்திருக்கின்றது.

பண்டைத் தமிழர் ஊசியைத் தைக்கும் கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். கட்டில் கட்டுதல், பூக்களைக் கோர்த்தல், வீரர் மார்பில் ஏற்படும் புண்களைத் தைத்தல் ஆகியவற்றிற்கு ஊசியைப் பயன்படுத்திய நிலை தெரியவருகின்றது.

இறைச்சியைப் பக்குவப்படுத்தி உண்பதற்குக் காழ் என்னும் கம்பி பயன்பெற்றுள்ளது. இது கடினத்தன்மையும் கருமை நிறமும் உடையதாக இருந்திருக்கின்றது.

செம்பினைக் கொண்டு செய்யப்பெற்றது 'செப்பு' என்னும் கருவியாகும். இது பூக்களை வைப்பதற்குரிய செப்புக்கிண்ணமாகவும், வெப்பத்தினையுடைய நீரினைச்சேமித்து வைக்கும் குடுவையாகவும் இருவேறு வடிவங்களில் இருவேறு செயல்களுக்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

தொல்காப்பியக் கருப்பொருள் குறித்த நூற்பாவில் சுட்டப்பெறும் 'செய்தி' என்னும் சொல் தொழிலைக் குறிப்பதாகும். பண்டைக்கால மக்களின் தொழில்கள் ஐவகைத்திணைகள் சார்ந்த தொழில்களாகத் திகழ்ந்தன. தொல்காப்பியத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவிற்கான தொழில்களையும் எழுவகைத் தொழில்களையும் தொல்காப்பியர் குறித்துச் செல்கின்றார். சங்க இலக்கியங்களில் உள்ள தொழில் சார்ந்த புழங்குபொருட்களை அறிவதற்கு முன் தொழில் பற்றிய கருத்துருவாக்கம் தேவையான முயற்சியாக அமைகிறது.

உழைப்பு, பணம் சம்பாதித்தல், கருவிகள் உற்பத்தி, தொழிற்திறம் ஆகியவைகள் தொழிலோடு தொடர்புபெறுகின்றன. தொழிலில் உழைப்பு முதன்மைக் கருத்திற்குரியது. இவ்வாய்வில் தொழில் சார்ந்த புழங்கு பொருட்களை, வாழ்வியல் தொழில், போர்த்தொழில், வாணிகத் தொழில், கலையியல் தொழில் என வகைப்படுத்தப்பெற்று மதிப்பிடப்பெற்றன.

மக்களின் வாழ்வியலோடு நேரடித் தொடர்புபெற்ற வாழ்வியல் தொழில் விரிந்த களத்தை உடையது. ஆகவே, கைத்தொழில், நிலம்சார் தொழில், கைவினைத் தொழில், பிறதொழில்கள் என்கிற உட்தலைப்புகளின் வழிப்பகுத்து ஆய்வு அமைத்துக் கொள்ளப் பெற்றது.

கைத்தொழில் வகையில் கைத்திறம் மற்றும் சிறுகருவிகளைப் பயன்படுத்திச் செய்யப்பெறும் தொழில்கள் அடங்கும். அம்முறையில் பயிர்த்தொழில், நெசவுத்தொழில், தச்சுத்தொழில், மட்கலத்தொழில், கொல்லுத்தொழில், உலோகத்தொழில் போன்றவை இடம்பெற்றிருக்கக் காணலாம்.

நாஞ்சில் உழுவதற்கும் பயன்படும் கருவியாகும். இக்கருவியின் அமைப்புப் பெண் யானையின் வாயை ஒத்து வளைந்தும் அதில் பொருத்தப்பெற்றுள்ள பெரும்கொழு உடும்பின் முகம்போன்று வளைந்தும் இருக்கும் என்பதை அறியமுடிகின்றது. இந்நாஞ்சிலை வைப்பதற்குத் தனிக்கொட்டில்கள் இருந்திருக்கின்றன. தற்காலத்தில் நாஞ்சில்-கலப்பை என்று அழைக்கப்பெறுவது கருதத்தக்கதாகும்.

இன்று பரம்பு என்று அழைக்கப்பெறும் சேற்று வயலைச் சமப்படுத்தும் கருவி அக்காலத்தில் தளம்பு என அழைக்கப்பெற்றுள்ளது. ஆம்பி என்பது ஏற்றக்கருவியாகவும், கிழார் என்பது தோட்டப்பயிர்களுக்கு நீரிறைக்கும் கருவியாகவும் பண்டை நாளில் பயன்படுத்தப்பெற்றிருக்கின்றன. நாட்டுப்புறத்தில் களைக்கொட்டு என அழைக்கப்பெறுவது பண்டைநாளில் துளர் என்று அழைக்கப்பெற்றுள்ளது. இது பயிர்களுக்கிடையேயான களையை அகற்றுவதற்கு உதவும் கருவியாகும். விளைந்த பயிர்களைப் பறவைகளிடமிருந்து பாதுகாக்கப் பல கருவிகள் பயன்பட்டிருக்கின்றன. அகம் சார்ந்த நூல்கள் கிளிகடிகருவிகளை மிகுதியாகக் குறிப்பிடுகின்றன. குறிப்பாகக் 'குளிர்' என்ற கருவியைப் பற்றிய செய்திகள் மிகுந்துள்ளன. மூங்கிலை வீணைபோல் கட்டித்தெரிக்கும் கருவி என அதன் வடிவம் பற்றிப் பிற்காலத் தஞ்சைவாணன்கோவை உரையாசிரியர் குறிப்பிடுகிறார்.

தட்டை என்னும் கிளி கடிகருவி இருபகுதியாகப் பிளந்த வாயை உடையதாக இருந்திருக்கின்றது. ஓசை விட்டுவிட்டு ஒலி எழுப்பும் தவளையின் ஒலியோடு இணைத்துப் பேசப்பெறுகிறது. இதுவும் மூங்கிலால் ஆனதாகும். தழல் என்பது கையால் சுற்றி ஓசை எழுப்பும் ஒரு வகைக் கருவியாகும். குளிர், தட்டை, தழல் ஆகிய கிளிகடி கருவிகளைப் பெண்கள் மட்டும் பயன்படுத்தியுள்ளனர்.

விலங்குகளிடமிருந்து தினைப்புனப் பயிர்களைப் பாதுகாக்க வில் அம்பு, கவண்கல் ஆகியவைகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. வில்லம்பு யானைகளையும், கவண்கல் பறவைகளையும் விரட்டப்பயன்பெற்றுள்ளன. மேலும், யானையை எறிகொல்லி கொண்டும், பன்றியைக் குறுந்தடி கொண்டும் விரட்டிய செய்திகள் கிடைக்கின்றன. பயிர் அறுவடைக்கு முன் பறவைகள் பயிரிடையே கூடுகட்டுதலைத் தவிர்ப்பதற்கு இசைக்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். குறிஞ்சி நிலத்தில் வட்டமான வாயினையுடைய தொண்டகச் சிறுபறையையும், தண்ணுமையையும் பயன்படுத்திய நிலையை இலக்கியங்களின் வழி உணர முடிகின்றது. தினைப் புனத்தைப் பறவைகளிடமிருந்து பகலில் பாதுக்கப் பெண்களும், இரவில் விலங்குகளிடமிருந்து பாதுகாக்க ஆண்களும் சென்றிருக்கின்றனர். ஆண்கள் செல்லும்போது வில்லம்பு, கவண்கல், வேல், நெகிழி, அடார், குறுந்தடி ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

விளைந்த நெற்கதிர்களை அறுக்க வளைந்து காணும் கூர்மையான வாளைப் பயன்படுத்தியுள்ளனர்.

பண்டைத்தமிழர் கரும்பிலிருந்து சாறு பிழிவதற்கு இயந்திரம் ஒன்றை பயன்படுதுதியுள்ளனர். எனினும், அதற்குரிய புழங்குபொருள்கருவிகள் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

நெசவுத்தொழிலில் பண்டைத் தமிழர் மேன்மை பெற்றிருந்தனர். பருத்தி ஆடை பற்றிய குறிப்புக்கள் பரவலாகக் கிடைக்கின்றன. பஞ்சினை, வில், எ஼கு ஆகியவற்றால் அடித்துத் தூய்மை செய்திருக்கின்றனர். ஆனால் நெய்தல் தொழில் சார்ந்த பிற புழங்குபொருள்கள் பற்றிய செய்திகள் கிடைக்கப்பெறவில்லை. மரங்கொல் தச்சர்கள் இரும்பால் செய்யப்பெற்ற உளியைத் தச்சுத்தொழிலில் பயன்படுத்தி இருக்கின்றனர். இக்கருவியைக் கொண்டு மரம், யானைத் தந்தம் ஆகியவற்றைச் செதுக்கியிருக்கின்றனர்.

சக்கரத்தைக் கொண்டு மட்கலத்தொழில் செய்வோர் பற்றி இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மட்கலத் தொழிலில் சக்கரம் குறிப்பிடத்தகுந்தது ஆகும். புழங்கு பொருள்களான மட்கலம், புதைக்கும் பெரிய சாடிகள், செங்கற்கற்கள், பல்வேறு மண்பானைகள் போன்றவற்றைச் சக்கரத்தைப் பயன்படுத்திச் செய்திருக்கின்றனர்.

கொல்லுத் தொழிலுக்கு கொல்லுலை, துருத்தி, உலைமூக்கு, அரம், குறடு, சம்மட்டி, உலைக்கல், சாணைக்கல் போன்றவை புழங்கு பொருள்களாகப் பயன்படுத்தப்பெற்றதைப் பண்டை இலக்கியங்கள் குறித்துச் செல்கின்றன. இரும்புத் தாதுக்களை உருக்கும் கொல்லுலை பூமிக்கு அடியில் அமைக்கப்பெற்றிருக்கிறது. தோற்கருவியான துருத்தி நெருப்பின் வெப்பத்தை மிகுதிப்படுத்தப் பயன்பெற்றுள்ளது. துருத்திக்குழாய் இலக்கியத்தில் ‘குருகு’ எனக் குறிக்கப்பெற்றுள்ளது. துருத்தியும், குழாயும் இணையும் இடம் ‘உலைமூக்கு’ என அழைக்கப்பெற்றதாகத் தெரிகிறது. பொதுவாகக் கருவிகளின் நுனிப்பகுதியைக் கூர்மை செய்வதற்கு அரம் என்னும் கருவி உதவியிருக்கின்றது. குறடு என்னும் கருவி சூடாக்கிய உலோகங்களைப் பிடிப்பதற்கும், கரியைத் தீயில் போடுவதற்கும் உரிய புழங்குபொருள் கருவியாக

இருந்திருக்கிறது. குறடு நண்டின் கவைக்கால் போன்று இருபிளவாக அமைந்திருப்பதை இலக்கியங்கள் குறித்துச் செல்கின்றன. சூடாக்கப்பெற்ற இரும்பு உலைக்கல்லில் வைத்து அடிக்கப்பெறுகின்றது. அவ்வாறு அடிக்கப்பயன்படும் கருவி கூடமாகும். இதனை தற்காலத்தில் சம்மட்டி என்றும் அழைப்பர். அக்காலத்தில் கருவிகளைக் கூர்மையாக்கப் பயன்பட்டதை அறிய முடிகின்றது.

வெண்கலம், செம்பு ஆகிய புழங்கு பொருள்கள் இருந்திருக்கின்றன. இவைகளைச் செய்வதற்குப் பயன்படுத்திய கருவிகள் பற்றிய செய்திகள் கிடைக்கப்பெறவில்லை.

பொன் தொழில் செய்பவர்கள் உரைக்கல், அரம் போன்றவற்றைப் பயன்படுத்தியிருக்கின்றனர். பொன்னை உரைத்துப்பார்க்க இந்த உரைகல் பயன்பெற்றதாகத் தெரிகிறது. இதனைக் ‘கட்டளைக்கல்’ என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன.

அரத்தினைக் கொண்டு சங்கினை அறுத்து வளையலாகச் செய்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

நிலம்சார் தொழில்களில் புழங்கப்பெற்ற கருவிகள் குறித்த செய்திகளை இலக்கியங்கள் குறிக்கின்றன. முல்லைநில மக்கள் கால்நடை பேணும் தொழிலை மேற்கொண்டிருந்தனர். இடையர்கள் கால்நடை மேய்க்கச் செல்லும் பொழுது, உறி, தீக்கடைக் கோல், பனையோலைப்பாய், குழல், சிறியகோல், சோறுஎடுத்துச் செல்ல மூங்கில் குழாய் ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளமை தெளிவாகிறது.

வேட்டைத் தொழிலுடன் தொடர்புடைய புழங்கு பொருள்களையும் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. விலங்குகள் மற்றும் பறவைகளைப் பிடிக்க வலையைப் பயன்படுத்தியுள்ளனர்.

வில்லம்பு வேட்டைக்கருவியாகவும், விலங்குகளிடமிருந்து தம்மைப்பாதுகாக்கவும் பயன்பெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. வேட்டைதொழிலுக்கு ஊதுகொம்பும் உதவியுள்ளது. ஆறலைக்கள்வர்கள் பாலை நிலத்தில் தம்தொழிலைச் செய்தனர். இவர்கள் அம்பையும் துடியையும் தம்தொழில் காலத்தில் பயன்படுத்தியுள்ளனர்.

நெய்தல் நிலத்துப் பரதவ மக்கள் மீன்பிடித்தலைத் தலையாய தொழிலாகக் கொண்டிருந்தனர். வலையைப் பயன்படுத்தி சுறாமீன், இறாமீன்களைப் பிடித்திருக்கின்றனர். மீன்பிடிக்க வலையுடன் தூண்டிலையும் பயன்படுத்தியுள்ளனர். தூண்டிலை இலக்கியங்கள் 'கொடுவில் இரும்பு எனக்குறிக்கிறது. எறியுளி என்னும் கருவியைப் பயன்படுத்திச் சுறாமீனைப் பிடித்துள்ளனர். முருக்கப் பெற்ற கயிற்றின் நுனியில் இக்கருவி கட்டப்பெற்று எறியப்பெற்றதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

கடலில் நெடுந்தொலைவு சென்று மீன்பிடிப்பதற்கு திமில், அம்பி, தோணி ஆகிய கருவிகளைப் பரதவர் பயன்படுத்தியுள்ளனர். திமில் என்பது கட்டு மரத்தைக் குறிக்கும். தோணி என்பது ஒரே மரத்தைத் தோண்டி உருவாக்கப்பெறுவதால் பெற்ற காரணப்பெயராகும். இத்தோணி பெரிய மரக்கலங்களில் கரைக்குக் கொண்டுவரப்பெற்ற பொருட்களைச் சிறிய தோணிகளில் எடுத்துச்செல்லப் பயன்பெற்றதாகத் தெரிகிறது. உப்புத்தொழில் செய்பவருக்குப் போக்குவரத்திற்கு வண்டி புழங்குபொருள் வாகனமாக இருந்திருக்கிறது. முத்துக்குளித்தல், சங்கெடுத்தல்

போன்ற தொழில்கள் இலக்கியங்களில் பதிவு பெற்றுள்ளன என்றாலும், அத்தொழிலுக்குரிய புழங்கு பொருட்கள் இடம்பெறவில்லை.

பண்டைத் தமிழரிடம் ஓலைத் தொழில், பொம்மை மற்றும் பாவை செய்தல், சாயப் பாக்கு தயாரித்தல், கயிறு திரித்தல் ஆகிய தொழில்கள் மிகுந்திருக்கின்றன எனினும், அத்தொழிலுக்குரிய புழங்குபொருட்கள் குறித்து செய்திகள் இலக்கியங்களில் பதிவாகவில்லை.

கூடை, ஓலைப்பாய், குடை ஆகியவற்றை பனை, தென்னை மர ஓலைகளால் செய்திருக்கின்றனர். ஓலைக்கூடைக்குக் கொட்டம் என்ற பெயர் இலக்கியத்தில் குறிக்கப்பெறுகின்றது.

பண்டைக்காலத்துச் சிறுவர்கள் கிலுகிலி, மரப்பொம்மைகள், பாவை, கழங்கு, பந்து ஆகியவற்றைத் தாங்களே செய்து விளையாடியிருக்கின்றனர். நெய்தல் நிலத்தில் கிடைத்த முத்துக்களை, கிளிஞ்சலின் உள்ளே இட்டு ஒலியெழுப்பி இருக்கின்றனர். நடை வண்டிகள் சிறு குழந்தைகளுக்கு நடை பழகுவதற்குப் பயன்படுத்தப் பெற்றிருக்கின்றது.

செல்வந்தர்கள் பொன் மற்றும் வைரம், பவளம் ஆகியவற்றைக் கொண்டு செய்யப்பெற்ற யானைப் பொம்மைகளைக் குழந்தைகள் விளையாடக்கொடுத்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. வண்டற்பாவை, பசும்பாவை, மரப்பவை, பஞ்சாய்ப் பாவை, பூந்தாதுப்பாவை, அரக்குப்பாவை, பொன்பாவை ஆகிய பல்வகைப் பாவைகளைச் செய்து கொண்டமையையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

சாயப்பாக்கு, கருங்காலி மரத்தின் காயினைச் சீவிக் காய்ச்சிப் பசிய பாக்குடன் கலந்து தயாரித்திருக்கின்றனர். கயிறு, கன்றுகள் மற்றும் யானைகளைப் பிணிக்கவும், ஆயர் தயிர் கடைவதற்குரிய புழுங்கு பொருளாகவும் இருந்தாலும் அதனை தயாரிக்கப் பயன்படும் கருவி குறிக்கப்பெறவில்லை.

களவுத் தொழிலுக்கு நூலாலாகிய ஏணி பயன்படுத்தப்பெற்றதாகத் தெரிகிறது. கல் சமைப்பதற்கு மூங்கில் குழாயும், சலவைத் தொழிலுக்கு உவர் மண்ணும் பயன்பெற்றுள்ளன.

பண்டைத் தமிழர் போர் வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தனர். தம் பகைவர்மீது போர்த்தொடுக்கவும், பகைவரிடமிருந்து தம்மை தற்காத்துக்கொள்ளவும் போர்க்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியங்களில் வில்லம்பு, எறிகோல் ஆகிய தொலை இலக்குக் கருவிகள் குறிக்கப்பெற்றுள்ளன. வில் சங்க இலக்கியங்களில் சிலை, சாபம், கொடுமரம், வல்வில் ஆகிய சொற்களால் அழைக்கப்பெற்றுள்ளது. வளைத்து நாணேற்றி அம்பு எய்யும்போது முழங்கும் வில் சிலை எனக்குறிக்கப்பெறுகிறது. சாபம் என்ற வில் தேர்மீதிருந்து போர் புரிவதற்கு உதவியுள்ளது.

எய்யும்போது வளையும் கொடுமைமிகு வில் கொடுமரம் எனக்குறிக்கப்பெற்றுள்ளது. போர்க் காலத்தில் இரும்பாலாகிய அம்புகளை வில்லில் பூட்டிப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

பகழி, வாளி, கணை, கோல், அம்பு ஆகிய சொற்கள் அம்பைக் குறிக்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. யானை, குதிரை போன்றவைகளை

அழிக்கும் சூழலில் பகழி குறிக்கப்பெறுகின்றது. செம்மை, கூர்மை, நீட்சி போன்றவற்றை வாளுடன் தொடர்புபடுத்தி வாளி குறிக்கப்பெறுகின்றது. கணையின் தலைகள் இரும்பால் செய்யப்பெற்றதாக இருந்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இது நிரை கவரவும், போரில் யானைகளைத் தொலைக்கவும், வீரர்களை வீழ்த்தவும் பயன்பெற்றுள்ளதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

அம்பு என்பது எல்லை காக்கவும், அரண் அழிக்கவும், யானைகளை எய்து அழிக்கவும், அரண்காக்கவும் பயன்பெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

தொல்காப்பியர் காலத்திலேயே குறிக்கப்பெற்ற வேல் இலக்கியங்களில் எ∴கம், அயில், உடம்பிடி எனக்குறிக்கப்பெற்றிருக்கின்றது. 'உடம்பிடி' என்ற வழக்குப் பெரும்பாணாற்றுப் படையில் மட்டுமே உள்ளது. 'அயில்' என்கிற வேல் கோட்டைச் சுவர்களில் பொருத்தப்பெற்றதாகத் தெரிகிறது. இ∴து இடை அண்மை இலக்குக் கருவி வகையினைச் சார்ந்ததாகும். காம்பு, இலைப்பகுதி என்ற இருபகுதிகள் வேலின் வடிவமைப்பில் காணப்பெறுகின்றது. காம்புப் பிடியானது உள்துளையுடைய இரும்பால் ஆகியிருக்கவேண்டும்.

யானையைத் தாக்குவதற்கும் பகைவர்மேல் எறிவதற்கும் குறிப்பாக நெஞ்சில் பாய்ச்சுவதற்கும் இக்கருவி பயன்படுத்தப்பெற்றிருக்கின்றது.

அணுக்கப்போர் கருவிகளில் வாள்கள், மழு, நவியம் போன்றவை அடங்கும். தொல்காப்பியத்தில் குறிக்கப்பெறும் வாள் சங்க இலக்கியங்களில் எ∴கு, எ∴கம் எனக்குறிக்கப்பெற்றமையை அறியமுடிகின்றது. வாளினைப் பாதுகாக்க உறை இருந்தமையை அறியமுடிகின்றது. கணிச்சி என்ற பெயர் மழுவிற்கு

உண்டு. இது கோடரி வடிவில் காணப்பெறும். இஃது அங்குசமாக இருக்கலாம் என ஊகிக்கமுடிகிறது.

நவியம் என்பதும் கோடரி வடிவில் காணப்பெறுவதாகும். மழுவும், நவியமும் போருக்குப் பயன்படுத்தப்பெற்றதற்கான சான்றுகள் இல்லை.

அரணம், கவசம், கேடயம் ஆகியவை தற்காப்புக்கருவிகளாகும். எழு, சீப்பு, ஐயவி ஆகியவை அரண்காப்புக் கருவிகளாகும். அரண்காக்கும் கருவிகள் குறிப்பாக வாயில் காப்புக் கருவிகள் ஆகும். அவ்வகையில் காப்புக்கருவிகள் தற்காப்புக் கருவிகள், அரண்காப்புக் கருவிகள் என்ற இருவகை என அடையாளம் காணலாம்.

இரும்பால் செய்யப்பெற்றதாகக் கருதப்பெறும் அரணம் அடிபுதை அரணம் என்ற நிலையில் கால் அணியையும், மெய்புதை அரணம் என்ற நிலையில் கவசத்தையும் குறிக்கும். போர்க்காலத்தில் இக்கவசம் பயன்படுத்தப்பெறும். இலக்கியங்களில் புலித்தோலை இணைத்துக் கவசம் செய்தமை குறிக்கப்பெற்றுள்ளது. போர்க்காலத்தில் கவசத்தைப் பயன்படுதியுள்ளனர். இக்கவசம் போர்க்காலத்தில் சிதைக்கப்பெறுவதை இலக்கியங்ககள் பதிவு செய்துள்ளமை குறிக்கத்தக்கதாகும். தோல் என்றும் பலகை என்றும் கேடயம் குறிக்கப்பெறும். யானைத்தோலால் செய்யப்பெற்றது தோல் என்றும், உள்ஞ்த மரத்தால் வேலைப்பாட்டுடன் செய்யப்பெற்றது. பலகை என்றும் அழைக்கப்பெற்றதாகத் தெரிகின்றது. போரில் எதிரிகளிடமிருந்து பாதுகாக்க இக்கருவி பயன்பெற்றுள்ளது. இப்பாதுகாப்பையும் மீறி கணைகள் பாய்ந்மைக்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன.

கதவின் உள்வாயிற்படியில் தடுப்பு மரமாக விளங்கும் எழுவினை இலக்கியம் கணையமரம் என்றும் குறிக்கும். குறிப்பாக நிலத்திலிருந்து கோட்டைக் கதவின் உச்சிவரை உயர்ந்து நிற்கும் மரமாகும். சீப்பு என்பது கதவின் உள்வாயிலில் நிலந்தோய அமைக்கப்பெறும் தாழ்ப்பாள் சீப்பு ஆகும்.

போர்க்காலத்தில் பயன்படுத்தப்பெற்ற இசைக் கருவிகள், வீரக்கழல், அடிபுதை அரணம் ஆகியவை கருதத்தக்கன. தோற்கருவிகளைச் சார்ந்த முரசு, தண்ணுமை, போர்ப்பறை ஆகிய இசைக்கருவிகளும், வளை, வயிர் ஆகிய ஊது கருவிகளும் கருதத்தக்கன. போரை அறிவிக்க, படைகளுக்கு அறிவிக்கவேண்டிய விதிமுறைகளைத் தெரிவிக்க, போர் வெற்றியைக் கொண்டாட முரசு பயன்படுத்தப்பெற்றுள்ளமை குறிக்கத்தக்கது. இம்முரசு வலிமைமிக்க காளையின் தோலால் செய்யப்பெற்றதையும் அறிய முடிகின்றது. போர்ப்பறை முதற்கண் போரின் தொடக்கத்தை அறிவிக்கும். தண்ணுமைப் பறை காஞ்சிப்பூக் கொள்வதற்கும், வீரர்களை ஏவல் செய்வதற்கும் பயன்படும்.

வளை, வயிர் ஆகியவை போர்க்களத்தில் முரசுடன் இணைத்து இசைக்கப்பெற்றதாகத் தெரிகிறது. வளை என்பது சங்கையும், வயிர் என்பது எக்காளம் (அ) ஊதுகொம்பையும் குறிக்கும். போரின் தொடக்கம் மற்றும் இறுதியைச் சங்கின் முழக்கத்தால் தெரிவிக்கின்றனர். வயிர் இசைப்பவர் வயிரியர் (அ) வயிரியமாக்கள் என அழைக்கப்பெற்றதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. தற்காலப் போரில் பயன்படுத்தப்பெறும் உலோகத்தால் இயன்ற ஊதுகொம்பு இங்கு கருதத்தக்கது.

வீரக்கழல் வீரர்களுக்குரிய அணிகலனாகும். வேலைப்பாடு மிக்க இவ்வணிகலன் தோல்வியுற்ற மன்னனின் பொன்முடியை எடுத்து வென்ற மன்னன் செய்ததாகத் தெரிகிறது. தற்காலப் போர்வீரர்கள் அணியும் கணுக்கால் பட்டி கழலோடு இணைத்து ஒப்புநோக்கத்தக்கதாகும்.

செருப்பினின்று வேறுபட்டதாகக் கருதப்பெறும் அடிபுதை அரணம் படை வீரனின் அடிமுழுவதும் மறையுமாறு அணியும் அணியாகும்.

வில்லும், அம்பும் தேர்மீது நின்று போர்புரியும் வீரனுக்கு முக்கியமான படைக்கலனாகும். எனினும் அவர்கள் வாள் பயிற்சியிலும் சிறந்து விளங்கியுள்ளனர். தற்காலத்தில் துப்பாக்கிப் பயிற்சி அடிப்படையாக இருப்பதுபோல் அக்காலத்தில் எல்லாப் படை வீரர்களும் வாள் பயிற்சி அளிக்கப்பெற்றதாகக் கருதலாம்.

வாணிகத் தொழில் இருவகையில் அமையும் ஒன்று உள்நாட்டு வாணிகம், இரண்டு வெளிநாட்டு வாணிகம் ஆகும். உள்நாட்டு வாணிகத்தில் போக்குவரத்திற்கு வண்டி, படகு, எருமை, கழுதை ஆகியவை பயன்படுத்தப்பெற்ற நிலையை அறியமுடிகிறது. உள்நாட்டு வாணிகத்தில் பண்டமாற்றுமுறை இடம்பெற்றிருந்தது. அஃதாவது விளைபொருளுக்கு விளைபொருளை மாற்றியதோடு வேறு பொருள்களையும் மாற்றியிருக்கிறார்கள். வெளிநாட்டு வாணிகத்தில் யவனர்கள் பொன்னைக் கொடுத்துப் பண்டமாற்றை நடத்தியிருப்பதை இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது.

கடற்கரைத்துறைமுகத்தில் கலங்கரை விளக்கம் இடம்பெற்றிருந்தது. காவிரிப்பூம்பட்டினத்தில் மட்டும் குதிரை, மிளகு, மணி, பொன், அகில், முத்து,

ஆரம், துகில் ஆகியவை ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களாக இருந்திருக்கின்றன. பண்டகச்சாலையில் பண்டங்களுக்குப் புலிமுத்திரைகள் இடம்பெற்றால்தான் பொருள்கள் வெளியேறமுடியும்.

புலிமுத்திரைப் புழங்குபொருள் இங்குப் பயன்படுத்தப் பெற்றதை அறியலாம். நாளங்காடி, அல்லங்காடியில் விற்பனைப் பொருளுக்கு கொடிநாட்டப்பெற்றிருக்கும் நிலையில் கொடியின் புழங்குபொருள் தன்மையை உணரலாம்.

பண்டைத் தமிழர் பலவகைக் கலைகளில் சிறந்திருந்தாலும் அக்கலைகளுக்குரிய புழங்கு பொருள் குறித்த செய்திகள் விரிவாகக் கிடைக்கவில்லை. இதனைத் தனித்த ஆய்வுநிலையில் சிந்திக்கப்பெறுவது பயன் உடைய முயற்சியாகும்.

வாழ்விற்கும் மனதிற்கும் பயனளிக்கும் சமயம் குறித்து பல்வேறு அறிஞர்கள் பலவகை விளக்கங்களைத் தருவார்கள். சமயத்திற்கும் சடங்கிற்கும் நெருங்கிய தொடர்புண்டு. இந்தியர் மொழியால் வேறுபட்டிருப்பினும் தொன்மையான இந்து சமயத்தால் ஒற்றுமை பெற்றிருப்பதை அறிஞர்கள் சுட்டுகின்றனர். தமிழர் சமயம் திராவிடச் சமயமாகும். அச்சமயம் தனித்தன்மைகளை இழக்காமல் இந்து சமயத்துடன் இணைந்தநிலை கருத்திற்குரியதாகும்.

தமிழர்களின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் திணைகளை மையமிட்டு தெய்வங்கள் வரையறுக்கப்பெற்றுள்ளன. கருப்பொருளில் தெய்வம் குறித்த நிலை கருத்திற்குரியதாகும். சங்க இலக்கியங்களில் கோயில், தெய்வம் வழிபாட்டு நிலை குறித்த செய்திகள் பரவலாகப் பதிவாகியுள்ளன. இறைவழிபாட்டில் வழிபாட்டிற்கும் சடங்கிற்கும் நெருங்கிய தொடர்புண்டு. சமயத்தில்

மட்டுமின்றி மனித வாழ்விலும் சடங்குகள் பண்பாட்டு மதிப்பைப் பெற்றுள்ளன. சமயம் சார்ந்த புழங்குபொருள்களை இறைவனோடு தொடர்புடையன, வழிபாட்டுடன் தொடர்புடையன என இருவகைப்படுத்திப் பார்க்கலாம்.

இறைவனோடு தொடர்புடைய புழங்குபொருள்களில் ஆடை, ஆபரணம், கொடி, ஊர்தி ஆகியன இவ்வியலில் கருத்தில் கொள்ளப்பெற்றன.

சிவனைப் பண்டைத் தமிழர் நிலத் தெய்வமாக ஏற்றுக்கொள்ளவில்லை. சிவன் தோலாடை குறிப்பாக 'மான்தோலை' அணிந்திருப்பதாகவும், கணிச்சி, மழு, முத்தலைச் சூலம் ஆகிய கருவிகளைப் பெற்றிருப்பவராகவும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ஆனேற்றுக் கொடியையும் விடையையும் உடையவன்.

திருமால் ஆதிசேடனைப் பாம்புப் படுக்கையாகக் கொண்டவன். திருமால், கலப்பை, தண்டு, சங்கு, சக்கரம், வில், அம்பு, பாரவளை, வாள் ஆகியவற்றை ஏந்தியிருப்பதாகவும், கருடக் கொடியை உடையவனாகவும் கூறப்பெற்றிருப்பது கருதற்குரியதாகும்.

முருகன் 'முருகு' என்று பண்டை இலக்கியங்களில் குறிக்கப்பெறுகின்றான். காதில் மகரக் குண்டலங்களையும், பன்னிரு கைகளிலும் தோட்டி, பரிசை, வேற்படை, மணி ஆகிய கருவிகளை ஏந்தியிருப்பதாகவும் குறிப்புக்கள் கிடைக்கின்றன. முருகனுக்குரிய ஆடை செந்துவராடையாகும். கோழிக் கொடியைத் தனக்குரிய கொடியாகப் பெற்றிருக்கின்றான். வச்சிராயுதத்தைக் கையில் ஏந்தியவனாகக் குறிக்கப்பெறுகின்றான். மற்ற பல தெய்வங்கள் குறிக்கப்பெற்றாலும் தொடர்புடைய புழங்குபொருட்கள் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

வழிபாட்டுடன் தொடர்புடைய புழங்குபொருட்களில் நடுகல் முக்கியமானதாகும். நடுகல்லில் பெயர் எழுதி பீடும் எழுதி பீலியை வைத்து வழிபட்டிருக்கின்றனர். இவ்வழிபாட்டில் துடி என்னும் இசைக்கருவி தொடர்பு பெற்றிருக்கின்றது. விழாக் காலங்களில் கொடியேற்றுதல் நிகழ்ச்சியில் கொடிமரமும், முழவு, யாழ், முரசு, குழல் ஆகிய இசைக்கருவிகளும் தொடர்புடைய புழங்கு பொருட்களாகப் பண்டை இலக்கியங்கள் சுட்டுகின்றன. விழா நாட்களில் தழையுடையையும், பல அணிகளையும் மக்கள் அணிந்திருக்கின்றனர்.

பொன்னாலாகிய சங்கு, நண்டு, இறகு, வாளை ஆகியவற்றைப் புதுப்புனலில் இட்டு புனலாடு விழாவைக் கொண்டாடியிருக்கின்றனர். அவ்வகையில் அவை பிரார்த்தனைக்குரிய புழங்கு பொருள்களாக இருப்பதைக் காணலாம்.

கார்த்திகை விழாவில் விளக்கு என்கிற புழங்குபொருள் முதலிடம் பெறுகிறது. வெறியாட்டில் குறத்தி குறிசொல்லும்போது முறத்தைப் பயன்படுத்தியிருக்கின்றாள். வேலன் வெறியாடும் போது கழற்காயை மெய்யில் அணிந்திருக்கின்றான். தினையையுடைய பிரம்பு வழிபாட்டில் தொடர்புபெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

வெறியாட்டு வழிபாட்டு மரபில் நெய், வெண்சிறுகடுகு, பொரி, குருதிதோய்ந்த அரிசி, பிரம்பு, மஞ்சள், சந்தனம், செவ்வலரிமாலை, மலர்கள், தூபம், குருதிதோய்ந்த தினை, வாச்சியங்கள் ஆகியவை தொடர்புடைய புழங்குபொருட்களாக இடம்பெற்றுள்ளன.

சடங்குகள் சார்ந்த புழங்கு பொருள்கள் வாழ்வியல் சார்ந்தவை, தொழில் சார்ந்தவை என்று இரண்டு பகுப்புக்களில் சுட்டப்பெற்றுள்ளது. வாழ்வியல் சடங்குகளில் பிறப்புச் சடங்கு, தாலிகளைதல், மடலேறுதல், சிலம்புகழி நோன்பு, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு என்ற வகைகளை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

பிறப்புச் சடங்கில் வெண்சிறு கடுகு பயன்பெற்றுள்ளது. மன்னர்கள் பிறந்தநாள் கொண்டாடும் பொழுது வெண்மையான ஆடையை அணிந்திருக்கின்றனர்.

குழந்தைகளுக்கு வீரத்தின் அறிகுறியாகவும் மற்றும் பாதுகாப்பு, நம்பிக்கை அடிப்படையிலும் புலிப்பல் தாலி, ஐம்படைத்தாலி ஆகியவற்றை அணிந்திருக்கின்றனர்.

பனைமடலால் ஆகிய குதிரையைத் தலைவி கிடைக்காத நிலையில் தலைவன் பிறருக்குப் புலப்படுத்த மேற்கொண்டிருக்கின்றான். சிலம்புகழி நோன்பில் ‘சிலம்பு’ என்கிற அணிகலன் புழங்கு பொருளாக இடம்பெறுகின்றது.

திருமண நிகழ்ச்சியில் விளக்கேற்றி வழிபட்ட நிலையில் விளக்கும், முரசும் பயன்பெற்றுள்ளது. புனித நீராட்டில் தண்ணீர்குடம், சிறுமண்டை, பூவிதழ், நெல்மணி ஆகியவை புழங்குபொருளாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

எருமைப் பேட்டின் கொம்பை நட்டுச் செய்யும் திருமணம் கலித்தொகையில் மட்டும் சுட்டப்பெற்றுள்ளது.

இறப்புச்சடங்கில் இறந்தவர்களின் உடலினை வைப்பதற்கு தாழி பயன்பெற்றதை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

நோய்வாய்ப்பட்டு இறந்தவர்களை வாளால் பிளந்து அடக்கம் செய்துள்ளனர். இங்கு வாள் என்னும் புழங்குபொருள் பயன்பெற்றுள்ளது.

இறப்பு நிகழ்ச்சியில் சாக்காட்டுப் பறை, பாடை, தருப்பைப்புல் படுக்கை ஆகிய பொருட்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

கலம், தாழி, கவி செந்தாழி, ஈமத்தாழி, தாழிய பெருங்காடு, முதுமக்கட்தாழி, மன்னர் மறைத்த தாழி போன்றவை ஈமத்தாழியை குறிக்கும் தொடர்களாகச் சங்கஇலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

அந்தணர் வேள்விச் சடங்கின்போது கரகத்தைப் பயன்படுத்தியிருக்கின்றனர். வேள்விச் சடங்கில் நெடிய கம்பம் பயன்படுத்தப்பெற்றிருக்கின்றது. வேள்வி செய்பவர் முக்கோலை பயன்படுத்திய செய்திகள் இடம்பெற்றமையைக் காணமுடிகிறது.

பண்டைத் தமிழரின் வாழ்வியலின் எச்சங்கள் நாகரிகம் அடையாத நாட்டுப்புற வாழ்வியலில் எச்சங்களாக இருப்பதை அறியலாம். அவ்வகையில் பண்டைத்தமிழ் இலக்கியங்களின் வழி அறியலாகும் புழங்கு பொருட்கள் நாட்டுப்புற இலக்கியங்களில் பதிவாகியுள்ள புழங்கு பொருட்களுடன் இணைத்து நோக்கப்பெறும் முயற்சி மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

இல்லம் சார்ந்த புழங்கு பொருட்கள் பல பண்டைத் தமிழரிடமும் நாட்டுப்புற மக்களிடமும் இணைந்து வருதலைக் காணமுடிகிறது.

கல்லால் ஆனவைகளில் உரல் நாட்டுப்புற இலக்கியங்களிலும் சங்க இலக்கியங்களிலும் குறிக்கப்பெற்றுள்ளது. அம்மி பண்டைக்காலத்தில் இருந்ததா? என்பது ஆய்விற்குரியது.

மண்ணால் இயன்ற பொருள்களாகிய குழிசி, மிடா, குடம் பற்றிய செய்திகள் பண்டைத்தமிழரிடம் இடம்பெற்றிருந்ததைப் போல நாட்டுப்புற இலக்கியங்களிலும் பதிவாகியுள்ளன. நாட்டுப்புறத்தில் குழிசி என்பது பானையென வழங்கப்பெறுகிறது.

பெரிய பானையை நாட்டுப்புற மக்கள் 'மிடா' எனக்குறிப்பதை அறியமுடிகின்றது. குடிநீர் எடுப்பதற்கும், குளிப்பதற்குரிய நீர் எடுப்பதற்கும் நாட்டுப்புறத்தில் குடம் பயன்படுவதை நாட்டுப்புற இலக்கியங்கள் சுட்டுகின்றன. பால்குடம் தற்போது சமயம் சார்ந்த 'பால்குடம்' என்ற வகையில் புழங்குபொருளாக இருப்பதையும் அறிய முடிகிறது.

இயற்கையோடு இணைந்த வாழ்வை மேற்கொண்டிருந்த பண்டைத் தமிழர்கள் இலை, நார், மரம் ஆகியவைகளால் ஆன புழங்குபொருட்களை மிகுதியாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். நாட்டுப்புறத்தில் வாழையிலை, தேக்கிலை உணவுப்பொருள் வைப்பதற்கும் குறிப்பாக விருந்துக்காலங்களில் தொடர்பு பெறுவதையும் அறியமுடிகிறது.

பண்டைத் தமிழரிடம் வட்டில், கடகம் புழகத்தில் இருந்தன. வட்டில் நாட்டுப்புற இலக்கியங்களில் குறிக்கப்பெறும். ஓலைப்பெட்டியுடன் தொடர்புபடுத்திப்பார்க்கலாம். பண்டைத்தமிழரிடம் இருந்த கூடை தற்காலத்திலும் பனை, தென்னை ஆகியவற்றால் செய்யப்பெற்ற நிலையைக் காணலாம். நாட்டுப்புறத்தில் கைவினைத் தொழில்களாக அவைகள் உள்ளன.

பண்டைத் தமிழர் குறித்த 'பறி' என்னும் பாய் நாட்டுப்புற இலக்கியத்தில் மிகுதியாகச் சுட்டப்பெறுகின்றது. ஓலை மற்றும் ஒரு வகைக் கோரைப் புற்களைக் கொண்டு நாட்டுப்புறக் கைவினைஞர் பாய்த்தொழில் செய்கின்றனர்.

மரத்தால் ஆன புழங்குபொருள்களில் மரஉரல், உலக்கை போன்றவைகள் பண்டைத்தமிழரிடமும் இருந்திருக்கின்றன. தற்போது நாட்டுப்புற வாழ்வியலிலும் இடம் பெற்றிருக்கக் காணலாம். பண்டைக் காலத்தில் 'அம்பணம்' எனக்குறிக்கப்பெறும் மரத்தால் ஆன அளவைக் கருவி தற்போது 'மரக்கால்' என நாட்டுப்புறத்தில் குறிக்கப்பெறுகிறது.

உலோகப் புழங்குபொருட்களில் விளக்கு, ஊசி ஆகியவை மட்டும் நாட்டுப்பாடல்களில் குறிக்கப்பெறுகின்றன. நாட்டுப்புறத்தில் காணப்பெறும் செப்பு, செப்புக்குடம் ஆகியவை கருதத்தக்கன.

போர்த்தொழில், கலையியல் தொழில் ஆகியவை குறித்த புழங்கு பொருள் பற்றிய செய்திகள் நாட்டுப்புறப்பாடல்களில் அவ்வளவாகப் பதிவாகவில்லை. பண்டைத்தமிழர் போர்த்தொழிலில் முதன்மை பெற்றிருந்தனர். தற்போது அந்நிலை மாற்றம் பெற்றிருப்பது இங்கு கருத்திற்குரியதாகும்.

வாழ்வியல் தொழில் வகைகளில் கைத்தொழில் கருதத்தக்கது. இவ்வகையில் பயிர்த்தொழிலும் அடங்கும். பண்டைத் தமிழரின் நாஞ்சில் நாட்டுப்புறத்தில் கலப்பை, மேழி, ஏர் எனக்குறிக்கப்பெறுவது கருதத்தக்கதாகும். பண்டைத்தமிழரிடம் இருந்த தளம்பு - தற்போது பரம்பு என்றும், ஆம்பி, கிழார் ஆகிய நீர் இறைக்கும் கருவிகள் இறைவாய்ப் பெட்டி என்றும், துளர் களைக்கொட்டு என்றும் வழங்கப்பெறுவது கருதத்தக்கதாகும்.

விளைந்த பயிர்களைப் பறவைகளிடமிருந்தும் விலங்குகளிடமிருந்தும் பாதுகாக்க பல கருவிகள் பண்டைத் தமிழரிடம் இருந்தது போல நாட்டுப்புற மக்களிடம் இல்லை. வில், கிலுக்கு, பிரம்பு போன்ற சில கிளிகடி கருவிகள் மட்டும் தற்போது நாட்டுப்புற மக்களிடம் வழக்கில் உள்ளன. விளைந்த பயிர்களை அறுப்பதற்குரிய அரிவாள் தற்போது நாட்டுப்புறத்தில் கதிர் அறுவாள் எனக்குறிப்பெறுகிறது.

நெசவுத் தொழில், கொல்லுத் தொழில் குறித்த செய்திகள் நாட்டுப்புறப்பாடல்களில் குறைவாக பதிவாகியுள்ளன. அரம், உளி குறித்த செய்திகள் பண்டை இலக்கியத்திலும் நாட்டுப்புற இலக்கியத்திலும் குறிக்கப்பெறுகின்றன.

நிலம்சார் தொழில்களில் அடங்கும் வேட்டையாடுதல், மீன்பிடித்தலில் தற்போது, மீன் பிடிகருவிகளான வளை, தூண்டில் ஆகியவை மட்டும் நாட்டுப்புற இலக்கியங்களில் குறிக்கப்பெறுகின்றன. தற்போதைய வாழ்க்கையில் வேட்டையாடுதல் குறிப்பிடத்தகுந்த தொழிலாக இல்லை என்பது கருதத்தக்கதாகும்.

பண்டைத்தமிழர் பனை மற்றும் தென்னையோலைகளைப் பயன்படுத்தியதைப் போலவே நாட்டுப்புறத்தில் ஓலையைப் பயன்படுத்தி, பொம்மை மற்றும் பலவகைப் பயன்படுபொருள்கள் செய்கிற நிலைமையை ஆய்வின் வழி உணரமுடிகிறது.

நாட்டுப்புற இலக்கியங்களில் போர்குறித்த புழங்குபொருள்களில் அம்பு, வில், ஈட்டி போன்றவை பதிவாகியுள்ளன. போர்க்கருவிகள் இடம்பெறாமைக்குப் போர்வாழ்க்கை மாறிய சமூகநிலை காரணமாகும். எனினும், புராணக்கதைப்பாடல், வரலாற்றுக்கதைப் பாடல்களில் மிகுதியாகப் போர்க்கருவிகள் இடம்பெற்றிருக்க வாய்ப்புண்டு.

பண்டை இலக்கியங்களில் வாணிகம் மற்றும் கலையியல் புழங்கு பொருள்கள் மிகுதியாக இல்லாத நிலையை நாட்டுப்புற இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் பெருந்தெய்வங்களுக்குரிய ஆடை,ஆபரணம், கருவி, கொடி, ஊர்தி ஆகியவை குறித்த செய்திகள் இடம்பெற்றிருப்பதைப் போல, சிறு தெய்வ வழிபாடு தொடர்புடைய செய்திகள் இடம்பெறவில்லை. முருகனைப் பற்றிய சில செய்திகள் மட்டுமே நாட்டுப்புற இலக்கியங்களில் பெருந்தெய்வநிலையில் பதிவாகியுள்ளன. பண்டைத்தமிழரிடம் செல்வாக்குப் பெற்றிருந்த தமிழ்த் தெய்வம் நாட்டுப்புறவாழ்வியலிலும் இடம்பெற்றிருக்கும் நிலை கருத்திற்குரியது.

சிறுதெய்வ வழிபட்டுடன் தொடர்புடைய கதைப்பாடல்கள் போன்றவற்றை ஆய்வு செய்தால் நாட்டுப்புறச் சமயப் புழங்கு பொருள்கள் குறித்த செய்திகள் கிடைக்க ஏதுவாகலாம்.

நாட்டுப்புற இலக்கியத்தில் வாழ்வியலுடன் தொடர்புடைய சடங்கு சார்ந்த புழங்கு பொருட்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. குறிப்பாக இறப்பு மற்றும் திருமணச் சடங்குகளைக் குறிப்பிடலாம். திருமணச் சடங்கில் நாட்டுப்புறமக்கள் பயன்படுத்தும் சேகண்டி, மல்லாரி, திமிர்தாளம், பம்பை ஆகியவை பண்டைத்தமிழரிடம் இருந்தனவா? என்பது ஆய்விற்குரியதாகும். திருமணச் சடங்கில் இசைக்கருவிகள் இடம்பெறும் நிலை சங்ககால வாழ்வியலிலும் நாட்டுப்புற வாழ்வியலிலும் காணக்கூடியனவாகும்.

இறப்புச் சடங்கில் நாட்டுப்புற மக்களிடம் உருமி, சங்கு, பாடை ஆகிய புழங்குபொருள்கள் தொடர்பு பெறுகின்றன. பண்டைத்தமிழ் இலக்கியத்தில் சாக்காட்டுப்பறை, பாடை, தர்ப்பைப்புல் இடம் பெற்ற நிலை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். 'இசைத்தல்' என்கிற நிலை ஒன்றுபட்டாலும் கருவிகள் வேறுபடுகின்றன.

நாட்டுப்புற இலக்கியத்தில் தொகுக்கப்பெற்ற நாட்டுப்புற பாடல்களில் தொகுப்பு மட்டுமே ஆய்விற்கு இவ்வியலில் மேற்கொள்ளப்பெற்றது. கதைப்பாடல்கள், கதைகள், பழமொழிகள் போன்றவைகளையும் கள ஆய்வுச் செய்திகளையும் பயன்படுத்தினால் புழங்குபொருட்கள் குறித்த ஒப்பு நிலை ஆய்வு முழுமையானதாக அமையும்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. காசி விசுவநாதன் செட்டியார் வெ.பெரி.பழ.மு. (வெ.ஆ.) - அகநானூறு களிற்றியானை நிரை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1. 1947.

2. மேற்படி - அகநானூறு மணிமிடைபவளம் திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை - 1. 1947.

3. மேற்படி - அகநானூறு நித்திலக்கோவை திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1. 1947.

4. மேற்படி - கலித்தொகை திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1. 1947.

5. சாமிநாதையர், உ.வே. (உ.ஆ.) - குறுந்தொகை மூலமும் உரையும் கபீர் அச்சுக்கூடம், சென்னை. 1955.

6. மேற்படி (ப.ஆ.) - புறநானூறு மூலமும், உரையும்
உ.வே. சாமிநாதையா் நூல் நிலையம்,
சென்னை - 41.
1974.

7. மேற்படி (ப.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும்
நச்சினார்கினியர் உரையும்
உ.வே. சாமிநாதையா் நூல் நிலையம்,
சென்னை - 41.
1974.

8. சோமசுந்தரனாா பொ.வே. (உ.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
முதற்பகுதி
திருமுருகாற்றுப்படை, 1962.
பொருநாராற்றுப்படை 1961.
சிறுபாணாற்றுப்படை, 1960.
பெரும்பாணாற்றுப்படை, 1962.
முல்லைப்பாட்டு, 1962.
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்.
சென்னை, 1971.

9. மேற்படி - பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
இரண்டாம் பகுதி
மதுரைக்காஞ்சி - 1956.
நெடுநல்வாடை - 1975.
குறிஞ்சிப்பாட்டு - 1956.
பட்டினப்பாலை - 1967.
மலைப்படுகடாம் - 1956.
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
சென்னை - 1,
1971.

10. மேற்படி - ஐங்குறுநூறு
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
சென்னை.
1966.

11. மேற்படி - பரிபாடல்
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
சென்னை
1669.

12. துரைச்சாமிப்பிள்ளை ஔவை.சு (உ.ஆ.) - புறநானூறு 1-200 பாட்டுக்கள்
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்
சென்னை.
1967.

13. மேற்படி - புறநானூறு 201 - 400 பாட்டுக்கள்
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்
சென்னை.
1962.

14. மேற்படி - நற்றிணை மூலமும் விளக்க உரையும்
(1 முதல் 200 வரை)
அருணா பப்ளிக்கேஷன்ஸ்,
சென்னை - 17.
1966.

15. மேற்படி - நற்றிணை மூலமும் விளக்கவுரையும்
201 முதல் 400 வரை
அருணா பப்ளிக்கேஷன்ஸ்
சென்னை - 1.
1968.

16. மேற்படி - பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும்
திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை - 1.
1968.

17. நாராணயசாமி ஐயர் .அ, - நற்றிணை நானூறு,
மறுபதிப்பு திருநெல்வேலி
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 1.
1952.

18. வேங்கடராமன் .எச் (ப.ஆ.) - நற்றிணை மூலமும் உரையும்
உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை - 90.
1989.

----

துணைமைச்சான்றாதாரங்கள்


1. அகத்தியலிங்கம் .ச, - சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600108.
1997.

2. அருள்ராசு .வே.சா., - பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005
2000

3. அறவாணன் .க.ப. - அற்றைநாட் காதலும் வீரமும்
பாரிநிலையம், சென்னை.
1978.

4. அன்னி தாமசு - தமிழர் கொடிகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600113.
2000.

5. ஆளவந்தார் .ஆர் - தமிழர் தோற்கருவிகள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
அடையாறு, சென்னை - 20.
1981.

6. இராகவன் .அ - தமிழ்நாட்டு அணிகலன்கள்
கலைநூற் பதிப்பகம்,
பாளையங்கோட்டை,
திருநெல்வேலி - 2.
1971.

7. இராசமாணிக்கனார் .மா - பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1970.

8. மேற்படி - தமிழர் திருமணத்தில் தாலி
செல்வி பதிப்பகம்
காரைக்குடி.
1955.

9. கந்தசாமி .இல.செ., - தமிழர் வேளாண்மை மரபுகள்
கலைச்செல்வம் பதிப்பகம்,
16, சாஸ்திரி தெரு,
பாப்பநாயக்கன் புதூர்,
கோயமுத்தூர் - 641 041.

10. காந்தி .க, - தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 20.
1980.

11. கைலாசபதி .க, - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
மக்கள் வெளியீடு,
சென்னை - 600 002.

12. கோதண்டராமன் .மா - வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள்
சென்னை - 600 004.
1988

13. கடிகாசலம் ந. பாலாஜி .பு (ப.ஆ.) - சங்கச் சமூகம்
அமுதநிலையம் லிமிடெட்,
சென்னை - 600014.

14. சண்முகசுந்தரம் .சு. - திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு
காவ்யா, பெங்களூர்,
1986.

15. சசிவல்லி .வி.சி. - பண்டைத்தமிழர் தொழில்கள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.
1989

16. தங்க கந்தசாமி, மேஜர். - போரியல் அன்றும் இன்றும்
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.
1987.

17. தட்சிணாமூர்த்தி .அ, - தமிழர் நாகரிகமும், பண்பாடும்
தஞ்சாவூர்.
1973.

18. திருநாவுக்கரசு .க.த - தமிழ்ப்பண்பாடு
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.
2001.

19. திருவள்ளுவர் - திருக்குறள்
பரிமேலழகர் (உ.ஆ.),
கழக வெளியீடு, சென்னை.
1982.

20. தேவநேயன் .ஞா - பழந்தமிழ் ஆட்சி
கழக வெளியீடு,
சென்னை - 1.
1961.

21. பகவதி .கே, - தமிழர் ஆடைகள்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 020.
1980.

22. பக்தவச்சல பாரதி .சீ - தமிழர் மானுடவியல்
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம் - 608 001.
2002.

23. பக்தவச்சல பாரதி .சீ - பண்பாட்டு மானுடவியல்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 001.
1990.

24. பாரதியார் - பாரதியார் கவிதைகள்
சக்தி வெளியீடு
சென்னை - 5.
1957.

25. பழனிச்சாமி .செ - புறநானூற்றில் தமிழர் பண்பாடு
வாணி பதிப்பகம்,
கோவை - 641 011.
1989.

26. பாலசுப்பிரமணியன் .இரா - அத்வைதமும், தேசியமும்
சக்தி பதிப்பகம்,
16/2, சுப்பிரமணியபுரம் 2-ம் வீதி,
வடக்கு விரிவாக்கம்,
காரைக்குடி - 2.
1999.

27. பாலசுப்பிரமணியன் .கு.வெ. - சங்க இலக்கியத்தில் கலையும், கலைக்கோட்பாடும்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113
1998

28. லூர்து .தே - நாட்டார் வழக்காற்றில் சில அடிப்படைகள்
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை.
1997.

29. வரதராசன் .வெ - தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.
1986.

30. வானமாமலை .நா, - தமிழர் நாட்டுப்பாடல்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை - 2.
1964.

31. வித்தியானந்தன் .சு - தமிழர் சால்பு
சென்னை,
1971.

32. வேங்கடசாமி .சீனி - பழங்காலத் தமிழர் வாணிகம், (சங்ககாலம்) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 98.

33. வையாபுரிப்பிள்ளை .எஸ் - தமிழர் பண்பாடு, சென்னை. 1968.

## இலக்கணநூல்கள் :

1. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பியம், பொருளதிகாரம் கழக வெளியீடு 1969.

2. சுப்பிரமணியன் .ச.வே. - தொல்காப்பியம் (தெளிவுரை) மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை - 108. 1998.

## அகராதி & கலைக்களஞ்சியம்

1. அவினாசிலிங்கம் .தி.சு. (பதி.1958) - கலைக்களஞ்சியம் (ஐந்தாம் தொகுதி) தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை. 1956.

2. திவாகரமுனிவர் - சேந்தன் திவாகரம் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1. 1958.

3. பிங்கலமுனிவர் - பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு
கழக வெளியீடு
சென்னை, 1968.

4. அருணாசலம் .ப (மு.ப.ஆ) - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்
1988.

5. இராமனாதன் .பி - இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,
இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இந்தியன் ஸ்டடீஸ்,
சென்னை - 600 002.
1909.

6. கந்தையா .ந.சி. - செந்தமிழ் அகராதி
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.

7. பழனி அரங்கசாமி (மு.ப.ஆ) - பெருஞ்சொல்லகராதி
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1992.

8. மதிவாணன் .இரா (மு.ப.ஆ.) - செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 113.

9. ---------------------- - வாழ்வியல் களஞ்சியம்
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1986.

10. ---------------------- - மதுரை தமிழ்ப் பேரகராதி,
முதற்பாகம்.

11. ---------------------- - கிரியாவின் தற்காலத் தமிழ்
அகராதி
1994.

12. ---------------------- - தமிழ் அகராதி **(Tamil Lexicon)**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1938.

ஆங்கில நூல்கள் :

1. **Herskovits .F,** - **Cultural anthropology**
Oxford & IBH Publishing Co.,
Pvt. Ltd.,
New Delhi.
1974.

2. **Subramanian .V.I.** - **Index of Puranaanuru**
Department of Tamil,
University of Kerala,
Kerala.
1962.

3. -------------------- - **The New Encylopaedia Britannica**
Willam Benton Publishers,
London.
1981.

4. -------------------- - **Encyclopaedia Americana**
Americana Corporation,
New York, 1970.

-----

# பின்னிணைப்பு - 1

## புழங்குபொருட்கள் அகரவரிசை

### அ) இல்லம் சார்ந்த புழங்குபொருட்கள்

1. அகல்
2. அம்பணம்
3. ஆம்பலிலை
4. உரல்
5. உலக்கை
6. ஊசி
7. எஃகு
8. ஓலைக்குடை
9. கறவைக்கலம்
10. கன்னல்
11. காழ்
12. குடம்
13. குழிசி
14. சாடி
15. செப்பு
16. தசும்பு
17. தாலம்
18. திரிமரம்
19. தேக்கிலை
20. நெற்கூடு

21. பசும்பொன்மண்டை

22. பறி

23. பனையோலை

24. பிழா

25. மண்டை

26. மணிக்கலம்

27. மத்து

28. மயிற்குறை கருவி

29. மிடா

30. வட்டில்

31. வள்ளம்

32. விளக்கு

33. வெள்ளிக்கலம்.

## ஆ) தொழில்சார்ந்த புழங்குபொருட்கள்

1. அடார்
2. அடிபுதையரணம்
3. அம்பி
4. அம்பு
5. அரணம்
6. அரம்
7. அரக்குப்பாவை
8. அரிப்பறை
9. ஆம்பி
10. உரைகல்
11. உலைக்கல்
12. உலைமூக்கு
13. உவர்மண்
14. உளி
15. உறைவாள்
16. ஊதுகொம்பு
17. எழு
18. எறிகோல்
19. எறியுளி
20. ஐயவி
21. ஓலைப்பாய்
22. கணை
23. கயிறு
24. கரும்பு - அரவை இயந்திரம்
25. கவசம்

26. கவண்கல்
27. கழுதை
28. கிலிகிலி
29. கிழார்
30. குடை
31. குயம்
32. குளிர்
33. குறடு
34. குறுந்தடி
35. கூடை
36. கேடயம்
37. கொடுமரம்
38. கொல்லுலை
39. கோல்
40. சம்மட்டி
41. சாணைக்கல்
42. சாபம்
43. சிலை
44. சீப்பு
45. ஞெகிலி
46. தட்டை
47. தண்ணுமை
48. தழல்
49. தளம்பு
50. தீமில்
51. துருத்தி

52. துளர்

53. தூண்டில்

54. தொண்டகச்சிறுபறை

55. தோணி

56. நவியம்

57. நாஞ்சில்

58. நூலேணி

59. பகழி

60. பசும்பாவை

61. பஞ்சாய்ப்பாவை

62. படகு

63. பறிகள்

64. பூந்தாதுப்பாவை

65. பொன்பாவை

66. போர்ப்பபறை

67. மரக்கலங்கள்

68. மரப்பாவை

69. மரப்பொம்மைகள்

70. மழு

71. முரசு

72. வண்டற்பாவை

73. வண்டி

74. வல்வில்

75. வலைகள்

76. வயிர்

77. வளை

